கடவுள் துணை.

# சர்வசமயசமரசக்

# கீர்த்தனைகள்.

இவை

மாயூரம் மாஜிமுன்சீப்

ச. வேதநாயகம்பிள்ளை

அவர்களால்

இயற்றப்பட்டு.



காரைக்கால்,

காசிம்ராவுத்தர்யவர்கள்

பதிப்பித்தபிரதிக்கிணங்க

சென்னை

பூமாதுவிளக்கஅச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1887

கடவுள் துணை.

# சர்வசமய சமரசக்கீர்த்தனைகள்.

## க. இராகம்-தேவகாந்தாரி-ஆதிதாளம்.

### பல்லவி.

எக்காலமும் உன்தன் பொற்கால்பணிந்துகொண்
டிருக்கநீவரம் அருள்வாய். எக்கால

### அநுபல்லவி.

தக்கோர் அபிமான ஞானசீலா
சகலபுவனரக்ஷகாநுகூலா. எக்கால

### சரணங்கள்.

க. சந்தமேவுபிர பந்தமாலைபாடி
கந்தமார்உன்அரவிந்தபாதஞ்சூடி
வந்தனுதிகள் அநந்தமேசொலி
விழுந்துபூமியில் எழுந்துநைந்துருகி எக்கா

உ. துங்கசாதுஜன சங்கமோடுகூடி
பொங்குஞ்ஞான அகளங்கவாரிஆடி
அங்கமேபரவ சங்கொளப்பலப
தங்களோடுசுப மங்களங்கள்சொலி எக்கா

ங. பழுதிலாதுதினம் முழுதும்உன்னைநாடி
தொழுதுநேசமுடன் அழுதுபாடிஆடி
ஒழுகுசெந்தழலின் மெழுகுபோலமனம்
இளகியேஅதிக புளகிதாங்கமுடன் எக்கா

ச. பூதலம்பரவு பாதவேதநாதா
சாததஞ்செய்யும் அபேதநீததாதா
போதநாயகனே பூதநாயகனே
நீதநாயகனே வேதநாயகனே. எக்கா

## உ. இராகம்-துசாவந்தி-ஆதிதாளம்.

### பல்லவி.

ஓடிநான் உனைத் தேடிவந்தேன்-எனக்
குதவிசெய்தருள் ஐயனே (ஓடி)

### அநுபல்லவி.

நாடிஉன்பதம் தொட்டேன்
கோடிதரம் கும்பிட்டேன்
நாதவிநோத பிரசாதபிரபோத
அபேத அதீத நிர்வாதகியாதனே. (ஓடி)

### சரணங்கள்

க. அற்பமானபதார்த்தம்-சற்றும்விரும்பேன்
ஐயாஇது யதார்த்தம்
அற்புதபரமார்த்தம்-கொடுத்தருளில்
அதுவேஉப யோகார்த்தம்
பற்பல விசித்திரனே
கற்பனை சமுத்திரனே
பாசவிநாச சுரோசநமோச
பிரகாச விகாச உலாச விலாசனே. (ஓடி)

உ. வந்துனையே அடுத்தேன்-கீர்த்தனமாலை
வகைவகை நான் தொடுத்தேன்
வந்தனம்கைஎடுத்தேன்-நீவசிக்கஎன்
மனக்கோயிலுங் கொடுத்தேன்
அந்தமனே உனக்கே
உன்தன் மனைஎனக்கே
ஆய விதேயர்கள் நேய சகாய
அகாய உபாய நியாய விதாயனே (ஓடி)

ஙு. அன்பர்உபாசனனே-பூதலந்தன்னில்
அதர்ம விமோசனனே
இன்பசிவேசனனே-வேதநாயகன்
இதய சிம்மாசனனே
என்பவங்களைத் தீர்ப்பாய்
உன்பதந் தன்னிற்சேர்ப்பாய்
ஏக அநேக திரிலோக நிர்வாக
தெய்வீக விவேக அமோக தியாகனே. (ஓடி)

## ௩. இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

### பல்லவி.

எனை ஆதரிப்பாயே என்மன இருள்
தனியேபிரிப்பாயே. எனை

### அநுபல்லவி.

வினையே அரிக்குஞ்செல்லா
வினைஞன் ஒருபுல்லா
நினையா என்மனங்கல்லா
நிதம் அதனுடன்மல்லா
நிச்சயப்பிர போதனே
அக்ஷயப் பிரக்கியாதனே
சஜ்ஜனப்பிரசாதனே
துர்ஜனப்பிரமாதனே. எனை

### சரணங்கள்.

௧. துக்கப்பிர பஞ்சத்தொல்லை
சொல்வதற் குண்டோ எல்லை
திக்குவே றெனக்கில்லை
தெய்வமே கேளென்சொல்லை
சிஷ்டர் சமுதாயனே
துஷ்டர்கள் அபாயனே
இஷ்டர்கள் சகாயனே
அஷ்டகுண நேயனே எனை

௨. அடியனுன் வினைவசம்
ஆயினன் இதுநிசம்
படியிற் கருணாரசம்
பாலித் தருள்கவசம்
பக்தஜன நேசனே
சுத்தமன வாசனே
சித்தமல நாசனே
வித்தக விலாசனே எனை

௩. மருவிய பாசவலை
மாட்டி உற்றேன்கவலை
தருமசைதன் னியநிலை
தந்தேன் மயக்கந்தொலை

சங்கட நிவாரகா
எங்கள்குல தாரகா
பொங்குசுக தாயகா
துங்கவேத நாயகா — என

---

## ௬. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

### பல்லவி.

சித்தம்உவந்தருள்செய்ய-இத்தனைதாமதமேது
சீலனேபுவனபரி-பாலனேமூலனேநீயுன் — சித்தம்

### அநுபல்லவி.

நித்தனேபுவியெங்கும்பிர-சித்தனேநிகிலலோக
கத்தனேஜீவகோடிகட்-கத்தனேசுத்தனேநீயுன் — சித்தம்

### சரணங்கள்.

௧. அசடனென்பதென்னரகசியமா-பெற்ற
அன்னையிடம்உண்மைசொல்லவேபயமா
வசஞ்செய்தருள்வதுனக்கோர்விஷயமா-யாவும்
வல்லஉனக்கிதென்ன அதிசயமா
வசனசாதுரியனே
மனனமாதுரியனே
சுஜனர்கள்பிரியனே
சுரர்தொழும்பெரியனே — சித்தம்

௨. நிதமும்உனதுபதகைங்கரியமே-செய்ய
நீயருளெனக்குச்சுதந்திரியமே
அதுவேயெனக்குப்பெரும் சௌகரியமே-இனி
ஐயனேவேண்டேன் வேறுஐசுவரியமே
அதிசய அப்பிரமேயா
அகணித சுப்பிரகாயா
விதிநெறி செப்புமாலாயா
விசய சங்கற்ப தூயா — சித்தம்

௩. பூதபௌதிக மெல்லாம் நிறைவோனே-நல்ல
புண்ணியத் திருமறையை அறைவோனே
வேதநாயகன் மனம் உறைவோனே-ஞான
விழியில்லா தவருக்கு மறைவோனே

போதகப்பிரகாசனே
புண்ணியப் பிரதேசனே
சாதகக்கிருபேசனே
தாசருட் பிரவேசனே சித்தம்

---

ரு. இராகம்-அசாவேரி-ஆதிதாளம்

பல்லவி.

உன்னிடத்திற்சொல்லாமல் யாரிடத்தில்சொல்லுவேன்
ஓ-ஓ-ஜகதீசா.

அநுபல்லவி.

பொன்னிடத்தாசையறு புனிதர்கள்தமக்கின்பம்
பொழிதருவேயிந்தப் புவியில்நான்படுந்துன்பம் உன்னி

சரணங்கள்

க. வயிறுபசிக்கும்பிள்ளை மாதாஇடம்போமன்றி
மற்றொருவரிடத்திற் சேருமோ-நாளும்
அயர்வுறும்பெரும்பிணி அருமருந்தாலன்றி
அயலொன்றினாலே அறுதிருமோ-கன
வெயிலால் வருந்துவோரே
வேண்டுவர் நிழல்நீரே
உயிர்ப்பயி ரோம்புங்காரே
உனையன்றிக் கதியாரே
உலவுறுசல்லடை போற்பலவோட்டை
உளதாகியவெறும் புழுமலக்கூட்டை
நிலையெனமக்கவி செயும்பலசேட்டை
நித்தியம்நான்அத னாற்படும்பாட்டை உன்னி

உ. நாதனேநான்பிழை யாதுசெய்யினும்நின்னை
நம்பினேன்என்மேலின்னம் க்ஷாத்திரமா-பாரில்
ஓதரும்புலச்சத்து ராதியர்கையில்என்னை
ஒப்புவிக்குதல்தர்ம சாஸ்திரமா-மறு
மாதர்மேற் செல்லும்நேத்திரம்
வாயேஅபத்த பாத்திரம்
தீதுணைகொள்ளுஞ் சுரோத்திரம்
சிற்றின்பம் வேண்டுங்காத்திரம்

தீய அவயவங்கள் செயுந்தினமோசம்
சிந்தையிற்குடிகொண்ட தாசாபாசம்
நாயேன்செய்கைகளோ ஆபாசம்
நான்குபக்கத்திலும் நான்படுங்கிலேசம் உன்னி

௩. எத்தனைசுமைபாவம் வேண்டுமானாலுமுந்தி
எனக்குக்கொடுக்கலாம் அச்சாரமே-என்தன்
அத்தனைநாளுஞ்சேயேன் றறிந்தும்நோய்செய்யுமாயைக்
கார்தந்தார்இந்த அதிகாரமே-சர்வ
உத்தமஞ்சேர் நிர்தோஷ
உன்னதமா விசேஷ
பத்தர்கதிய சந்தோஷ
பரசமயத்து வேஷ
பாக்கியமலர்ந்தருள் பழுக்கும்உத்தியா
பலபுவனத்மகோடிகள் அபிமான
ஆக்கியவேத நாயகன்ஸ்வாதீன
அனைதந்தைகுருதெய்வஞ் சகலமுமான உன்னி

---

## ௯. இராகம்-பூரணகௌளை-ஏகதாளம்.

### பல்லவி.

என்பிழைகள் பொருத்தருள்வாய்-எனை அலைக்கும்
துன்பவினை அறுத்தருள்வாய்

### அநுபல்லவி.

முன்பரவியே ஜெபிக்கும்
அன்பர்கள் அநுபவிக்கும்
இன்பமே அவர்விரும்பும்
நின்பதகமலம் நம்பும் என்

### சரணங்கள்.

௧. நேயனைப்போல்விவகரிப்பேன்-துதிகவிகள்
ஆயிரம்உண்டாக்கிவிரிப்பேன்-என்செய்கையெல்லாம்
வாயின்அன்பலாதுமனம்-தோயும்அன்புளதோசிறு
நாயின்அன்புமேயிலாமல்-தீயவம்பனாய்த்திரும்பும் என்

உ. என்னவொண்ணுமோஎன்பவமே-ஐயனே-இந்த
மண்ணில்என்ஜன்மம் அவமே-தினந்தினமும்
உண்ணலும்நித்திரைதனை-நண்ணலும்பெரும்பவங்கள்
பண்ணலும் அல்லாதுன்பதம்-எண்ணல்செய்தறியேன்ஸ்வாமி

௩. போதகம்என்னிடம்லயமே-என்மனம்பஞ்ச
பாதகங்கட்காலயமே-புவனமிசை
மாதவம்புரியவர்க்குக்-கோதகலும்இகபர
சாதகங்கொடுத்தருளும்-வேதநாயகா இரங்கி என்

---

## எ. இராகம்-சுப்பிரதீபம்-திரிபுடை.

### பல்லவி.

வினையே எனையே மேவாதருளே

### அநுபல்லவி.

நினையேநம்பினேன் நின்மலப்பொருளே வினை

### சரணங்கள்

க, கனவிலுந்தருமத்தைக் கண்டறியேனே
அனவரதமும் உனதருள்குறியேனே வினை

உ. பாவமென்பதற் கொருபதியானேனே
ஜீவனும்வழி தெரியாமற்போனேனே வினை

௩. உதரபோஷணையன்றி உனைநினையேனே
இதயந்தனில்உன்னடி இணைபுனையேனே வினை

௪. பூதலந்தொழும் அதி புண்ணியர்மித்திரனே
வேதநாயகன்தொழும் விமலபத்திரனே வினை

---

## அ. இராகம்-பாசு-ரூபகம்

### பல்லவி.

ஆண்டருளே-கருணை-பூண்டருளே

### அநுபல்லவி.

தூண்டருஞ் சுடராக விளங்கும்
சோதியே-உயர்-நீதியே-எனை ஆண்

## சரணங்கள்.

க. என்னை ஆள்வது பாரமா - என
திடம்வா வெகுதூரமா
அன்னைக்கும் உபசாரமா - எனக்
கருள்புரிய இந்நேரமா - கன

ஆரியனே - மெய்ஞ்ஞான
சூரியனே - சர்வலோக
காரியனே - மிகுந்தவுள
தாரியனே - ஜகந்தனில்

உன்னையல்லது பின்னையார் துணை
யோகனே - சுக - போகனே - எனை ஆண்ட

உ. எனதுடலெனும் புல்லையே - காக்க
எவர்க்குங் காட்டுவன் பல்லையே
தினமும் ஆயிரந்தொல்லையே - இதில்
சிறிது மேசகம் இல்லையே - கன

சேதனனே - பெரியபு
ராதனதன - பரமசி
கேதனனே - மெய்ஞ்ஞான
சாதனனே - அநுதினம்

மினது பாதம் நம்பினேன் அதி
நேசனே - பிர - காசனே - எனை ஆண்ட

ங. பொறுமை உனக்குச் சொந்தமே - நான்
புரியுப்பிழை அநந்தமே
மறுமையுறு நிற்பந்தமே - கெட
மலா பாதாரவிந்தமே - கன

மாட்சியனே - அடியர்கண்
காட்சியனே - சர்வாண்ட
சாட்சியனே - தனிஅர
சாட்சியனே - தினந்தினம்

சிறுவன்வேதநாயகன்பணி
கீர்த்தியே - அற - மூர்த்தியே - எனை ஆண்ட

## ௬. இராகம்-மோகனம்-திரிபுடை தாளம்.

### பல்லவி.

காக்ஷி எனக்குக் கொடாமலிருக்கின்ற
காரணம் ஏதையா — காக்ஷி

### அநுபல்லவி.

சாக்ஷியாயிருக்கும் சர்வாதிகாரனே
மாக்ஷியுடையோர் மகிழ் நிர்விகாரனே — காக்ஷி

### சரணங்கள்

௧. அந்தரங்கபத்தி அற்றவனென்றோ
அக்கிரமத்தில்பெயர் பெற்றவனென்றோ
பந்தப்பேய்க்குள்ளத்தை விற்றவனென்றோ
பாதகங்களெல்லாங் கற்றவனென்றோ — காக்ஷி

௨. மறந்தும் ஒருமெய்சொல் லாதவனென்றோ
மருந்துக்கும்நன்மைஇல் லாதவனென்றோ
சிறந்தமெய்ஞ்ஞானங்கல் லாதவனென்றோ
தேசத்தார்க்கெல்லாம்பொல் லாதவனென்றோ — காக்ஷி

௩. ஏசுமறையை இகழ்ந்தவனென்றோ
ஈனமதத்தைப் புகழ்ந்தவனென்றோ
நீசெய்தநன்றி மறந்தவனென்றோ
நீசர்க்குள்மெத்தச் சிறந்தவனென்றோ — காக்ஷி

௪. ஆதிமத்தியாந்த ரஹிதமகேசா
அற்புதசின்மயா னந்தவிலாசா
வேதவேதாந்த விதிஉபதேசா
வேதநாயகன் இதயப்பிரகாசா — காக்ஷி

---

## ௭. இராகம்-நாதநாமக்கிரியை-ரூபகதாளம்.

### பல்லவி

அருள்புரிவாயே - எனதுள
மருள்தெரிவாயே

### அநுபல்லவி.

இருளை நிகரும் சுருள் கொள்ளுதிமிர்
இலகும்பொருள் உலகம்புரி-கலகம்படா-விலகும்படி அருள்

சரணங்கள்

க. நினைவெல்லாம் உன்னினைவதாயென் நெஞ்சம்உன்னுமோ-பழி
புனையும்வாய்வெறும்பேச்சைவிட்டுன்னைப்புகழ்ந்துபன்னுமோ
சிறு, தினையளவு மெய்தனைவிடாது
சிந்தித்துனை-வந்தித்திடு-புந்தித்திடம்-வந்துற்றிட அருள்

உ. எத்திசையும்உன்னுருவமாகவே இலகக்காணேனோ-சொந்த
அத்தம்யாவும்நீயென்றேமிக ஆசைபூணேனோ-கன
பத்தியாயுனை நித்தம்போற்றிப்
பாடித்தினம்-நாடித்தவம்-நீடிக்கவி-கூடிக்கொள அருள்

ங. நீதமாயரும் போதமாயெங்கும் நிறையுங்கர்த்தாவே-நாளும்
வேதநாயகன் காதல்மனப்பெண் மேவும்பர்த்தாவே-கொண்ட
ஏதமறப்பிர சாதம்உதவி
இழிவண்டிய-பழிவிண்டுசெல் வழிகொண்டுனை-விழிகண்டிட அரு

கஉ. இராகம்-மணிரங்கு-திரிபுடைதாளம்.

பல்லவி.

சித்தம்இரங்கிநல் மூத்தர்தங்கோஷ்டியிற்
சேர்த்தெனைக் காத்தருளே

அநுபல்லவி.

உத்தபசீலர்தஞ் சித்தமலர்உறை
வோனே-கோனே-வானே-தேனே சித்த

சரணங்கள்.

க. நின்னடித்தொண்டனு னென்ன அறியம்
நிதம் உலகந்தானே
என்னஉன்தொண்டின் பலனென்றெனைப்புவி
ஏசில்என் சொல்வேனே
பன்னரும் உன்னருள் என்னருகாகிடப்
பண்ணே-கண்ணே-எண்ணே-விண்ணே சித்த

உ. பொய்த்தெய்வதங்களைப் போற்றிப்பெரும்பழி
பூண்டவர்தம்மனமே
மெய்த்தெய்வம்உன்னைத் தொழும்எனக்கென்ன
விசேஷப் பிரயோஜனமே
கைத்தொழில் அண்டம் அனைத்தையுந்தாங்கிடு
நாயகா-தூய்யா-மெய்யா-ஐயா

௩, கழுவக்கழுவ அழுக்குடல்மீது
கலந்தடருந்தன்மையே
தழுவினன்னெஞ்சுறு மாசுக்கள்நீங்கிடத்
தந்தருள்வாய்நன்மையே
எழுமன்பொடுவேத நாயகன்போற்றிடும்
ஏகா-யோகா-வாகா-தியாகா சித்த

---

## ௧௨. இராகம்-தர்பார்-திரிபுடை-தாளம்.

### பல்லவி.

என்னை ஆளையா-என் விண்ணப்பம்
தன்னைக்கேளையா

### அநுபல்லவி.

மின்னெனிகரும்வாழ்வை வெறுப்பவர்க்குரியோனே
அன்னைபிதாசற்குரு வாகியபெரியோனே என்னை

### சரணங்கள்

௧, அடியன்மேற்சினமா-என்குறைநீக்கி
ஆள்வதுகனமா
கடினம்நின்மனமாஎனதுநெஞ்சங்
கவலைக்காசனமா
படியில்என்னகத்துறு பாவஇருளைமாற்றித்
திடமுறவேமெய்ஞ்ஞான தீபந்தனையேற்றி என்னை

௨, என்றுஞ்சஞ்சலமா-ஐயனேமாயைக்
கிவளவுபலமா
வென்றுகொள்புலமா-அதனல்ஏழை
மெலிவதுநலமா
நன்றுருவாகியநாதா-என்முகம்நோக்கிக்
குன்றெனநான்செயுங் கொடுவினைகளைப்போக்கி என்னை

௩, கைவிடலாமா-என்னிடம்வரக்
கால்பலர்நோமா
நைவினைபோமா-இனிமைதங்கும்
நன்னயநாமா
தெய்வநாயகனாகித் திகழுறும்அகளங்கா
கைவல்லியஞானநெறி கமழ்ந்ததுரப்பிரசங்கா என்னை

ச, நித்திக்குந்தேனே-அமுதேகண
தேவர்கள்கோனே
எத்திக்குந்தானே-எள்ளுளெண்ணெய்போல்
இருக்குங்கோமானே
புத்தியுடையோர்சூட்டும் புகழ்மாலை அணிவோனே
புத்தியுடனேவேதநாயகன்பணிவோனே என்னை

---

## கஉ. இராகம்-கல்யாணி-ரூபகதாளம்.

### பல்லவி.

தருணங்கருணைபுரிகுவாய்-ஐயா-உனக்கனந்தங்கோடி
சரணஞ்சரணந்தெரிகுவாய்-மெய்யா

### அநுபல்லவி.

அருணகோடி தேஜோமயனே-பொன்
திரணமென்றுன்னுவோர்பயனே-இத் தருணங்

### சரணங்கள்.

க, இந்திரியச்சத்துருக்கள் செய்மோசம்
என்னசெய்வேனிர்வகித்தல் பிரயாசம்
நிர்தனையான அநுபந்தபாசம்
நீங்கச்செய்வாய்புண்ணிய உபதேசம்
நீயேகதியன்றோ - ஒரு
தாயேதுயர்ஒன்றோ - சிறு
நாயேன்கெடல்நன்றோ - கன
தீயேன்உடல்குன்றோ - இது தருணங்

உ, கோரமாய்த்தன்பிள்ளைசெய்யினுந்-தீது
கோபித்துநீக்கிடுந்தாயுண்டோ-ஓது
காரமாநான்செயும்பாவபம்பொ-ருது
கைவிடில்வேறெனக்காதர-வேது
காயத்தைஎடுத்தேன் - அரு
மாயத்தைஅடுத்தேன் - அறி
யாயத்தைஉடுத்தேன் - திரு
நேயத்தைவிடுத்தேன் - இது தருணங்

ங, நச்சுமரத்தையும்வைத்தவன் தானே
நாள்தோறுங்காவல்செய்யாமல்இ-ரானே
இச்சகமீதில்எனைஅழைத்தோனே
என்னைநீஆளாவிடிற்பிழையேனே

ஏகந்தழையுருவே - சுக
போகந்தழைதருவே - கண
யோகந்தழைதிருவே - முதிர்
பாகந்தழைகுருவே - இது தருணங்

ச, நிதமும்நானுறும்பாதகச்-சேறு
நீக்கிடப்போதுமோநின்னருள்-ஆறு
விதியுங்கதியும்இல்லையே-வேறு
வேதநாயகனே அருள்-பேறு
வேதத்துருவோனே - பல
பூதப்பெருமானே - கண
போதத்தமர்கோனே - இரு
பாதத்தைவிடேனே - இது தருணங்

கச. இ-ம் தேசிகதோடி-ஆதிதாளம்.

பல்லவி

ஐயாஎனை ஆண்டருளே-உனை
அண்டினனே-மனம்-வெண்டினனே ஐயா

அநுபல்லவி.

பொய்பாம்வாழ்வினில்நான்குழையாமல்
போகாதிகளில்என்மனம்நுழையாமல் ஐயா

சரணங்கள்

க, ஒருநிமிஷமுமுனதடிமறவாமல்
உலகழியினுமுனதருள் துறவாமல்
இருதயமதனிலோரிடர்பிறவாமல்
இழிவுறுபழியொடுநானிறவாமல் ஐயா

உ, உன்னையலாதொருவனையும்தொழாமல்
உதரநிமித்தம்எங்கும் ஓடியழாமல்
இங்கிலமீது துராசைஎழாமல்
இறந்தபின்னுநெரிநரகில்விழாமல் ஐயா

ந, நல்லவழிதனைஎந்நாளும்விடாமல்
நாட்டில் அசடனெனநான்பேரொடாமல்
பல்வகையாகியபழிகள்தொடாமல்
பாவையர்மோகத்திற்படிந்துகெடாமல் ஐயா

ச, என்னுயிர்போலஎவ்வுயிரையும்பேண
இகசுகபோகத்தைஎன்றுமோநாண
மின்னுங்குணாபரணங்களைபூண
வேதநாயகனே நானுனைக்காண ஐயா

---

## க௫. இராகம்-நாததாமக்கிரியை-ஆதிதாளம்.

### பல்லவி

இந்தவரந்தருவாய்-ஸ்வாமி-இந்த

### அநுபல்லவி

பந்தவினையெலாம்அறவேண்டும்-உன்
பாததரிசனம்பெறவேண்டும் இந்த

### சரணங்கள்.

க, தினமும்உன்பதமலர்தொழவேண்டும்-நான்
தேகபரவசமாயெழவேண்டும்
அனல்மெழுகாயுருகியழவேண்டும்-இனி
ஆனந்தக்கடலில்நான்விழவேண்டும் இந்த

உ, தேகவிஷயாதிகள்கெடவேண்டும்-ஞான
தீபத்தைஎன்னுளத்தில்இடவேண்டும்
பாகஅறப்பயிரைநடவேண்டும்-அந்த
பயிர்க்குன்அருட்புனலைவிடவேண்டும் இந்த

ங, மோகப்பசாசுதனைவெலவேண்டும்-நல்ல
முத்திநெறியிலேசெலவேண்டும்
நாகமெனும்புலனைக்கொலவேண்டும்-வேத
நாயகனேயுன்னாமஞ்சொலவேண்டும் இந்த

---

## க௬. இராகம்-பைரவி-ஆதிதாளம்.

### பல்லவி.

இந்தப்பிழைகளெல்லாம்பொறுப்பாயே-பாச
பந்தக்களைகளைவேரறுப்பாயே இந்த

### அநுபல்லவி.

[illegible]
அந்தப்பரமசுகம் அளித்தருள் [illegible] இந்த

## சரணங்கள்.

க, ஆதியானபரஞ்சோதி உன்னைநான்வெறுத்தேன்
என்மனந்தனை
ஆதிமாதிகள்சொல்யோக சாதனையிலிருந்தேன்
அநுதினமும்
வேதம்வேதியர்கள்ஓது நீதியையுமறுத்தேன்
சமர்த்தன்போலே
வீம்புபேசிப்பெரும்பாம்பு போலவிடப்பொழுத்தேன்
சதாகாலமும
பூதலவாழ்வுதனைநாடினேன் - மறு
மாதர்கள்சுகந்தனைத்தேடினேன்-பஞ்ச
பாதகரோடும்உறவாடினேன்-கன
சாதகனென்றுபெயர்சூடினேன்
ஆதுலர்க்கமுதீயாமலேதடுத்தேன்
சாதுஜனங்களைக்கண்டேதடி எடுத்தேன் இந்த

உ, நேயமானதந்தைதாயைச்சற்குருவைப்பழித்தேன்
ஜெபதபத்தை
நித்தியகர்மங்களைப்பத்திமார்க்கங்களை ஒழித்தேன்
கைப்பொருளெல்லாம்
காயமோகசுகமாயவாழ்விற்செலவழித்தேன்
உனைத்தொழாமல்
காட்டில்வாழ்மிருகக்கூட்டம்போலநாள்கழித்தேன்
அநுதினமும்
தூயனைக்குறைசொல்லித் தூற்றினேன்-பெரும
தீயனைத்தினந்தினம்போற்றினேன்-நல்ல
ஞாயவழக்குகளைமாற்றினேன்-பதி
னாயிரம்பொய்சொல்லத்தோற்றினேன்
வாயில்வந்தபடிவம்புகள்தொடுத்தேன்
கோயில்மணியமெனக்குடிகளைக்கெடுத்தேன் இந்த

ங, பூவிலேபாவியென்றுபேரெடுத்தேன்
புரட்டுருட்டும்
பொய்யும்வஞ்சனையும்செய்யுமார்க்கந்தனையடுத்தேன்
உன்னைமந்தனை
நாவிலேஎனதுபாவிலேசொலாமல்விடுத்தேன்
ஞானியைப்போல
நாட்டில்மாயவேஷங்காட்டிஎன்னைநான்கெடுத்தேன்
அநுதினமும்

பாவமும்பழிகழிகளுந்தாங்கினேன்-பெருங்
கோவமுங்குரோதமும் ஓங்கினேன்-புண்ணிய
ஜீவனஞ்செய்யாமல்தூங்கினேன்-நல்ல
பாவனஞ்செய்யும்வழிநீங்கினேன்
ஆவலாகப்பலபொருள் அபகரித்தேன்
காவலர்நெறியைக்கடந்துசஞ்சரித்தேன் இந்த

௪ வாரங்கூலிகளிற்சோரஞ்செய்துநான்குறைத்தேன்
பிறரிடத்தில்
வாங்கியபொருள்களைநாங்கிலையென்றுநான்மறைத்தேன்
பஞ்சததிலேவியா
பாரஞ்செய்யப்பலசேரில்நெல்லைக்கட்டிநிறைத்தேன்
நல்லதண்ணீரைப்
பாழிலேசகலநாழிகையும் விழலுக்கிறைத்தேன்
முதலிலொரு
நேரவட்டிதனைக்கூட்டினேன்-வெகு
தூரம்அகவிலையைநீட்டினேன்-வழக்
கோரஞ்சொல்லிச்சண்டைமூட்டினேன்-உப
காரஞ்செய்தோர்க்குக்கத்திதீட்டினேன்
தாரம்பிள்ளைகளுக்குந்தான்செய்தேன்வஞ்சம்
நேரில்வேதநாயகாநின்னடிதஞ்சம் இந்த

---

### ௧௭. இராகம்-சுருட்டி-திஸ்ரஜாதி-ரூபகம்.

### பல்லவி.

தேவாதிதேவனே-தயை-செய்தருள்வாயே

### அநுபல்லவி

பாவஉடலமெடுத்துநீளும்
பாதகமும்என்னைநாளும்
பந்தப்பசைசாடாமல்
சிந்தைத்துயர்கூடாமல்
நிந்தைப்பழிமூடாமல்
இந்தப்படிவாடாமல் தேவாதி

### சரணங்கள்

௧ கற்பகோடிகாலம்போல தற்பவாழ்வினைமதித்தேன்
காமமாகளங்கோபமும் அகங்காரமும்நெஞ்சினிற்பதித்தேன்
தற்பராஉனபொற்பாதாம்புயந்தாழ்ந்திடாதென்னைத்துதித்தேன்
சாந்தபரம்யோகாந்தமார்க்கஞ்சார்ந்திடாமறகுதித்தேன்.

நம்பதந்தனைநாளுஞ்சார்ந்து
நாசவினைகள் யாவுந்தீர்ந்து
ஞானந்தனிலேநீட
மோனந்தனையேநாட
வானந்தனையேதேட
ஆனந்தமுமேகூட தேவாதி

உ. பாசமாம்பிசாசர்என்மனம் வாசஞ்செய்வதுநிலையோ
பாபமுங்கடுங்கோபமும் பலர்சாபமும்பெருமலையே
நேசமும்விசுவாசமும்பிரகாசமும்எனக்கிலையே
நிந்தையான அகந்தைமூடும் என்சிந்தையுந்துஞ்சிலையே
ஈசனே என்பாவம் நீக்கி
என்னையே உன் தாசனாக்கி
இன்பக்கடலேசேரத்
துன்பக்கடலேபோர
அன்பர்க்கிணையேசார
என்பொய்க்குணமேதீர தேவாதி

ந. அன்பர்களிக்கஇன்பம்அளிக்கும் ஆனந்தப்பெருநதியே
அனவரதமுஞ்சனவிரதர்கள் அகத்தில்லொளிருமதியே
துன்பசாகரம்என்பது கெடத்தோன்றிடும்பரகதியே
தொண்டன்வேதநாயகன்மனப் பெண்டாகமகிழ்பதியே
நின்பதந்தனைநாளுமேத்தி
நேசமாய்க்கவி மாலைசாத்தி
நீதிப்பயனைவிள்ள
ஆதிப்பழியேதள்ள
வேதப்பயனைகொள்ள
போதத்தினிலேதுள்ள தேவாதி

---

கஅ. இராகம்-பியாகு-ரூபகதாளம்.

பல்லவி.

இந்தநிமிஷமே பாபநிவர்த்தி
எனக்கருள்வாய்ஸ்வாமி

அநுபல்லவி.

எந்தநிமிஷத்தில்சாவுவருமோவென்
றேங்கியேநானயர்ந்தேனே - உயர்
நீங்கிடிலென்னசெய்வேனோ - அசுரர்நோயே இந்த

சரணங்கள்

க. காலையோமாலையோ நாளையோசாவேனுங்
காலக்கணக்கறியேனே-வந்த
வேலைமுடியுமுன் ஓலையனுப்பிட
வேண்டாஞ்சொன்னேன்சிறியேனே-என்னை
ஆண்டாலுனைப்பிரியேனே - பெரியோனே இந்த

உ. பொட்டென்றுதேகந்தான் சட்டென்றுவிழ்ந்திடில்
கிட்ட ஒருவரில்லாறே - சுழி
வெட்டென்பர்பிரேதத்தைக் கட்டென்பர்மண்ணைமேற
கொட்டென்பர்போவர்பொல்லாரோ - ஆமை
நட்டம்வராமற்கண்பாரோ - துயர் இந்த

ங. கப்பல்இல்லாமலே எப்படியேனுங்
கடலைக்கடக்கவொண்ணுதே - நாளும்
அப்படிநின்பதத்தெப்பமில்லார்க்கந்த
ஆநந்தவீடுகண்ணுதே - நல்ல
ஞானந்தருவாயிப்போதே - கைவிடாதே இந்த

ச. ஆதிமத்தியாந்தரகிதப்பிரபோத
அபேதபுராதனநாதா-நாளும்
காதலுடன்வேதநாயகனுள்ளக்
கமலந்தங்குந்திருப்பாதா - எனக்
கமலந்தாஇன்னடுவாதா - கிடையாதா இந்த

---

ககூ. இராகம்-கல்யாணி-அடதாளசாப்பு

பல்லவி.

இந்தஉபகார மறவேனே-பூமி
அந்தரம்எக்கும்நிறை - கோனே இந்த

அநுபல்லவி.

விந்தைநரஜன்மம்நான் மேவ அருள்நோக்கினாய்
தந்தைதாய்மனைசேயர் தந்துகுறைநீக்கினாய் இந்த

சரணங்கள்

க. குறுதியாகியசேறு கூட்டி - நல்ல
கொழுமாமிசச்சுவரை நாட்டி
வரிஎன்புவிட்டங்கள் பூட்டி - கட்டும்
வடமாநரம்புகளை மாட்டி

இருகரவில்நவவாசல் உடல்மனையவீக்கினாய்
இன்பங்கள்நுகர ஐந்திந்திரியம் ஆக்கினாய்
அரியஆன்மா அங்குகுடியறப்போக்கினாய்
அந்தஆன்மாவில்நல் லறிவினைத்தேக்கினாய் இந்த

௨, பூமியாகியவீடமைத்தாய்-பஞ்ச
பூதாதிவேழியர் சமைத்தாய்
மாமதுரஉணவுகள் கொடுத்தாய்- அந்த
வானமாம்பந்தலும் எடுத்தாய்
சோமசூரியதாரகாதீபம்ஏற்றினாய்
சுகவாயுவால்உஷ்ண சோகதவதமாற்றினாய்
சேமஉணவாக்கவேதேயுவினை ஆற்றினாய்
சீதக்கடங்கொண்டு தெண்ணீரைஊற்றினாய் இந்த

௩, கடலாறுகுளம்ஓடைதந்தாய்-மலர்க்
காவுகளும்உதவினையெந்தாய்
தடமலைதருக்களும் வகுத்தாய் வனம்
சார்பிருகபக்ஷிகள் பகுத்தாய்
திடமானநவமணி உலோகாதிநீட்டினாய்
ஜகஜோதியாகவேசிங்காரம் காட்டினாய்
அடயின்றிநானாவினோதங்கள் காட்டினாய்
ஐம்புலாதிகளுக்கும் இன்பங்கள்ஊட்டினாய் இந்த

௪, சிலபறவைகானஇசை பாடும்-வேறு
சிலபறவைதிருநடனம் ஆடும்
பலமிருகம்நரர்வேலை புரியும்-நல்ல
பசுவாதிபாலினைச் சொரியும்
பலர்கனிகள்காய்கிழங்குமரமெலாம் நீட்டுமே
மண்ணன்னம்விளைவித்துவயிறாரஊட்டுமே
சலதரமுமெங்களைத்தலைமுழுக் காட்டுமே
சர்வபொருள்களும்நல்லசந்தோஷம் மூட்டுமே இந்த

௫, பித்தர்க்குநீசெய்பா ரகமே-வளம்
பெரிதெனினுமீதற்ப சுகமே
சுத்தர்க்குநீசெய்வே ரகமே-பரம
சுகமெனவிரும்புமென் அகமே

பத்தர் அநுகூலநற்பரமகாருண்ணியனே
பகிரண்டகோடிகள்பரித்திடுந் திண்ணியனே
வித்தகசொரூபமேமேவுநற்புண்ணியனே
வேதநாயகன்உள்ளமீதுவளர் கண்ணியனே — இந்த

---

## ௨௰. இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

### பல்லவி.

சிந்தைக்குள் உறைந்தும்நீ சிந்தைத்துயரந்தனைத்
தெரியாயோஸ்வாமி — சிந்தை

### அநுபல்லவி

அந்தரம்புவியெங்கும் அரசாக்ஷியளிப்போனே
எந்தப்பொருளின்உள்ளும் இருந்தகங்களிப்போனே — சிந்தை

### சரணங்கள்.

௧, பாலையும்விஷம்ஆக்கும் பாம்புபோல்கொடுமனம்
பலசுகத்தையுந்துன்பம் ஆக்குமே
பூலோகமெல்லாம்வசமாயினும் வேறொரு
புவனத்தையும்பிடிக்க நோக்குமே
காலமுழுதும்இந்தக் கருத்தேயாதனுரூபம்
கலியாணவீட்டிலும் கட்டிக்கொண்டழும்சோபம்
மேலவனேஎனக் கிதுவாய்த்ததென்னலாபம்
வேதநாயகனேபாராயோஎன்பரிதாபம் — சிந்தை

௨, இருதலைக்கொள்ளிநடுவிருக்குமெறும்புபோல
எந்நாளுந்தொலையா விசாரமே
ஒருசாணுகிய உதரக்குழி அடைக்க
உலகில்படுங்கஷ்டம் அபாரமே
தரணியின்வாழ்வென்பது நானாவிதவிநக்ஷம்
சார்வதாஇதில்வரும் சங்கடக்கோடிலக்ஷம்
தருமயோகாந்தநிலை சார்தல்உத்தமபக்ஷம்
சர்வாநுகூலாஉனக் கெல்லாம்பிரத்தியக்ஷம் — சிந்தை

௩. போர்க்களநடுவிலே குடியிருப்பதுபோலப்
பலசத்துருக்களின்போராட்டமே
சேர்க்குந்தனைசவடிவாந் தேசமிதுபிணியுந்
தீவினைகளுமவளர் தோட்டமே

பார்க்கும் இதுவே ஆசா பாசகடணசாலை
பகலும் இரவும் இது படியுமேமோகவேலை
தீர்க்கவைத்திர்க்குத் தினமுங்கொடுக்கும் வேலை
தினம்தேவநாயகா சேர்ந்தேன் உன் திருக்காலை சிந்த

---

## உக இராகம்-யமுனா-கல்யாணிரூபகதாளம்.

### பல்லவி.

சரணம்சரணம் நாதா-உன்
சரணம் தரவேணும்நாதா சரணம்

### அநுபல்லவி

திரணமாகிய காயமே-இதில்
தினம் அனந்தம் அபாயமே
மரணம்வருமுன் னேயமேபெற
மகிழ்ந்தருள் சகாயமே-கோடி சரணம்

### சரணங்கள்

க, பாவியேன் இருதயமே-பல
பாதகங்களின் மயமே
மேவிநிந்துர்வி ஷயமே-வினை
விலக்கி அருள் நன்னயமே

மாயவினைகளைமாற்றுவாய்-எதிர்
வந்தென்சிந்தையில் தோற்றுவாய்
சேவைதந்தெனைத் தேற்றுவாய்-இந்தத்
தீயனைககரை யேற்றுவாய் சரணம்

உ, மதம்இராகது வேஷம்-பொய்
வஞ்சகப்பல தோஷம்
எதிலும்நான் விசேஷம்-எனக்
கில்லைபுண்ணியவி சேஷம்

பதனப்பேயை ஓட்டுவாய்-நல்ல
மார்க்கத்திலெனைக் கூட்டுவாய்
விகஸ்வரகைப் பூட்டுவாய்-உன்
வீட்டுக்குவழி காட்டுவாய் சரணம்

ரு, தாசர்கள்பரி பாலா-கன
சாகவிக்குண சீலா
நேசர்கள்பிரதி கூலா-சத்ய
நீதியுயுசெங் கோலா

ஆசறுமுதல் நூலனே-அகி
லாண்டகோடிவி சாலனே
நாசரகித மூலனே-வேத
நாயகன் அநு கூலனே சரணம்



உஉ. இராகம்-கற்கடா-ஆதிதாளம்.

பல்லவி.

சீலம்நீதா தேவநாதா
சிறியன்மீது வாதா அபேதா சீலம்

அநுபல்லவி.

மூலகாரண தயாபரவேதா
மோக்ஷசாம்பிராச் சியப்பிரதாதா சீலம்

சரணங்கள்.

க, நன்மைதின்மைஇன்ன தென்பதறிகிலேன்
ஞானமார்க்கந்தனை யே அநுசரியேன்
சின்மயாநந்தனைஜெபம்புரியேன்
தீயனைநான் பாபத்திற்பெரியேன் சீலம்

உ, தாயிருக்கப்பிள்ளை தயங்குதல்சரியோ
சாமிநீஎன்மனங் வாழ்வும் வரியோ
நீயிருக்கஎன்தன் துன்பம்உபரியோ
நீயதாமசிக்க என்னுடல்கிரியோ சீலம்

ரு, ஜீவசிஷ்டிஸ்திதி லயஅதிகாரா
ஜென்மசாபல்லியப்பிர தாணஉதாரா
தேவதேவகன பூசிக்தீரா
சிறியன்வேதநா யகன்உபகாரா சீலம்

## உந. இராகம்-உசேனி-ஆதிதாளம்.

### பல்லவி.

நின்பதமேதுணை ஐயா - மனத்
துன்பமகல அருள் செய்வாய். நின்

### அநுபல்லவி.

இன்பமகோத்தியே - இனியதயாநிதியே
அன்பர்பரகதியே - அமரர்க்கதிபதியே. நின்

### சரணங்கள்.

க. என்மனம்இளகாத பொருப்பே - மாயை
என்றைக்கும்அதிற்குடியிருப்பே
தன்மமே அதற்கருவருப்பே - கெட்ட
தாமசகுணமென்றால் விருப்பே
நன்மைகெடுக்கும் இச்சை நாசக்கொடுநெருப்பே
தின்மையெல்லாம் அகலத் திருவருட்கண்திருப்பே. நின்

உ. ஏதும்அறியேன்ஞான சாஸ்திரம் - புவ
னேசா உனக்குநான்எம்பாத்திரம்
சோதனைக்கெளியேன் அபாத்திரம் - அதி
தூயனே என் இன்னம் சூத்திரம்
வேதனைமிகக்கொண்டு மெலிவுற்றேன் அகோராத்திரம்
சாதகமுறமேவி தருவாய்மெய்ஞ்ஞானநேத்திரம். நின்.

ந. நீசனென்வினைக்கெல்லா மூலம் - என்தன்
நெஞ்சஞ்செய்வதும்பிரதிகூலம்
பாசபந்தஉலக ஜாலம் - தன்னில்
படிந்துநொந்தேன்பல காலம்
ஈசனேகேளாயோ ஏழைநானிடும்ஓலம்
தாசன்வேதநாயகன் தனக்குநீயருள்சீலம். நின்.

---

## உச. இ-ம் முகாரி-ஆதிதாளம்.

### பல்லவி

ஆள்வாயென துளமூள்வாயெனக்குன்தன்
அடியிணையேதுணையே. ஆள்

### அநுபல்லவி.

நீள்சுகக்கனியனே நேசருக்கினியனே
நாள்வளர்தனியனே நயமறைத்தொனியனே. ஆள்.

## சரணங்கள்.

க, பேதைநான்பயனில்லாப் பேச்சிற்சண்டப்பிரசண்டம்
பிறைமயக்குவதிற் பெரியஉற்பாதபிண்டம்
வேதவினைஎனக்கு விளை சருக்கரைக்கண்டம்
விரைந்தருள்புரிஉனக் காயிரங்கோடி தண்டம்
வேதனே-வரப்பிர-சாதனே- ஆசீர்
வாதனே-சுரர்புகழ்கொள்-காதனே-நாதனே-எனை. ஆள்

உ, மனமெனுங்குரங்குக்குக் கன அறமேஉபேக்ஷை
வாதனைநீக்கிடாமல் ஏதின்னமும்பரீக்ஷை
தினகரரூபனே திவ்யமெய்ஞ்ஞான தீக்ஷை
திடமுடன்கொடுத்தருள் அதுவேஎனதபேக்ஷை
தேவனே-மனோ-பாவனே மறைசொல்
நாவனே-தயைசிறை-சுபாவனே-ஜீவனே-எனை. ஆள்.

ஈ, நிகரில்கனதெய்வீக நின்மலசுலக்ஷண
நித்தியம்நினையும்பக்தர் நெஞ்சப்பிரதக்ஷண
சகலஜீவாத்மகோடி தாங்குசம்ரக்ஷண
சாஸ்திரம்புகலும்சுரர் ஸ்தோத்திராமிர்தபக்ஷண
தாங்குவாய்-நெஞ்சில்-ஓங்குவாய்-துயரம்
நீங்கவே-வேதநாயகன்-பாங்கர்நின்றனுதினம். ஆள்

---

## உரு. இராகம்-ஆபி-ஆதிதாளம்.

### பல்லவி.

தேவநாயகனே-என்மீதிலுன்
திருவுளம் இரங்குவையே. தேவ

### அநுபல்லவி.

ஜீவன்முக்திபூர்ஜித - சிவர்பிதுரார்ஜித
தாவில் அதிபூஜித - சர்வசமயயோசித. தேவ,

### சரணங்கள்.

க, கரதலாமலகம்போல் உனக்குயாவுந்திர்ஷ்டாந்தம்
கர்த்தனே அறியாயோநீ எனதுவிர்த்தாந்தம்
பரவும்பதங்களென்றால் பக்கர்க்குமஆனந்தம்
பலபாதகங்கள் சிந்தையைபண்ணுமே தோஷிததாந்தம் தேவ,
பற்பன-நற்பல-உற்பவ-விற்பன
கற்பனை-செப்பரும்-அற்புத-உற்பன. தேவ

உ, தனமிகவேண்டுவோர்க்குச் சல்லியோகிதானமே
தாகமுள்ளோர்க்குக்கானல்ஜலமதுபானமோ
கனசுகந்தேடெனக்குக்கவலைசன்மானமோ
கதியருள்வாயுனக்கதுபயாதீனமோ
கர்த்த-சமர்த்த-பிரசித்த-சம்வர்த்தன
பக்தர்கள்-சுத்தஅகத்துறு-கீர்த்தன. தேவ

ங, தினமும் அனந்தம்பாவஞ்செய்வதென்சம்பிரதாயம
சிந்தைக்கறங்கசப்புசேர் வேப்பிலைக்கஷாயம
இனவேதநாயகனென்றேற்றேன் உன்னுமதேயம்
எனக்கல்லாவிடினும் அப்பெயர்க்கேனுஞ்செய்சகாயம்
எம்பர-உம்பரும்-அன்பரும்-நரம்பிய
அம்பர-சம்பிரம-இன்பம்-நிரம்பிய. தேவா

---

உசு. இராகம்-அடாணா-ஆதிதாளம்

பல்லவி

ஈசாநின்பொற்பாதமலர் நம்பினேன் - என்னை
இக்ஷணமேவந்து ரக்ஷணஞ்செய்தருள். ஈசா.

அநுபல்லவி

தாசர்மனகமலாசனகேசர
சாசுவதயோக சாம்பிராஜ்யகிரகேசுர
ஆசைக்கினிய அவாங்மனோகோசர
அண்டபிரமாண்ட அகண்டசராபர. ஈசா.

சரணங்கள்.

க, எத்தனையோபேர் சுகித்தமர்வீட்டில்
எனக்கிடம் பூச்சியமா - தயை
சித்தங்கொள்வாயெனப் பித்தனெனக்குத்
தினமனோராச்சியமா - நல்ல
நித்தனே இன்பமிகுத்தமுத்திநலன்
நீதரில்வானவரோ அவரோகலன்
சத்தில்வழக்கவர் பேசினனலன்
தாயேஉற்றதுணை நீயேன்பின்வேறினை ஈசா.

உ, மாகுணபாகவைசயோகமின்றிப்புவி
வாழ்ந்தவர்தாமெவரோ - எங்கும்
ஏகும்நெஞ்சுன்னருகாகவராதிதற்
கேகுறுக் குச்சுவரோ - விஷ
நாகமாமாயைக்கெங்குஞ் சர்வகொள்ளையோ
நான்பயனில்லாமற் பேசிநிக்கிள்ளையோ
ஆகிலுமென்புத்தி தான்சுத்தவெள்ளையோ
ஐயனேநானென்ன தாயில்லாப்பிள்ளையோ ஈசா.

ந, வந்துன்தரிசனந் தந்தருளியென்
மனக்குறைதீரேனோ - உன்தன்
சுந்தரபாதமென் சிந்தனையூன்றிச்
சுகக்கடல் சாரேனோ - பெரும்
பந்தநெருப்புக்கென் சிந்தனைசெத்தையா
பாவியென்றென்னைக்கை நீவிடல்சத்தையா
விந்தைநலந்தந் திடல்பெருவித்தையா
வேதநாயகன் பங்கென்னசொதந்தையா. ஈசா.



உஎ - இராகம் - துசாவந்தி - ஆதிதாளம்.

பல்லவி.

ஆதியேபரஞ்சோதியே - எனை
ஆதரித்தருள்வாயே. ஆதியே

அநுபல்லவி.

ஓதிஉணரவொண்ணு தோங்குங்குணாகர
நீதிவடிவமுநின்மலசாகர ஆதியே.

சரணங்கள்

க. உலககாரியத்தில் நான்வெகுகிராணி - உன்னை
உன்னுவதிற் கேவலம்அப்பிராணி
நலம்என்பதெனக் குண்டோமாகாணி - என்தன்
நவைஏற்றப்போதுமோ ஆயிரந்தோணி
மலவசமாகிச் சோர்ந்தேன்
தலைவாஉன்னடிசார்ந்தேன்
மதிக்கும்அடியார்கள் துதிக்கும்ஆரிய
குதிக்குர்நாவெளன உதிக்கும்வீரிய ஆதியே

௨, கண்ணுள்ளபோதல்லவோ கண்காட்சி-சீவன்
கழியுமுன்னல்லவோ புண்ணியமாட்சி
மண்ணில்எனக்கு ஞானஅரசாட்சி-மிக
வாய்க்கும்படி ஐயனேநீகடாட்சி
எண்ணரிய பிரதாபா
நண்ணரும் சுப்பிரதீபா
இணங்கும்அமரர்கள் வணங்குபெருவர
மணங்குலாவு சுகுணங்கொள்குருபர ஆதியே

௩, தீதுபொறுத்தல் தெய்வகுலதர்மமே
செய்கைகளே மனுஷகுலதர்மமே
ஓதிவிட்டேன்உனக் கேசுஉள்மர்மமே-என்மேல்
ஓவோஐயனே இன்னம்ஏன்வர்மமே
பாதகமலம்அணி வேதநாயகன்பணி
படர்ந்ததிருவருள் அடர்ந்திடும்பிரம
கடந்தஞானியர் தொடர்ந்தசப்பிரம ஆதியே

---

உஅ. இராகம்-கேதாரம்-ஏகதாளம்

பல்லவி.

தேவனே உன்னைநம்பினேன்
அடியெனை ஆண்டருள் தேவனே

அநுபல்லவி.

தேவா-துரித-அபாவா-சுகுண-சுபாவா
மகாநு-பாவா-வாவா தேவனே

சரணங்கள்

க, ஐயாநிலைஅறு-பொய்யாம்உலகினில்
நையாவகைஅருள்-செய்யாயோஉயர் தேவனே

௨, வாராயோமுகம்-பாராயோஅருள்
கூராயோவினை-தீராயோ தேவனே

௩, பெரியாய்கைவிடல்-சரியாநான்வினை
புரியாவிதம்அருள்-சொரியாயோஉயர் தேவனே

௪, நொந்தேன் வினைசுட-வெந்தேன் உனதிடம்
வந்தேன் சுகமிலை-தந்தே அருள்புரி — தேவனே

௫, நாதா அருள் ஒண்-ணு கர்மனம் இரங்
காதா அநுதினம்-வேதநாயகன் பணி — தேவனே

---

## ௨௬. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

### பல்லவி.

பரனே அடியர்மனோ-கரனே விமலதின
கரனே நீ அருள்வரனே.

### அநுபல்லவி.

உரனே மிகுப்புவன தரனே அகண்டசரா
சரனே பரமசுககரனே தீரனே அநும் — பரனே

### சரணங்கள்

௧, என்னைவந்திரக்கும் ஏழை தன்னைநான் தள்ளிவிடில்
ஈசனே கோபம்பண்ணுவாயோ-தந்தை
அன்னையே உன்னையிரக்கும் என்னை நீ தள்ளில் எனக்கும்
அவ்விதமென்றே எண்ணுவாயோ
முன்னே நீ அனேகரை உன் பொன்னடியிற் சேர்த்தனை
இன்னமும்பலபேர் தமைப் பின்னும்வினை தீர்த்தனை
என்னவே நான் கேட்டுன்மீது சொன்னேன்பலகீர்த்தனை
பின்னையொன்றும் வேண்டேன் அருள் உன்னையிதென் பிரார்த்தனை

௨, உத்தமனே நான்பெரிய பித்தனாயினும் உனை
அடுத்தவனென உன்னுவாயோ-பாரில்
சித்தமிசைபைத்தியம்பிடித்தபாலகனைக்கை
விடுத்தகலுவாள் தாயோ
முத்தொழிலில் முதல்தொழில்கொண்டுசெய்தாயென் சடம்
முத்தஞானம் அளித்தெனைக்காத்தருளாயேன் ஹடம்
அத்தனே அவ்விரண்டாந்தொழிலில் என்னசங்கடம்
அதுவரில் மூன்றாந்தொழிற்கஞ்சிடேன் இதுதிடம் — பரனே

௩, பாடுகவிபிற்கற்பனைதேடுவதல்லால்உன்னருள்
கூடும்வகைகுறியேனே-என்னை
நாடும்எவரோடுமேவாநாடுவதல்லால்என்வாயை
மூடும்வகை அறியேனே
வாடுதலிற்பாதமலர்சூடுபெரியோராக
வாசுபுவனேசவுபாசவினைமாரக்
வீடுதவுகியாக அலைபாடுகடற்பாரக
மீதுவேதநாயகன்எப்போதுமேலிகொள்தாரக பரனே

---

## ௩௰. இராகம்-பியாகடை-திரிபுடைதாளம்.

### பல்லவி.

அம்புயப்பதம்நம்பினேன்ஐயா-பரலோகசாதக
சம்பிரமத்தைவிரும்பினேன்மெய்யா
கனதியாகக்கையா அம்புய

### அநுபல்லவி.

தம்பமாம் அவலப்பவேரிலையே-தேவாதிதேவர்கள்
சகிதமாகிப்சுகிதமயிலையே-மெய்ப்போதகிலையே அம்புய

### சரணங்கள்

௧, தினமும் அலைபுமென் மனமேமகிசகமா-அடியேனுன்பால்இஷ்ட
சித்திவேண்டியே நித்தியம்யாசகமா
கன அதீதனென் மீதரோசகமா-என்சொல்உன்காதுக்குக்
கடினமாகிய கொடியவாசகமா
நானொருமசகமா அம்புய

௨, மண்ணின்வாழ்க்கையில் எண்ணிவாதனையே - அதுநீங்கவேயருள்
மன்னிடாமலேன் இன்னஞ்சோதனையே
திண்ணியம்பெறு புண்ணியசாதனையே - அடியேனுக்கேஸ்வர
தினமாகச்செய்ஞானபோதனையே
செய்தேன்வந்தனையே அம்புய

௩, எண்ணிமகிழ்ந்திடு புண்ணியவிக்கிரகமே-பரிசுத்தசீலர்கள்
இஷ்டபூரண துஷ்ட நிக்கிரகமே
விண்ணின்ஞானம் நண்ணுசுகக்கிரதமே-இனிநீபுரிந்தருள்
வேதநாயகன் தனக்கனுக்கிரகமே
பணியார்உக்கிரகமே. அம்புய

## ௩௧. இராகம்-ஆகிரி திரிபுடைதாளம்.

### பல்லவி

சம்மதியெனக்குமெய்யப்பனே-உனைநினைக்க
நன்மதிதந்திடில்ஐயனே

### அநுபல்லவி

அம்மவென்றழ மேன்மேலும்
வெம்மனைநோயே சூழ்ந்தாலும் சம்மதி

### சரணங்கள்

௧, தன்னைஉன்னையே கூடாதென்றே-தடைசெய்வோன்தான்
இந்நிலத்துண்டோ முனக்குன்றே
நின்னையே தொழுவிரதம்
நேர்ந்துனை அநவரதம்
உன்னையே என்மனோரதம்
உதவுவாய் கருணாமிர்தம்
ஓங்கிவளர்தனம் நீங்கியொழியினும்
வீங்கியுடல்பிணி தாங்கியழியினும் சம்மதி

௨, பதமலர்மேல் ஆசைகொண்டேனே-உலகவாழ்வு
சதமலவென் றுண்மைகண்டேனே
நிதமுனைப் பணியுமதி
நீதர இல்லையோவிதி
அதிற்குறையுமோ உன்நிதி
அண்டினேனு னுன்சந்நிதி
அடரும்வறுமையோ டிடர்கள்சூழினும்
படருமனத்துயர்க்கடலில்ஆழினும் சம்மதி

௩, உத்தமபிரமசைதன்னியமே-சௌஜன்னியமேமெய்ப்
பத்தர்கள் அல்லா தார்க்கன்னியமே
சுத்தமதுர பாஷணு
சோபனகுண பூஷணு
வித்தகசுவி சேஷணு
வேதநாயகன் போஷணு
விலக்கியெனை உலகம்நகைக்கினும்
கலகமாகவே பலர்கள்பகைக்கினும் சம்மதி

## ௩௨-இராகம்-கேதாரம்-ஆதிதாளம்.

### பல்லவி.

ஐயனே - உயர் - மெய்யனே.

### அநுபல்லவி.

உய்யவே அருள்புரி செய்யபதந்தந்தெனை ஐயனே.

### சரணங்கள்.

௧. ஈசனேநான் ஆத்ம இரக்ஷண்ணியமே - பெற
இரங்கியருள்கடாக்ஷ வீக்ஷண்ணியமே
தாசன்நானுனக்கென்னுந் தாக்ஷண்ணியமே - கொண்டு
தந்தருள்வாய்விவேக தீக்ஷண்ணியமே ஐயனே.

௨. இகவினிஅழிந்து போமில்லாது - அதை
ஈந்தனம்போது மென்றால்செல்லாது
நிகழ்நித்தியசுகந் தந்தால்அல்லாது - சற்றும்
நில்லாமலநச்சும் என்வாய்பொல்லாது ஐயனே.

௩. கோதையர்மைந்தர் முதற்பரிஜனமே - சந்தைக்
கூட்டம்அவர்மேற் கொள்ளுந்தரிசனமே
வேதைதரும் இது நிதரிசனமே - அருள்
வேதநாயகனுக்குன் தெரிசனமே ஐயனே.

---

## ௩௩. இராகம்-ஜயந்தஸ்ரீ-ஏகதாளம்

### பல்லவி.

நாதாநிரந்தர விநோதா - உன்தன்
பாதாரவிந்தம் எனக் காதரம்தாதா நாதா

### அநுபல்லவி.

வேதாந்தசார நயபோதா - பஞ்ச
பூதாந்தகால விபரீதா - பிரக்கியாதா - ஜெக நாதா

### சரணங்கள்.

௧. பேசருஞ்சர்வபுவநேசா - நல்ல
தாசர்மனாலயவாசா - பாவநாசா - ஜெக நாதா

௨. மாவரந்தரலாகாதா - வினை
போவெனநீசொலிற் போகாதா - சாகாதா-புவி நாதா

௩. மாயையின் சப்தமேவிசமர் - அந்தப்
பேயைக்கொல்ல நுனக்கவசமா - தாமசமா - தெய்வ நாதா

௪. அடியன்மனங் கடின இரும்பா - அருங்
கொடியவினை அதற்குக்கரும்பா - நாமேனேர் துரும்பா-ஜெக நாதா

௫. ஆதிமத்தியஅந்தரகிதா - சுயஞ்
சோதிபய அமரர்சகிதா - கனசுகிர்தா - மகி நாதா

௬. மாயாந்தகாரம் அகில்கிரணு - வேத
நாயகன்தொழு மலர்ச்சரணு- அந்தக்கரணு-தெய்வ நாதா

---

## ௧௪-இராகம்-புன்னுகவராளி-ஆதிதாளம்

### பல்லவி.

காக்கவேண்டும் - கடவுளே - நீ காக்கவேண்டும்

### அநுபல்லவி.

காக்கவேண்டுமென்னை அன்பன்-ஆக்கவேண்டும் என்கவலை
நீக்கவேண்டும்பாவமெலாம்-போக்கவேண்டுமினமென்னைக்.கா

### சரணங்கள்.

௧. பண்ணியவினையுமனம்-எண்ணியவினையும்வாக்கில்
நண்ணியவினையுந்தீரக்-கண்ணியவரந்தந்தெனைக் காக்க.

௨. ஆரணனேநீகொடுத்த-தாரணிச்செல்வத்தின்மனம்
பூரணமானேன்பவவி-வாரணசுகந்தந்தெனைக் காக்க

௩. எந்தவேளைமரணமோ - அந்தவேளைவந்துன் அர
விந்தமலரோகிருந்ந - கந்தர அடிதந்தெனைக் காக்க.

௪. பூதாதிகளானவை - பேதகாரணனேநாளும்
வேதநாயகன்பணிபிரக் - கியாதபூரணனேயெனைக் காக்க

## கூரு-இராகம்-கேதாரகௌளம்-திரிபுடைதாளம்

### பல்லவி,

ஈசனேமல-நாசனேமல-வாசனேபிர-காசனே

### அநுபல்லவி.

பாச இருளினை நீக்குவாய்-உன்தன்
பதத்துக்கெனை உற வாக்குவாய். ஈசனே.

### சரணங்கள்.

க. சிறியன்மதிவெறும் ஸ்தூலமே - அதன்
செயலெலாம்அலங் கோலமே
குறிகொள்பாச நிர்மூலமே - செய்து
குணந்தந்திட இதுகாலமே
அறியநானிடும் ஓலமே-செவிப்
பொறிகொண்டுதே வனுகூலமே. ஈசனே.

உ. அடருங்காமங்கொள் பேழையே-நிகர்
ஆகும்உடலெனும் பாழையே
திடமென்றுன்னும்நான் ஏழையே-குறை
தீரக்கற்றறி மோழையே
தொடுசிலேட்டுமங் கோழையே-உடர்ந்
திடுமுன்தொலைப்பவப் பிழையே. ஈசனே.

ங. என்னைக்கெடுத்திடக் கச்சையே-இடை
இறுக்கிக்கட்டிக்கொண் டிச்சையே
முன்னைவருந்திடக் கொச்சையே-கொண்டுன்
முன்வந்திரந்தனன் பிச்சையே
உன்னுமாவரத தியாகமமைபொழி
பன்னும்வேதநா யகன்வெவ்வினையொழி. ஈசனே.

---

## கூசு-இராகம்-ஆநந்தபைரவி-ரூபகதாளம்

### பல்லவி.

நிரந்தரனே - மா - துரந்தரனே-கண
நிர்மலத்துவ-தர்மகர்த்தத்துவ நிரந்தரனே.

### அநுபல்லவி.

பரந்தபேரருள் - சுரந்துகாத்தருள்
வரந்தந்தென்வினை - விரைந்துதீர்த்தருள் நிரந்தரனே.

சரணங்கள்.

௧. சித்தமிரங்கியெள் ளத்தனை நீதனைய
செய்யிற் பிழையேனோ - கன
நித்தனேஎன்பிழை எத்தனைஎன்னினும்
நீங்கித்தழையேனோ - நல்ல
உத்தமம்என்னிடம் சுத்தசரித்திரம்
ஒன்றேபலவிதம் என் துர்ச்சரித்திரம்
நித்தம்என்னெஞ்சம் உடுத்தமால்வஸ்திரம்
நீக்கினனைச்சேர் சௌபாக்கியசமுத்திரம். நிரந்தரனே.

௨. உதிமதிகதிர் முதலெல்லாஞ்செல்லும்
உன் ஆணைவழியே - என்தன்
மதியொன்றே அந்த விதியைக்கடந்து
வளர்க்குமாபழியே - இந்தப்
பொதிமதிக்கேன் தனியரசாட்சியே
புனிதஞ்செய்குவ துன்மெய்ர்மாட்சியே
பதிதனனென்பதற் கென்செய்கைசாட்சியே
பாவனனீயென ஈவாய்அத்தாட்சியே. நிரந்தரனே.

௩. பாரிருள்நீக்காத சூரியனாலேஅப்
பாருக்கென்னசாரம் - ஞான
ஆரியனேஉன்முன் சாரலாமோஎன்
அகத்தில்அந்தகாரம் - நாளும்
சாரமில்லாச் சமுசாரகோலாகலம்
சாருமெனக்கென்றுந் தீராவியாகூலம்
வீரனேநீயறிவா யென்பலாபலம்
வேதநாயகனே நீதருவாய்நலம். நிரந்தரனே.



௩௭. இராகம்-ஆநந்தபைரவி-ஆதிதாளம்

பல்லவி.

அப்போதுனைத்தொழல் அரிதையா-உனை
இப்போதேதொழ அருள்செய்யாய்

அநுபல்லவி.

முப்போதும்உணரு முதலேசுரர்தொழும்
ஒப்பாமரணமுற் றடியேன்உடல்விழும் அப்போ

## சரணங்கள்.

க. திடமாய்யிற்பாறைபோலே திரண்டுகோழைகள்கட்டும்
சிறிதும்பேசாதவண்ணஞ் சேர்ந்திறுகிப்பல்கிட்டும்
படர்ஜீவவாயுவெளிப் படஎங்குமோடிமுட்டும்
பாரிதுவேளையெனப் படுமாயைதொடைதட்டும்
பலங்கொள்உணர்வது கலங்கிநிலைகெட
இலங்குடலைஉயிர் விலங்கிமெலிவுறும் அப்போ.

உ. மனைவிசேய்கடன்காரர் மண்டிவார்த்தைவிரிப்பார்
வகையெமக்கென்னவென்று மனல்கயிறுய்த்திரிப்பார்
மனையிற்பொருளையெல்லா மாவலைபோட்டரிப்பார்
வகையொன்றுமின்றேற்கையால் மணித்தொண்டையை நெரிப்பார்
மடங்குகழல்கர முடங்குசெயலொடு
திடங்கொள்கரணமும் அடங்கிமாளுறும் அப்போ.

௩. அழுகைக்குரலும்பல முழக்கமும்நாளுபேதம்
ஆகப்பலபக்கத்தும் அடக்குமேகடளுதம்
விழுகையுறும்உடலின் வேதனையும்பிரமாதம்
வேதநாயகனே அப்போதுனை உன்னவேதம்
விரிக்கும் இடர்பல தரிக்கும்உடலினை
முரிக்கும் இசிவொடு மரிக்கும்வேளையில் அப்போ.

———(*)———

## ௩அ-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

## பல்லவி.

எவ்வகையிலும் நானே-நல்வழிபற்றி
உய்வகை அருள் கோனே.

## அநுபல்லவி.

செவ்வழிநிற்போர்மனத் தேன்கள்வளரும் பூவே
பௌவமாகப்பேரின்பம் பழுக்குங்கற்பகக்காவே. எவ்வ.

## சரணங்கள்.

க. வறியாக்கிடவென்றலென் குறியகைகளிற்கூலை
வாங்கநீட்டின்உலகும் வானமும்எந்தமூலை
பிறர்நோய்செய்யில்எனக்குப் பெருங்கோபாக்கினிச்சுவாலை
பேதையென்பிழைஎழு திடவேண்டுங்கோடியோலை எவ்வ

உ. நல்வழிநடக்கவென்றால் இருகாற்குந்தளை
நாளுந்துர்வழிநடப்பதில்எனக்குண்டோகளை
புல்வினையேன்செவி பொய்கள்நுழையும்வளை
புண்ணியோபதேசமென்றால் புகஅதில்எதுகளை. எவ்வ.

௩. உன்னைத்துதிக்கவென்றால் உலகில்என்வாய்க்குநோயே
ஊர்வம்புபேசஎனக் குடம்புமுழுதும்வாயே
மின்னைநிகர்பிரபஞ்ச வேதனைநீக்குவாயே
வேதநாயகனுக்குச் சாதகமானதாயே. எவ்வ.

---

௩௩ இராகம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்

பல்லவி.

கதியிதென்முகம் பாரையா
கதிநினையின்றி ஆரையா.

அநுபல்லவி.

மதியுள்ளோர்கள் சுகிக்கும்அமிர்த
வாரியேஅருள் மாரியே. கதி.

சரணங்கள்.

க. உனக்கென்எண்ணம் அந்தரங்கமா
உதவிதான்செய்யிற் பங்கமா
எனக்கிங்கக்ஷய அங்கமா
இன்னமென்ன ஆடங்கமா
தனக்குநிகரில்லாத ஞானசாகரா-குணாகரா. கதி.

உ. அதஞ்செய்யும்வினை கற்கண்டோ
அதைத்தொலைப்பதென்பலங்கொண்டோ
நிதம்நான்செய்வது வீண்கொண்டோ
நீயல்லாற்கதி வேறுண்டோ
பதகமலங்கள் பரவும்பத்தர்கள்-பாக்கியமே-மனோக்கியமே. கதி.

௩. அளைக்குப்பிள்ளைமேற் குரோதமா
அருள்செய்வது பிரமாதமா
வினைக்குநான்முதற் பாதமா
விலக்கஇன்னம் விவாதமா
நிலைக்கும்வேதவிநாயகன்பணி-நீதனே-பிரபோதனே. கதி.

௬௩-இராகம்-கமாஸ்-ரூபகதாளம்.

பல்லவி.

ஜாலம்செய்வதேதோஐயா
சீலமுன்னையொண்ணுதோமெய்யா

அநுபல்லவி.

ஞாலமெல்லாந் தாங்குங்கையா
நற்குணமில்லார்க்குவெய்யா ஜாலம்

சரணங்கள்.

௧. பெண்டுபிள்ளை யோடினமே
பேய்ச்சுனை படர்வனமே
அண்டும் இவரால்தினமே
ஐயையோ நொந்தேன்மனமே. ஜாலம்

௨. பாழுமனமே மற்கடம்
பண்ணும் அகடவிகடம்
ஊழ்வினை தரும்சங்கடம்
ஒழித்துநீ யருள்வாய்திடம். ஜாலம்

௩. நீதிவழுவாச் செங்கோலா
நித்தியசங்கீதலோலா
வேதியர் பரவுஞ்சீலா
வேதநாயகன்சேர்காலா. ஜாலம்

---

௬௪ இராகம் சாமா திரிபுடைதாளம்.

பல்லவி.

வேதநாயகனே எவ்விதமும்உன்
பாதமலர் அருளே.

அநுபல்லவி.

போதநாயகனே பொய்நீங்கிய
புனிதநாயகனே மெய்தாங்கிய. வேத

சரணங்கள்.

௧. எண்ணுமனமேதுர்க் குணங்கொள்பாண்டம்
ஏதும்அறிகிலேன் ஞானகாண்டம்
பண்ணும்பாவங்களே பிரமாண்டம்
பகரும்வார்த்தைகளே அபாண்டம். வேத

உ. மண்ணில்அறு திணம்பூததேகம்
வளர்ப்பதெனக் ககலாஉத்தியோகம்
புண்ணியஉடல் வளர்த்திடும்வைதீகம்
பூண்டிலேன் அருள்வாய்விவேகம். வேத

௩. விதாவிஷதருகி ரகஸ்தாச்சிரமம்
விரும்புவோர்க்கிதில் விலகிடாச்சிரமம்
நீதங்கொண்டேன் இந்தவாழ்விலேபிரமம்
நீங்கவேதநாயகனே அருள்கிரமம். வேத

---

## ௪உ-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

### பல்லவி.

எனக்குக்கட்டியவீட்டை - எனக்குக்கொடாதிருப்ப
தென்னஞாயம்ஸ்வாமி

### அநுபல்லவி.

இனிக்கும்அவ்வீடு செம்தெங்கள்நிமித்தமே
என்னுநீசெய்ய வில்லையோவாக்குதத்தமே
உனக்குநான்பிள்ளை யென்பதுலகப்பிரசித்தமே
உவந்துகேளாயோ என்பிரலாபசத்தமே. எனக்கு

### சரணங்கள்.

க. சித்தவிகாரமுறு வார்க்குச்செய்யிவ்வுலகம்
சிறப்புள்ளதெனின்கோனே - நல்ல
உத்தமர்க்கமைத்தசித்தி யானந்தமுத்தியின்பம்
உணர்வதெப்படிநானே.

சுத்தமணிபொன் அங்கமேதுரும்புகள்கட்டமே
தொல்லுலகின்பமெல்லாந் துன்பப்போல்ஓட்டமே
அத்தமியாசித்திய சூரியர்அன்பர்கூட்டமே
அநுதினம்எனக்கந்த வீட்டினில்நாட்டமே. எனக்கு

உ. முகமுகமாகஉனைத் தரிசிக்கும்பாக்கியத்தை
மொழியநினைக்க எண்ணுமோ - இந்த
இகமிசைமனமொடு புலன்கட்கெட்டாதஅந்த
இன்பம்எப்போது நண்ணுமோ

ஆகமிசைஉன்னஉன்ன ஆனந்தம்பொங்குமே
ஆயிரங்கோடிசூரியர் ஒளிமங்குமே
நிகரறுகீத விநோதங்கள்தங்குமே
நிரதிசயானந்தம் நிரந்தரம்தங்குமே- எனக்கு

௩. இகமனேகட்டினர் குடும்பபிரதிஷ்டைசெய்த
இணையறும்எந்தாயே - நித்திய
சுகமனைதன்னில் பிரவேசிக்கவேநல்ல
சுந்தரம் அருள்வாயே
அகிலலோகப்பிரபஞ்ச நாடகசூத்திரனே
அற்புதபரமநித்தி யானந்தக்ஷேத்திரனே
நிகரறுசௌந்தர நிர்மலகாத்திரனே
நிதம்வேதநாயகன்தொழுங் குணபாத்திரனே. எனக்கு.

௩௩-இராகம்.செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயனே உன் அழகைக்காண - ஐயனே
ஆசைநான் கொண்டேனே.

அநுபல்லவி.

வையமீதுபல அழகையும்
வகைவகையா வகுத்துக்காட்டும். ஐயனே.

சரணங்கள்.

௧. உதயசூரியன் சோமன்தாரகை
உன்முன்னே மின்மினியே
நிதிநவமணி யென்னும்ருப்பைகள்
நிகருமோஉனை இனியே. ஐயனே.

௨. கனியுந்தேனும் பாலுஞ்சீனியும்
கற்கண்டும்கரும்பும் சிறுமை
இனியவுனது தரிசனத்தின்முன்
இவைகள்யாவும வெறுமை. ஐயனே.

௩. செழுமையாகிய வண்ணமலர்கொள்
சிங்கார வனக்காட்சி
அழகின் ஆலய மானஉன்முன்
அதற்கெத்தனையோ தாட்சி. ஐயனே.

௪. அதிசவுந்தர மயில்குயில்கிளி
யாதிபறவைக் கூட்டம்
விதியின் அவை செய்யுன்னழகின்முன்
வெட்கிப் பஞ்சுபோலோட்டம் ஐயனே.

௫. சத்தஸ்பரிச ரசரூபகந்தந்
தான் அல்லாதபொருளே
எத்தன்மைஉன் துருவென்றறிய
இன்பக்காட்சி அருளே. ஐயனே.

௬. பதியில்நீசெய் பலபொருள்களைப்
பார்க்கப்பார்க்கவடிவே
அதிசயம்தரும் உன்தன் அற்புத
அழகினுக்குண்டோ முடிவே. ஐயனே.

௭. பிறந்தநாள்முதல் தாயைக்காணுப்
பிள்ளை தன்னை ஒத்தனே
சிறந்தவேத நாயகாஉன்மேல்
சிந்தையாவும் வைத்தேனே. ஐயனே.

———(*)———

## ௪௪-இராகம்-மாஞ்சி-ரூபகதாளம்.

### பல்லவி.

என்னைநீ ஆளுவாய் - ஏகனே - யோகனே-என்னை.

### அநுபல்லவி.

பொன்னைமாதப்பூவைஎண்ணம்
பூண்டுநான்கெடாத வண்ணம். என்னை.

### சரணங்கள்.

க. யாதனுசரீரமே-யாதுமில்லைசாரமே
வாதபித்தவிகாரமே-வாதனைகள்அபாரமே
மலநிவாரணு-வடிவபூரணு
நலஉதாரணு-ஞானகாரணு. என்னை.

உ. எந்தநாளும்கிலேசமே-என்னெஞ்சிற்பிரவேசமே
பந்தவினையைநாசமே-பண்ணுநீவாசமே
பதிதபாவனு-பரமஜீவனு
அதிகசோபனு - அகிலஸ்தாபனு என்னை.

௩. அன்னைதந்தைநீ அல்லவோ - ஆயிரந்தரஞ்சொல்லவோ
என்னைமாயைகொல்லவோ - எங்குநான் இனிச்செல்லவோ
ஏதபேதகா-இனியசாதகா
வேதநாயகா - விமலநாயகா. என்னை.

---

௪௫. இராகம் சைந்தவி-திரிபுடை தாளம்.

பல்லவி

ஏழைக்கிரங்கவொண்ணாதா - இந்த-ஏழை.

அநுபல்லவி.

ஆழக்கடல்உலகை ஆளும்விநோதா. ஏழை.

சரணங்கள்.

௧. சாடும்பிரசண்டக் காற்றாலே - திசை
தப்பியே அலைபடும் கப்பலைப்போலே
நாடும்பிரபஞ்சமாலே என்னை
நைவிக்காவாடினேன் ஞன்புவிமேலே. ஏழை.

௨. நீசெய்வதெல்லாம் சகாயம்-இங்கே
நிரந்தரம்என்செய்கை யாவும்அநியாயம்
ஈசனேநின்பத நேயம்-எனக்
கெள்ளளவுமில்லை ஈதென்னமாயம். ஏழை.

௩. அற்பசுகத்துக் குழைத்தேன்பாரில்
அநுதினம்ஆயிரம் பொய்சொல்லிபிழைத்தேன்
பற்பலதீவினை இழைத்தேன்-துன்பப்
பாரம்பொறுமலே பரிந்துன்னை அழைத்தேன். ஏழை.

௪. ஆன்மபத்தினிமணவாளா-அகி
லாண்டபிர்மாண்ட அகண்டகோளா
வான்மகிழ் தீனதயாளா-தினம்
மகிழ்வேதநாயகன் வணங்கும்பொற்றாளா. ஏழை.

### சசு. இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

பல்லவி.

கருணாகரப்பரம்பொருளே அடியனைக்
கண்பார்த்தருள்வாயே.

அநுபல்லவி.

இருணாசஞ்செயும் இரவிசமான
தெருணாடியதேஜோமயம்ஆன. கருணா.

சரணங்கள்.

க. தோன்றினநாள்முதல் சுகுணமொன்றறியேன்
சொற்பனந்தன்னிலுந் துர்க்குணம்பிரியேன்
ஈன்றவனீயென என்றுமேகுறியேன்
என்னசெய்வாயோவென்றேங்கினேன்சிறியேன். கருணா.

உ. தரணியில்நானொரு தருவெனமுளைத்தேன்
தமகுணயாவுமே சாகையாய்க்கிளைத்தேன்
கருமமாகியவிஷக் கனிகளைவிளைத்தேன்
கண்டனைசெய்வை யென்றஞ்சியேகளைத்தேன். கருணா.

ந. நிகிலலோகங்கட் கெல்லாநீயதிகாரி
நிச்சயமாஎன் மனம்நினக்கொருபாரி
அகிலந்தனிலே அந்தமனம்அகங்காரி
அடக்கிஆளாவிட்டால் அழியாளோநாரி. கருணா.

ச. அழகுக்கல்யாணமான அமிர்தசுந்தரமே
அன்பருக்கன்மழை பொழியுங்கந்தரமே
தொழுதிடும்வேதநாயகன் சுதந்தரமே
துணைநீயுனை நம்பினேன்நிரந்தரமே. கருணா.

---

### சஎ. இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

ஏனின்னம்தாமதமையா
என்னிடம்வர. ஏனின்.

அநுபல்லவி.

தானேஉமக்குமுத்தித் தலமொன்றுமில்லையோ
வானமுத்தனாவிட்டு வரமனமில்லையோ. ஏனின்.

## சரணங்கள்.

க. சூரியனைத்தூண்ட அகன்றீரோ - அந்தச்
சோமனுக்கொளிதரச் சென்றீரோ
பாரினைப்புரட்டியே நின்றீரோ - அதில்
பகல் இரவுண்டாக்க முயன்றீரோ
காரிலிருந்து கனமழைசொரிந்தீரோ
கற்பகத்தில்சிசுக்களையே புரிந்தீரோ
சாரும்பல்லுயிர்க்குயிராய் விரிந்தீரோ
சர்வலோககாரியஞ் செய்துதிரிந்தீரோ, ஏனின்.

உ. அண்டகோடிகளைத் தூக்கினீரோ - நவம்
ஆகச்சிலஅண்டம் ஆக்கினீரோ
கண்டகர்உலகை நீக்கினீரோ - கடல்
கரையைக்கடவாமல் தேக்கினீரோ
அண்டும்பல்லுயிர்க்கமு தூட்டுகின்றீரோ
ஐம்பூதங்கட்கும் வேலைகாட்டுகின்றீரோ
மண்டுங்கனிக்குச் சுவைகூட்டுகின்றீரோ
மலருக்குப்பலவண்ணந் தீட்டுகின்றீரோ. ஏனின்

ங. மரஞ்செடிபயிர்கள் நிறைத்தீரோ - அவை
வளரவேதண்ணீரை இறைத்தீரோ
சுரர்கள் இசைகேட்டுக் களித்தீரோ - நல்ல
தொண்டர் இதயத்தில் ஒளித்தீரோ
பரமகிருபாகர பரஹிதநேசரோ
ப்ரமதகண்டன பாபவினாசரோ
சருவவிநோத சராசரவாசரோ
தாசன்வேதநாயகன் தன்பிராணேசரோ. ஏனின்.



## சஅ. இராகம்-மத்தியமாவதி-ரூபகதாளம்.

### பல்லவி.

இவளவு தான்ஐயனே - அதிகம்அல்ல
இரங்கிநீ யருள்மெய்யனே.

### அநுபல்லவி.

அவனியில்வளரும் மூவாசையைப்பரிகரி
எவளவுமே துன்பம் இல்லாமல்ஆதரி
இதயமலர்தரி - விதனமதுபிரி
நிதமும்அருள்புரி இதுவேசரிசரி. இவளவு.

சரணங்கள்.

௧. எனைஎந்நாளும் நீ நீங்காதே - நான்போம்
இடமெங்குங்கூடவரபின் வாங்காதே
வினையனென்றென்மேற்கோபம் வீங்காதே - மன
வேதைசுமக்களன்றால் தாங்காதே
நினைவிலுந்தீதைநான் நினையாமற்பார்த்திரு
நித்திரைசெய்யும்போதென் பக்கதிறில்காத்திரு
நெடியவிலைபெறு - கொடியபிணைழபொறு
அடியன்மனமுறு - கடியதுயர்அறு. இவளவு.

௨. மாயையில்மனம்புக ஒட்டாதே - என்னை
வஞ்சனைக்காரனென்று சுட்டாதே
ஆயிரம்தண்டம் என்சொல்தட்டாதே - உன
தனுக்கிரகமின்றி நலங்கிட்டாதே
நாயேன்விரும்பிய நல்லவரங்கள்கொடு
நரகைஅடைத்துமோக்ஷ நாட்டைத்திறந்துவிடு
கனவுகொடுகொடு - சினமுப்விடுவிசி
தினமுமகிழ்வொடு - கனசுகுணம்இடு. இவளவு.

௩. நலமன்றிக்குறையை ஆராயாதே - பெரு
நன்மைகள்கொடுப்பதில் ஓயாதே
பலவேலைஇட்டேனென்று காயாதே - அற்ப
பாக்கியநரகநான்கேட்கினும் ஈயாதே
புலனில்வேதநாயகன் புகழும்சுகுணசிலா
பூதபவிஷியவர்த்த மானமெனுந்திரிகாலா
போதமழைபொழி - மாதர்மயலழி
பாதகமதொழி - ஏதமறவிழி. இவளவு.

---

௪௯ - இராகம்-சாரங்கா-அடதாளசாப்பு.

பல்லவி.

ஆதரித்திடநல்ல தருணம் - எனை
தையாஉனக் கனந்தஞ்சரணம். ஆதரி.

அநுபல்லவி.

பாதகநாசன - பரமகிருபாசன
சாதகமோசன-தர்மப்பிரயோஜன. ஆதரி.

## சரணங்கள்.

க. என்பழிமறைப்பதில் யானையதப்பாதாளம்
இதரர்பழிதூற்றலில் என்வாய்பெரியமேளம்
அன்பின்மனப்பேராசை அம்புவியினும்நீளம்
அண்டம்வசமானாலும் அடங்காப்பெரும்வேதாளம்
ஆட்டிமயல்வலை - பூட்டிஅநுதினம்
கோட்டிசெயும்வினை - ஓட்டிஅடியனை. ஆதரி.

உ. ஓடிஅலையநெஞ்சுக் குலகமும்வானும்அற்பம்
உன்னிடம்வரவென்றால் ஒழியாதஅசந்தர்ப்பம்
தேடிநற்கருமங்கள் செய்வதுங்கஜகர்ப்பம்
தீவினைசெய்வதேஎன் சிந்தனையின்சங்கற்பம்
திருத்தமுடனேஎன்-கருத்துநலமிசைப்
பொருத்தமுறச்செய்து - வருத்தந்தொலைத்தெனை. ஆதரி.

ங. என்குறைகாணவென்றால் என்னிருகண்ணும்ஊனம்
இதரர்பிழைகாணக்கண் இரவிகோடிசமானம்
வன்கண்மொழிகளுக்கென் வாயேமுக்கியஸ்தானம்
மதுரச்சொல்பேசவென்றால் மாறுததீர்க்கமோனம்
வாதமொடுபல - பூதகாரண
வேதநாயக - நீதனேஎனை. ஆதரி.

---

## ரு௰-இராகம்-நாதநாமக்கிரியை-திரிபுடை-தாளம்

### பல்லவி.

உன்னைப் பிணைஞ்ஜயனே - எனையாதரி. உன்னை.

### அநுபல்லவி.

உன்னைநம்பியஏழை - தன்னைமுகம்பாராமல்
அன்னைபிதாவே நீ - கைவிடலாமா
நான் கெடலாமா
துன்பப்படலாமா. உன்னை.

### சரணங்கள்.

க. தனமுமின்னார்கள்புவனமும்உலகவாழ்வின்
கனமும்வேண்டிலன்இது தேராயோ
தினமும்உனைக்கருது மனமும்உனதுதரி
சனமும்வேண்டினன் அருள் கூராயோ
மருள் தீராயோ
பொருள் தாராயோ. உன்னை.

உ. படிமீதினில்எண்ண முடியாஉதவிகள்
அடியேனுறச்செய்த பெரியானே
கொடியேன்உனை அனுகாநொடியாகிலுந்தொழும்
படியே அருள்நலம் பிரியானே
நாயர்க் குரியானே
தீயர்க் கரியானே. உன்னை.

ந. அயமேபெருங்கல்லின் மயமேயெனும்இரு
தயமேமெழுகென உருகாதோ
ஸ்வயமேபரமாதி சயமேவேதநாயகன்
நயமேவினைசெய்வம் பருகாதோ
துன்பு கருகாதோ
இன்பு பெருகாதோ. உன்னை.

---

## ௧௩. இராகம்-பந்துவராளி-ரூபகதாளம்

### பல்லவி.

கடைக்கண்ணால் எனைப்பாராய் - உன
தடைக்கலம் வினைதீராய்.

### அநுபல்லவி.

கிடைக்கொண்ணாப் பதந்தாராய் - நலம்
படைக்கவே அருள்கூறாய் - அருட்
கொடைக்குநாளென்னவேயவதரித்த
கோலாகல-மூலா அநு-கூலா குண-சீலா-நிதம். கடைக்.

க. வஞ்சகமாயையில் ஆழ்ந்தேன் - ஒரு
தஞ்சமென் றுன்னடி தாழ்ந்தேன்
அஞ்சலென்றேஎனை ஆதரித்தாளுவாய்
ஐயா மிக-பொய்யாய்மனம் - நையாதருள்-செய்யா ஒரு கடைக்.

உ. ஐயனேதீரா யென்பாவம் - அருள்
செய்யஉனக் கென்னலோபம்
வையகமந் வளர்அண்டம்யாவினும்
வாசாபுவ-நேசாமற நாசாபிர-காசா ஒரு கடைக்.

௩. அஞ்சலென்னில்உன் வாய்நோமோ - ஏழை
நெஞ்சம்வருந் திடலாமோ
பஞ்சமோனகைப்பொருள் கொஞ்சமோபூபரி
பாலாஅரு - கூலாஒரு-மேலாமுதல் - நூலா - ஒரு. கடைக்.

௪. இத்தனைமிதினில் நீயே - நல்ல
பத்தனைக்காக்க வந்தாயே
சித்தமுவந்தெனை நித்தமும் ஆளொளிர்
தேகாகண - யோகாதுகி - தியாகாதனி - ஏகா - குளிர். கடைக்.

௫. பூதலம்போற்றும் பொற்பாதா - அரு
மாதவஞானப் பிரசாதா
வேதநாயகன் பாடுந்தமிழ்க்கருள்
வேதாஉயர் - நீதாகண - தாதாநப - போதா - உன். கடைக்

---

## ௰௨. இராகம்-அசாவேரி-திரிபுடைதாளம்.

### பல்லவி.

பாசத்தால்மனம் வாடினேன் - உந்தன்
வாசத்தாள்மலர் கூடினேன். பாசத்.

### அநுபல்லவி.

நேசத்தோர்கள்கை வல்லியமே - உயர்
நிர்மலாதித்த துல்லியமே - கண
மாசற்றோங்கும் பிரபல்லியமே - ஜெகம்
மகிழும்பக்தவாற் சல்லியமே - மல பாசத்.

### சரணங்கள்.

௧. நினைவிலேன் பிழையாவுமேஎன்ன
நினைக்குந்தானென்ன சாத்தியமா
எனைவருக்கும்இந்திரியப்பேயதனுக்
கித்தனை ஆகாத்தியமா
வினைஎனக்கு விரோதியா - என்றும்
விலகிடாக்கர்மவியாதியா - கொடு
மனமுமேபிரதிவாதியா - கெட்ட
மாயைஎன்னுதாயாதியா - ஐய பாசத்.

எ

உ. இருதலைக்கொள்ளி எறும்புபோலெனக்
கிடைவிடாமன வாட்டமே
மருவும்பந்தப்பசாசு தன்னொடு
மாறிடாத போராட்டமே
கருமமாயா விகாரமே - செய்யும்
கலகஜாலம் விஸ்தாரமே - நல்ல
தருமம்எனக்குத் தூரமே - பின்னும்
தப்புகள்கற்பக பாரமே - ஐயா பாசத்.

ந. வளர்கல்லியாணத்தில் தாலிபூட்டிட
மறக்குமூடர்கள் போலவே
தளர்பிரபஞ்சவியாபாரத்தால்உன்தன்
தாள்மறந்தனன் சாலவே
உளவியாதிக்காரோக்கியமே - நிதம்
உன்னுவோர்கள் மனோக்கியமே - நலம்
விளையமாமறை வாக்கியமே - தொழும்
வேதநாயகன் பாக்கியமே - பந்த பாசத்.

---

## ருந-இராகம்-கன்னடகௌளை-ஆதிதாளம்.

### பல்லவி.

ஆதிபரமநாதா - ஞான - ஜோதிதரஜெகன்னாதா - ஆதி.

### அநுபல்லவி.

பூதலம்பரவும் விநோதனேகனஅ
நீதமாம்இருள் பேதமாகவே ஆதி.

### சரணங்கள்.

க. காமக்குரோகமதம் லோபம் - அகங்
காரம்பொய்மாற்சரியங் கோபம் - இன்னும்
பூமியிற்பலபலபாபம் - செய்யும்
புல்லன்மனம் அவித்தியாரூபம் - நல்ல ஆதி.

உ. பெண்டுபிள்ளைகள் சமுசாரம் - முதற
பேசும்லௌகிக வியாபாரம் - தன்னில்
மண்டுமேமோகாந்த காரம் - துயர்
மாற்றியருள்வை நிர்விகாரம் - நல்ல ஆதி.

ங. பாவக்கடல்கடக்கும் கலமே - தொண்டப்
பயிர்கள்வளருந்தெய்வ நிலமே - கன
நாவலர்போற்றிடும் நிர்மலமே - வேத
நாயகநானுன் அடைக்கலமே. ஆதி.

ருச. இராகம்-கரகரப்பிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

இந்தவரந்தருவாய் - எனக்
கெந்தவரங்களு மில்லையென்றாலும் இந்த.

அநுபல்லவி.

சுந்தரமாகத் துலங்குந்தெய்வீகனே
சந்ததமும்புவி தாங்குந்நிர்வாகனே இந்த.

சரணங்கள்.

க. காயநிமித்தஞ் சலங்கினையாமல்
கண்டவர்க்கெல்லாம்நான் தொண்டுசெய்யாமல்
மாயாப்பிரபஞ்சத்தில் மாட்டிவையாமல்
மாதாகண்ணம்பெண் மனதில்தையாமல். இந்த.

உ. எங்கெங்குமேஉன் னுருவாய்மின்ன
எண்ணம்வேறின்றி உனைமன்முன்ன
மங்களநாமமென் வாய்நிதம்பன்ன
வார்த்தைகள்யாவுமுன் வார்த்தையாய்மன்ன இந்த.

ங. சுத்தசைதன்னிய நிலைமையில்சார
தோஷகர்மானுபந் தங்களுந்தீர
அதத்னேநித்த முனக்கன்புகூர
ஆனந்தவீட்டிலே நான்வந்துசேர இந்த.

ச. சூதுபொறாமைபொய் கோபமில்லாமல்
சோரமுலோபந்துன் மார்க்கங்கல்லாமல்
வேதநெறியை விலகிநில்லாமல்
வேதநாயக விளம்பஞ்சொல்லாமல் இந்த.

## ருரு. இராகம் - கமாஸ் - ரூபகதாளம்.

### பல்லவி.

ஏகபராபரனே - கருணைப்பிர
வாகமனோகரனே ஏக.

### அநுபல்லவி.

தேகமுற்றும்பல - மோகஉபாதிகள்
ஏகஎனக்கு விவேகமருந்தருள். ஏக.

### சரணங்கள்.

க. சஞ்சலமானேனே - மனம்நொந்து
தளர்ந்துபோனேனே
அஞ்சலெனத்தானே - அடியனை
ஆண்டருள்வாய்கோனே
பஞ்சபூதாதிபிர - பஞ்சமெலாஞ்செய்து
தஞ்சஞ்செயும்விஷ்பிர - பஞ்சப்பொருளான. ஏக.

உ. சங்கடமாற்றாயோ-எளியேன்
தன்முணங்தோற்றாயோ
இங்கிதஞ்சாற்றாயோ - தமியனை
யேகனாயேற்றாயோ
அங்குமிங்கும்புவி - எங்கும்உயிரெனத்
தங்கும்படி அருள் - பொங்குகுணாகர. ஏக.

ங. நேயர்சகாயனே - அருமறை
நீதிசொல்வாயனே
தூயநிகாயனே - அமரர்கள்
சூழ்சமுதாயனே
மாயவிஷயாதி - நோயணுகாமலே
தாயெனவேவேத நாயகனே ஆளும். ஏக.



## ருசு. இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

### பல்லவி.

கருணாகடாக்ஷந் செய்வாயோ - சுவாமி கருணா.

### அநுபல்லவி.

மருணாசமாகவே மகிழ்வாகநீயே கருணா

சரணங்கள்.

க. அநியாயம் உலகவிர்த்தாந்தம் - இதில்
அழியாதவண்ணம்நீ அருள்வை உபசாந்தம்
தனிஉன்றனோடு மேகாந்தம் - கொள்ள
சார்வதாகாலமும் மௌனதுசித்தாந்தம். கருணை.

உ. நாமரூபகமாம் பிரபஞ்சம்-ஆன்ம
நன்மையை அழிக்கும் எந்நாளும்இதுநஞ்சம்
காமவிஷயாதிகளில் நெஞ்சம்-நாளும்
கலங்கினேனின்பாத கமலமேதஞ்சம் கருணை.

ந. போதாந்தநிலைமை யுறுநீதவே-நல்ல
புவனகோடிகள்செய் தளிக்கின்றகோவே
வேதாந்தரசமொழுகுகாவே-நிதம்
வேதநாயகன் இதயவண்டுவளர்பூவே. கருணை.

---

ருஎ. இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆதிபரமநாதா-நல்ல
அற்புதநற்பதம்பெறப் பொற்பதம்எனக்கருள்செய் ஆதி.

அநுபல்லவி.

ஓதரும்உயிர்க்குயிராகிஎங்கும்நிறையும்
பூதசராசரப் பொருள்கள்எல்லாம்உறையும் ஆதி.

சரணங்கள்.

க. சீவன்பிழைக்கும்வழி அறியேனே-நான்
தெற்குவடக்கறியாச் சிறியேனே
பாவலகரிகொண்ட வெறியேனே-பந்த
பாசக்களையைவெட்டி எறியேனே
ஆவலுடனேஎங்கும் அலைந்தகம்வெம்பினேன்
தேவநாயகனே உன்திருவடிநம்பினேன். ஆதி.

உ. ஐயனேஎனக்கருள் ஊட்டாயோ - கெட்ட
அகங்காரமெனும்பேயை ஓட்டாயோ
உய்யவழிஎனக்குக் காட்டாயோ-எந்தன்
உள்ளத்தில்உன்பதத்தை நாட்டாயோ
பொய்யுலகநடையைப் பொருளெனநாடினேன்
மெய்யறிவில்லாமலே மிகமிகவாடினேன். ஆதி.

௩. அண்டங்கள்படைத்தளித்தழிப்போனே-கணம்
ஆகப்பல்கோடிகாலங்கழிப்போனே
தொண்டர்மனத்துயரம் ஒழிப்போனே - நல்ல
சுகமுத்தரோடுகூடிச்செழிப்போனே
அண்டும்வேதநாயகன் அகத்தொளிர்ஜோதியே
மண்டும்வினைகளெல்லா மாற்றுதல்நீதியே. ஆதி.

---

௫அ - இராகம்-பரசு-அடதாளசாப்பு.

பல்லவி.

ஜெகநாதா-வினை-அகலாதா ஜெக.

அநுபல்லவி.

பகலோனென அரும் பவஇருள்நீக்கும் ஜெக.

சரணங்கள்.

௧. பரிதாபம்பரிதாபம் ஐயாஎன்னிலைமை
பஞ்சப்புலாதியர்க் கார்தந்தார்தலைமை
தனாமிசைஎன்செய்கை யாவுமேபுலைமை
தந்தருளினிஞான சாஸ்திரப்புலமை. ஜெக.

௨. அநுகூலசத்துருவாகுமென்னுள்ளம்
அநுதினஞ்செய்வதெல்லாம் பெருங்கள்ளம்
தினமுமேபடிந்திடுந் தீவினைப்பள்ளம்
தீர்த்தெனையாட்டு வைதிருவருள்வெள்ளம். ஜெக.

௩. ஈசனே அறநெறி எனக்கென்றும்விலக்கம்
என்பிழைகளை எண்ண இல்லையேஇலக்கம்
கூசியேநான்மிகக் கொண்டேன்கலக்கம்
குணவேதநாயகா கொடுத்தருள் துலக்கம். ஜெக.

---

௫௯-இராகம்-மத்தியமாவதி-திரிபுடைதாளம்.

பல்லவி.

இரக்கஞ்செய்வாயோ - ஐயா - என்மேல் இரக்கம்.

அநுபல்லவி.

இரக்கஞ்செய்வாயோ-புரக்குமெந்தாயே
ஏகமாகிய-யோகபூரண-பாகமேபெற-மோகமோ-அற இரக்.

க. தேகநிமித்தம் - செய்வதநர்த்தம்
ஏகப்பிரசித்தம்-ஏங்கினேன்சித்தம்
இன்பமேவிய-வின்பதார்ப்புய
அன்புதங்கிட-தன்பமக்கிட இரக்

உ. நாஞெருமூடன்-நாயினுங்கேடன்
ஈனர்கள்சீடன்-என்றும்பொய்வேடன்
ஈனமும்அவ-மானமுஞ்செட
ஞானமுங்கன-மோனமுந்தொட இரக்

ங. உலகவியாபாரம்-ஓயாவிசாரம்
கலகம்அபாரம்-கர்மவிகாரம்
கஷ்டமும்கன-நஷ்டமும்பெறு
துஷ்டனுன-திஷ்டனுகவே. இரக்

ச. தாசர்கள்நேசா-தர்மவிலாசா
பாசவிநாசா-பாக்கியப்பிரதேசா
பாதமேதொழும்-வேதநாயகன்
மீதருள்மற-வாதநாதனே. இரக்.

---

## சுஙு-இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

### பல்லவி

பரனே-பக்தர்சுதந்-தரனே-நாளும்
பக்ஷம்வைத்தென்னைசர்-ரக்ஷிணைசெய்தருள். பர

### அநுபல்லவி.

இரவிகோடியென ஒளிவீசிடும்
ஏகஅநேக வைபோகநிர்தேகதற் பர

### சரணங்கள்.

க. உன்னையல்லால்கதி-பின்னையிலையென
ஞனக்குத்தெரியாதா-நாளும்
உற்றதன்பிள்ளையைப்-பெற்றதாய்தள்ளின்
உலகஞ்சிறியாதா-மேகம்
தன்னைப்பயிர்வேண்டி-முன்னே அருமழை
தானேசொரியாதா-அந்தத்
தன்மைபோல்நீஉயர்-தன்மையுதவியென்
தாபம்பரியாதா

இங்கிலமீதிலென்னைப்போலோர்ஜடன்
இல்லையேயைங்கிளிச் சொல்லையுற்றுநடன்
மன்னிமோகக்கடல் தன்னில்விழும்விடன்
மாறுமூன்றுறும் வந்தாறுவறுங்கடன். பர.

உ. நீவிய அண்டங்கள் - மேவிஆகாயத்தில்
நிற்கச்செய்வதாய்நீயே-எந்தன்
நெஞ்சம்உன்தாளிணைக்-கஞ்சம்பதிந்திட
நீவரம்ஈவாயே-உனக்
கோவியமோஇது-காவியங்கொள்ளாரும்
உத்தமஎந்தாயே-எனக்
குன்னைத்தருமட்டும்-பின்னை அலட்டா
தொழியுமோ-என்வாயே
தீவினைநாசனெனப்புகழ்மாலையே
சேர்ந்தஉனக்கென்ன சாந்தர்கண்வேலையே
பாவியென்பாலுண்டு வேலைபல்காலையே
பட்டேன்பொய்விட்டேன் கும்பிட்டேன்உன்காலையே. பர.

௩. தீதகலும்பஞ்ச பூதம்வளர்சர்வ
சாதகபூமியே - வினை
தீர்ந்திடவேஞானக் காந்திசொரியுஞ்
சர்வாந்தரியாமியே-என்றும்
வேதநாயகன்மீதருள்மறவாத
ஸ்வாமியே-உண்மை
விளங்கவேபல வளங்கள்சாரும்நிஷ்
களங்கநேமியே
போதனேநீங்காயென் பாதகவெட்டையே
பொய்யுருவாகிய மெய்யெனுங்கட்டையே
நாதனேநீங்குமுன் சாதகநிட்டையே
நண்ணிடப்பண்ணுவாய் புண்ணியப்பிரதிஷ்டையே. பரனே.

---

சுக. இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்

பல்லவி.

இன்னம்பராமுகம் ஏதோ - என்தன்
முன்னம்வந்தாள ஒண்ணாதோ. இன்னம்.

அநுபல்லவி.

தன்னவமாரட்சிக்கத் தாமோகங்கணமே
தரித்தவனேஎனை ஆதரித்தல்வங்கணமே. இன்னம்.

௧. யார்க்கோசொல்வதுபோல் நீ தட்டை - செய்யில்
எப்படித்துலைப்பேன் எனகன்மக்கட்டை
மார்க்கமுடனே நீ மெய்ஞ்ஞானநிஷ்டை-தரும்
மட்டும் நான்விடுவேனோ என் அலட்டை
மூர்க்கவினைகளுக்கு நானொருகடையோ
மூடமனமுமாயையும் ஒருகைகயோ
தீர்க்கமாகவுனை நான் அடுத்ததுபொய்யோ
தெய்வமே நீ கைவிடில் என்செய்வேன்-ஐயோ. இன்னம்.

௨. தீனருக்குதவுவதே தியாகம்-பெருஞ்
செல்வருக்கீவது துர்விநியோகம்
ஞானமுள்ளோர்க்குள் அருள்பிரவாகம்-பின்னும்
நலம்அவர்க்கீவதில் என்னுபயோகம்
ஈனனெனக்கு ஞானசையோகம்
ஈவதுவேநல்லதியாகப்பிரயோகம்
நானுன்சந்நிதி அதிலென்னசந்தேகம்
நான்விடேன்விடேன் பூர்வார்ஜிதபாகம் இன்னம்.

௩. பிள்ளைக்கும்தாய்க்கும் உண்டோபிணக்கு-மிகப்
பெருகும்உன்கருணைக் குண்டோகணக்கு
கள்ளமயலுறு மென்மனக்குணக்கு-நீக்கி
கனங்கொள்நன்மார்க்கத்தில் எனையிணக்கு
தள்ளரிதாகிய பரமசத்துவமே
சாட்சாதுலகெங்கும் விளங்குந்தத்துவமே
விள்ளரிதாகிய சர்வஞ்ஞத்துவமே
வேதநாயகன் தனக்குரியசொத்துவமே. இன்னம்.

---

௫௨ - இராகம்-ஸ்ரீராகம்-அடதாளசாப்பு.

பல்லவி.

வேதநாயக - நம்பினேன் உனை வேத

அநுபல்லவி.

ஏதமும்விப - ரீதமுங்கெட
நீதமுங்கன - போதமுங்கொடு வேத

அ

சரணங்கள்.

௧. தினமும்உன்பணிவிடையே-நான்மறவாமல்
செய அருள் நன்னடையே
இனமாகும்அருட்கொடையே-வழங்கிட
வுனின்னமுந் தடையே
கனமுமேலவர் - இனமும்நிர்மல
மனமும்உன்தரி-சனமுமேயருள். வேத

௨. பொய்வளர் மெய்க்கும்பமே-உடையமுன்
போதிபுண்ணி யாரம்பமே
தெய்வநிராலம்பமே-என்கவிகளைச்
செவிகொண்டு சிரக்கம்பமே
செய்குவாயுளம்-வைதவாயருள்
பெய்துவாய்வினை-எய்குவாயுயர். வேத

௩. தயைசெய்யிற் பொல்லாங்கா-என்தனையாளத்
தாமசஞ்செயல்பாங்கா
பயன்உதவிடில்தீங்கா-வேதநாயகன்
பரவுங்குணதராங்கா
நயமும்ஆணவ-ஜெயமும்நாளும்அ
பயமும்பாதபங்-கயமுமேயருள். வேத

---

௬௩. இராகம் - ஆகிரி-ரூபகதாளம்.

பல்லவி.

நாதனே தயைபுரிவாய் எனக்குமெய்ப்
போதமா மழைசொரிவாய். நாத

அநுபல்லவி.

நிதகல்பரம்பர-திவ்யகுணாடம்பர
ஓதருஞ்சுயம்பர-உலகமுடன் அம்பர. நாத

சரணங்கள்.

௧. நண்ணிநல்வினைகளைப்-பண்ணியறிகிலாத
காண்நரன் போலியா-இந்த
மண்ணின்மிசையெனக்கும்-புண்ணியமென்பதற்கும்
மத்தியில்வேலியா-என்தன்
எண்ணமெல்லாங்கறுப்பே
யெனக்குன்னடிவெறுப்பே
பண்ணுதே நீமறுப்பே
புரிந்தாள்வதுன்பொறுப்பே. நாத

உ. என்பாட்டில் இரங்காமல்-உன்பாட்டில்கேம்மா
இருந்திடில் அதுதகுமா-என்றும்
தன்பாட்டில் மகிழ்ந்தோனே இன்பூட்டிங்கதியுந்தன்
தயையின்றிக் கைபுகுமா-என்தன்
அன்பெல்லாம் வெறும்பேச்சே
அறவென்பதுமேற் பூச்சே
துன்பப்பிரளயம் நீச்சே
சொல்புவி எங்குமேச்சே. நாத

௩. நினையளவும்நன்னெறி-தனையறியாதநான்
தீவினைக்கேயிலக்கா-பாரில்
நினையன்றிமற்றெவையும்-வினையுள்ளன்னெஞ்சுக்கு
நீமாத்திரம்விலக்கா-நன்மை
புனையும்நீதிப்பிரமாண
புவனகோடி நிர்மாண
வினயநித்திய கல்யாண
வேதநாயகன்பிராண. நாத

---

௬௨. இராகம்-பியாகு-ஆதிதாளம்

பல்லவி.

தஞ்சம்நீயே - தயைபுரிவாயே - தஞ்சம்.

அநுபல்லவி.

அஞ்சலென்றேதினம்-ஆளும்எந்தாயே. தஞ்சம்.

சரணங்கள்.

௧. தினமனவேதை-சேர்ந்தநான்பேதை
உனதடிப்போதை-உறஅருள்பாதை தஞ்சம்

உ. பாதகபஞ்சன-பண்டிதரஞ்சன
போதககஞ்சன-புண்ணியநிரஞ்சன. தஞ்சம்

௩. தருமசிங்காரா - சருவசங்காரா
வரும்வேதநாயகன் - மனஅலங்காரா. தஞ்சம்

---

௬௫-இராகம்-பரசு-ஆதிதாளம்.

## பல்லவி.

நீயேகதிஎனக்குன்-அருள்கூடோ-தந்தை
தாயேநின்னை அல்லது துணையாரோ. நீயே

## அநுபல்லவி.

தூயகருணைமழைசொரிகாரே
சொல்அரு-நலமுறு-தலமிசை-நிலவொண
மலஇருள் செலஅருள்-அலரும்உதாரா. நீயே

## சரணங்கள்.

௧. முத்தியென்பதேவர்க்குஞ் சமுதாயம்-அது
முத்தர்மட்டுக்கும்என்ப தென்னஞாயம்
நிதியனேவிக்கவேனோ என்தாயம்-நீ
நீதியின்படிசெய்குவாய் விதாயம்
சத்தியனேஏதோ உன் அபிப்பிராயம்
தகவென்-தகமிசை-மிகாதி-புகஅருநம்
இகபர-சுகமருள்-அகல்ஜீவநாதா. நீயே.

௨. வாழுமனைதந்திடில் வேண்டாமே-என்று
மாநிலத்துண்டோ மறுப்பவர்தாமே
ஆழவேநீயெனது மனப்பூமேல்-குடி
ஆகிடின்உனக்கென்ன குறைவாமே
சூழநீகுடியுறில் வினைபோமே
துதிபுரி-விதியினர்-சதியெனும்-நிதிபெற
அதிதயை-பதிவுறும்-அதிசயயோகா. நீயே.

௩. சாகமேனஎன்துயர் தெரியாயோ-நல்ல
சர்வாந்தர்யாமியெனும் பெரியாயோ
பாதகம்அறஅருள் புரியாயோ-பரி
பக்குவஞானமழை சொரியாயோ
வேதநாயகன்மனந் தரியாயோ
மிடலுறு-சுடரவன்-உடுபதி-தடவரை
கடவிட-முடன்இடர்-கெடஅடர்-தேவா. நீயே.

## கூகூ. இராகம் பூபாளம்-ரூபகதாளம்.

### பல்லவி.

தேவாதிதேவே-திருவருள்
செய்தென்னை-காவே தேவா

### அநுபல்லவி.

ஜீவசம்ரக்ஷணை செய்யுங்கிருபாநிதியே
தினந்துஷ்டர்கள்-இனஞ்சுட்டவர்
முனஞ்சிஷ்டர்கள்-இனஞ்சுட்டமர் தேவா

### சரணங்கள்.

க. பாழுமனமேசுத்த பாஷாணம் - பெரும்
பாபமென்றால் அதற்குக்கலியாணம்
வாழும்இந்நாளொழிந்து நிரியாணம்-கிட்டி
வருமுன்னம்அருள்புண்ணியப் பிரமாணம்
ஏழையென்செய்கையுன்னில் எனக்குமேவரும்நாணம்
இழைக்குஞ்சுகம்-அழைக்குந்தகை
தழைக்கும்படி-பிழைக்கும்படி தேவா

உ. அருள்செய்யின் அலதுன்னைவிடுவேனோ-உனை
அன்றிமற்றோரைக் கும்பிடுவேனோ
மருவுமயலிற்சிக்கிக் கெடுவேனோ உன்பால்
வழக்கிட்டிரக்கப்பயப் படுவேனோ
மருள்செயும் பொருளைநீ-வழங்கினுங்கொடுவேனோ
மனந்தந்திடும்-அனந்தந்துயர்
முனஞ்சிந்திடு-கனந்தங்கிட தேவா

ரு. சிஷ்டபாலகங்கண தாரணனே-பெரும்
தீயபசாசகண மாரணனே
துஷ்டகண்டன மந்திரோச்சாரணனே-நாரூந்த
சுயம்பிரகாச நிஷ்காரணனே
இஷ்டன்வேதநாயகன்-ஏதசிவாரணனே
இணங்கண்டர்கள்-சணங்கண்டடி
வணங்கும்படி-குணங்கொண்டுயர் தேவா

சுஎ. இராகம்-நீலாம்புரி-ஆதிதாளம்.

பல்லவி.

ஏகாதிபரனே-அருள்புரி-யோகாதிகரனே

அநுபல்லவி.

ஆகாமியமுறும்-மாகாமியம்அறும்
அகணிதசிற்பா-அதிகுணதற்பர
இகபரநற்பத-இணையறும்அற்புத ஏகாதி

சரணங்கள்.

க. பழிக்குநான்குருபீடம்-பத்தனைப்போல்நான்
பரிப்பதுவெளிவேடம்
அழிக்கும்பொய்வாய்ப்பாடம்-கொடுமாயைக்கெண்
அகமேநடனகூடம்
செழிக்கும்வரங்கள்ஈவாய்
சிந்தையிற்குடியாவாய்
தினகரசுந்தர-திருவளர்மந்தர
அனகநிரந்தர-அகிலதுரந்தர ஏகாதி

உ. படியாக்கொடுநெஞ்சமா-ஐயனேஅது
படருந்துற்குணபுஞ்சமா
அடியேன்துயர்கொஞ்சமா-வரப்பிரசாதம்
அருள்உனக்குப்பஞ்சமா
படியெல்லாம் ஈன்றதாயே
பாரில்நற்கதிநீயே
பரமபவித்திர-பதிதஉபத்திர
தருமசமுத்திர-சகலவிசித்திர ஏகாதி

ஙு. சுரசேவிதபாதா மலரகித
சுஜநவற்சலதாதா
வாதாயகநாதா-வேதநாயகன்
மனவாலயகியாதா
நரபரிபாலன-நயகுணலாலன
நாகரிகத்துவ-நாமமகத்துவ
யோகபிரபுத்துவ-புண்ணியதத்துவ ஏகாதி

## ருஅ. இராகம்-தன்னியாசி-ரூபகதாளம்.

பல்லவி.

நிச்சயம் இதுதானே-மதி-நீயருள்கோனே.

அநுபல்லவி.

நச்சுமரம்போல்-நாளும்வளர்ந்தேன்
இச்சகந்தனில்-இதயந்தளர்ந்தேன் நிச்சயம்

சரணங்கள்.

க. அல்லும்பகலும்பொருளில்லூக்கம்
அநித்தியசுகங்களேஎன்னேக்கம்
நல்லவர்சபைஎனக்குநீக்கம்
ஞானவழியில்நாளுந்துக்கம் நிச்சயம்

உ. துஷ்டர்களுடனே அன்யோன்யம்
துர்க்குணமெல்லாம்சர்வமான்யம்
இஷ்டம்வைப்பதுவேதனதான்யம்
ஈசனேஎனக்கறிவுசூன்யம் நிச்சயம்

ங. தினமும்எனக்குணதுவேதம்
செவிடன்காதில் சங்கநாதம்
வேதநாயகனேஎன்பாதம்
விரும்பிவாழ்த்தலேபிரமாதம். நிச்சயம்

---

## ருகூ. இராகம்-அடாணு-ஆதிதாளம்.

பல்லவி.

கருணைசாகரா-கனஉபகாரா
காத்தருள்வாய்-கோவே கருணை

அநுபல்லவி.

அருணோதயமென-அடியர்க்குக்காட்டும்-
ஆத்மகோடிகள்உஜ்ஜீவநஅமுதூட்டும் கருணை

சரணங்கள்.

க. நிச்சயஞானமே நினதுஸ்வாதீனம்
நீதராவிடில்எனக்கேதுமெய்ஞ்ஞானம்
அச்சமில்லாமலே அபயப்பிரதானம்
அருள்செயின் அடியனுக்கில்லைசமானம். கருணை

௨. சிஷ்டன்போல்யாவர்க்குந் திவ்யப்பிரசங்கம்
செய்கிலேனைப்போலெவர்சிங்கம்
சட்டமாய்நடப்பதே சர்வவில்லங்கம்
சாமிநீஅறியாயோ தமியன் அந்தரங்கம் — கருணை

௩. எத்தனையோசெய்வதேன் உனக்கபராதம்
இதுவிநித்தம்உனக் கென்மேல்விரோதம்
அத்தனைபிழைபொறுத்தாள்வதேநீதம்
அருள்புரியஇனிவேண்டாம்விகாதம் — கருணை

௪. தலைவன் இல்லாவிடில் தனமுக்குமோராஜ்யம்
தரையிலேநீயல்லால் சகலமும்பூஜ்யம்
விலகிடாதருள்உயர் விமலசாம்பிராஜ்யம்
வேதநாயகாஇன்னந் தாமெனன்னவியாஜ்யம் — கருணை

---

## எ௰. இராகம் - தோடி - ஏகதாளம்.

### பல்லவி.

தயைபுரியஇன்னந்தாமசமேது. — தயை

### அநுபல்லவி.

பயநிவாரண-பாக்யபூரண
உயர்நம்ஆரண-உலககாரண — தயை

### சரணங்கள்.

௧. அத்தனேஒருசாணாகியகுக்ஷிக்
காகநான்ஊரெல்லாம்அலைந்திடும்பக்ஷி
நித்தமும்பேசுவேன் ஆயிரங்கக்ஷி
நீதிநெறியில்நானிரக்ஷரகுக்ஷி — தயை

௨. தத்துவஞானத்தைத்தள்ளியேபோட்டேன்
சாமிநான் இந்திரியவாசலைப்பூட்டேன்
உத்தமம்எனக்கருள் பலதரங்கேட்டேன்
உதவிசெய்யாவிடில் உனைவிடமாட்டேன் — தயை

௩. சர்வவிநோதவிசித்திரநிர்மாண
சாசுவதமங்கள சத்தகல்யாண
பரமநித்தியாநந்த பாக்கியஉக்கிராண
பாலவேதநாயகப்பிரமாண — தயை

## ௭௧. இராகம்-முகாரி-ரூபகதாளம்,

### பல்லவி.

காத்தருள்வாய் - எனைக் - காத்தருள்வாய்

### அநுபல்லவி.

சாஸ்திரம்வேதம் ஸ்தோத்திரமேசெய்யப்
பாத்திரனேதயை - நேத்திரனேதினம் காத்தருள்

### சரணங்கள்.

௧. ஆனாலும்உன்பாபம் அநியாயம்அநியாயம்
ஞானியைப்போலநான்காட்டும் நடையேமுழுமாயம்
ஈனமுறுந்தமகுணங்கள் என்தனக்கேகந்தாயம்
தீனனென்மேல்நீகோபஞ் செய்யிலென்ன ஆதாயம் காத்தரு

௨. மாதாநீஉன்மகனுன் மன்னவநீகுடிநானே
தாதாநீயாசகனுன் ஸ்வாமிநீஅடியேனே
சாதகஞ்செய்சற்குரு நீதமியேன்சிஷன்தானே
ஆதாரமாகவுனை அடுத்துவந்தேன்சுரர்கோனே காத்தரு

௩. வாக்குமனம்எட்டாத வாசாமகோசனே
பாக்கியபலதான பரிபாலபரமேசுரனே
தேக்குமலவிருள்நாசஞ் செயும்உதயபாஸ்கரனே
ஆக்கும்வேதநாயகனுக் கனுக்கிரகதயாபரனே. காத்தரு

---

## ௭௨. இராகம்-தோடி-ரூபகதாளம்.

### பல்லவி.

வாவாஜகநாதா - வாவாசுகதாதா

### அநுபல்லவி.

பாவங்களைநிர்மூலமாக்கப்
பரமார்த்தங்கள்கொடுத்துக்காக்க வாவா

### சரணங்கள்.

௧. தர்மாதர்மந்தெரியேன் - ஜெப
தபசாதிகள்புரியேன்
கர்மம்அனுசரியேன் - உனைக்
கண்டால்இனிப்பிரியேன். வாவா

௨. எனைநீவிடலாமா - பல
இடர்நான்படலாமா
வினையேதொடலாமா - ஏழை
வீணேகெடலாமா. வாவா

௩. வர்மஞ்செய்தல்முறையா - என்தன்
வாழ்நாள்வளர்பிறையா
தர்மந்தனிற்குறையா - இன்னஞ்
சலஞ்சாதித்தல் பொறையா. வாவா

௪. ஆலோலிதமுகனே - நித்திய
அமலானந்த சுகனே
மேலோர்கள்சமூகனே - தயை
மிகும்வேதநாயகனே. வாவா

---

## ௭௬. இராகம்-சஹாணா-ஆதிதாளம்.

### பல்லவி.

கருணைநீசெய்யவேண்டுமே - சுவாமி கருணை

### அநுபல்லவி.

சரணாகதியென உனையடைந்தேனே
சாதம்வேண்டியே உனைத்தொடர்ந்தேனே. கருணை

### சரணங்கள்.

௧. மாயவாழ்வெனும் பெருவாரிதிச்சுழலே
மாட்டியே அலைபடும் நானொருவிழலே
காயமாகியசிறு தாற்றசைகுழலே
கழியும்போதுநற் கதிமலர்க்கழலே. கருணை

௨. சலத்தையல்லாது தாமரைக்குண்டோநிலையே
தரையில்ஊன்றுப்பயிர் எடுக்குமோதலையே
நிலத்திலேநீயலால் நிலையெனக்கிலையே
நீமுகம்பார்த்தருள் நிரஞ்சனமலையே. கருணை.

௩. சந்திரசூரியர் உள்ளமட்டும்வாழ்நாளா
சாவையேஜெயித்திட என்கையில்வாளா
தந்தையேயுனது சோதனைக்கு நான்ஆளா
சர்வசாதகபரமதயாளா கருணை

௪. அகணிதகுண அகிலாண்டவிலாசா
அபரிமிதானந்த கரபரமேசா
விரககிருபாகர விமலப்பிரகாசா
வேதநாயகன் இதயநிவேசா, கருணை

---

## ௭௪- இராகம்-ஈசமனோகரி-ரூபகதாளம்

### பல்லவி.

அபயம்நீயருளுவாய்-ஆதியே-அநுதினம். அபயம்

### அநுபல்லவி.

உபயபாதம்-நம்பினேன்.ஓ அநாதியே-அநுதினம். அபயம்

### சரணங்கள்.

௧. அலைகடற்சிறுதுரும்புபோல அலைந்துவாடினேன்
உலைமெழுகெனவுள்ளமுருகி உன்னைநாடினேன்-தினமும். அப
௨. நீர்க்குமிழியைநிகரும் வாழ்வைநிலையென்றெண்ணினேன்
மூர்க்கமாகக்கொடியபாவமுழுதும்பண்ணினேன்-தினமும். அப
௩. பாசக்காற்றிற்பஞ்சுபோலப் பறந்துதயங்கினேன்
ஆசைக்கடலில்மூழ்கிமூழ்கி அறிவுமயங்கினேன்-தினமும். அப
௪. ஆண்டவனீ அடிமைநான் எனை ஆளவொண்ணாதோ
நீண்டஉலகம்ஏழையென்றெனைநிந்தைப்பண்ணாதோ-தினமும்-அப
௫. புவனரக்ஷணகாரணார்த்த புருஷவேஷனே
பவவிமோசன வேதநாயகபலவிசேஷனே-தினமும். அபயம்.

---

## ௭௫. இராகம்-பியாகடை-ஆதிதாளம்.

### பல்லவி.

ஏதோசோதனை-இன்னமும்என்சாதனை
ஏகாதிபதியே-நிதியே-எளியேன்மேல். ஏதோ

### அநுபல்லவி.

போதேசுராய் பூஜிதபாதா
[illegible]ம்பற காரணசுகநாதா

## சரணங்கள்.

க. தந்தைதாயொடு பலதனயனாயெடுத்தாய்
தாரங்கள்மூவர்க்குச் சாசுவதங்கொடுத்தாய்
சொந்தமாகிறவுடற் சுகத்தினைக்கெடுத்தாய்
ஸ்வாமிநீயிந்த வாறுகைவித்தாய். ஏதோ

உ. ஒருகையால்அடிப்பாய் ஒருகையாற்பிடிப்பாய்
உதவியில்லாமலே உன்னெண்ணமுடிப்பாய்
பெருமலைகளையுமே பிடுங்கிப்பந்தடிப்பாய்
பிரம்மாண்டங்களைப் பிளந்திட இடிப்பாய்- ஏதோ

௩. துன்பஞ்செய்வதுபோல் சுகங்களைக்கொடுப்பாய்
துஷ்டர்கள்மீதில் எப்போதுங்கையெடுப்பாய்
அன்புள்ளதாயைப்போல் அடியனை அணைப்பாய்.
அவர்களைத்துயரணு காமலேதடுப்பாய். ஏதோ

௪. அதுலஅக்ஷயகுரு பரநரவேஷா
அமிர்தவருஷ துல்லியமிருதுபாஷா
விதுரிதோஷ நிர்விகற்பவிசேஷா
வேதநாயகவந் திதகுணபூஷா. ஏதோ.

---

## ௭௬. இராகம்-தோடி-ஆதிதாளம்.

### பல்லவி.

ஏதுபராமுகம்-ஏழையென்மீது
ஏகனே-யோகனே-மாகனே-தியாகனே. ஏது

### அநுபல்லவி.

வேதபோதக அநாதரக்ஷணனே
மேகவாகன தெய்வீகலக்ஷணனே. ஏது

### சரணங்கள்.

க. அநித்தியசுகந்தந்தாய் அதைநான்கேட்டேனோ
ஆனந்தரித்தல் அநுபவிக்கமாட்டேனோ
இனித்தஉன்பாதத்தில் இதயம்நாட்டேனோ
ஜனமாமாயையை எதிர்த்துவாட்டேனோ. ஏது.

௨. ஐயனேயென்னைக் கேளாமல்முன்னீயே
அரியமானிடஜன்மந் தந்தாயே
வையகமீது நான் உனக்கொருசேயே
மதியருள்வாய்பெற்று வளர்த்திடுந்தாயே ஏது

௩. பூந்திநீபலருக்குக் காட்டினையுனையே
மூக்தர்க்குக்கொடுத்தனை மோட்சமாமனையே
பந்தியிலாகுமோ ஓரவஞ்சனையே
பக்ஷமாயெனக்கருள் பரசுகந்தனையே. ஏது

௪. அகடநாடகன் சாமர்த்தியப்பிரதாபா
அசசசுஜநவாற் சல்லியநிஷ்கோகா
சகலசுலக்ஷண தத்துவசொரூபா
தாசன்வேதநாயகன் மனோதிபா ஏது

---

## எஎ. இராகம்-கமாஸ்-ஆதிதாளம்.

### பல்லவி.

ஆரணமயநயபூரணனே
உனதமலஅடிசரணம். ஆரண

### அநுபல்லவி.

பாரகோரபரிகாரகுணாகர
வீரதீரஉபகாரமனோகர ஆரண

### சரணங்கள்.

௧. உனைநிதம்நினைவுறும் எனைஅடர்வினைஅகலாதா - நாதா
உலககலகமயல்விலகஇலகருணைநீதா
கனஉலகஜநக அநகதிநகரமெய்
காவலா-அடியர்-ஆவலாஅருள்செய். ஆரண

௨. துரிதாஹிதகுணசரிதசுகிர்தபுரமேசா-நேசா
சுஜனபஜனமிர்துவசனரசனஇதிகாசா
சரதவாதஅனவரதவிரததர
சாபமோசனபிர - தாபவிலாசன. ஆரண

௩. கனககனபுவனபவனகவனபரிபாலா-மூலா
கரணசரணகுணகிரணபரணஅநுகூலா
விநயநிலயஸ்வயவிஜயமயஅபய
வேதநாயகன்மனோதயஅதிசய. ஆரண

---

## எஅ· இராகம்-ரீதிகௌளை-ரூபகதாளம்.

### பல்லவி.

சரணஞ்சர்வேசா - எனைரட்சிக்கத்
தருணமிதுபிரகாசா — சரணஞ்

### அநுபல்லவி.

கருணாலயபரகாயப்பிரவேசா
பரமசுகோதயபாபவிநாசா — சரணஞ்

### சரணங்கள்.

க. நீயேகுருமூர்த்தி உனக்குச்சிறு
நாயேனவிர்த்தியாத்தி
தூயாஉபதேசஞ்சொலி இஷ்டபூர்த்தி
ஈயிற்குருசிஷர் இருவர்கருங்கீர்த்தி. — சரணஞ்

உ. நீதான்பரஞ்சோதி-எனஉலகின்
மீதேபெருங்கியாதி
வேதாமலவிருள் விலக்குதல்நீதி
ஆதாரமாக என்னருளைப்பிரசாதீ. — சரணஞ்

ங. அதிகாரணநாதா-பரமஞான
ஜோதிமயஅபேதா
பாதகமோசனபாக்கியப்பிரசாதா
நீதவேதநாயக நித்தியசங்கீதா. — சரணஞ்

---

## எகூ· இராகம்·லலிதா·ரூபகதாளம்

### பல்ல்வி.

இன்னந்தாமசம்ஏது-ஜகநாதா — இன்னந்

### அநுபல்லவி.

நன்மையதாக-உனை-நம்பினவனுன் அலவோ. — இன்னந்

### சரணங்கள்.

க. சிலம்அருளிற் செலவோ
சேயுனக்குநான் அலவோ
மேலுமென்னதான் சொலவோ
வேலையுனக்குப்பலவோ. — இன்னந்

௨. சாதுஜனரக்ஷணனே
தாசர்கள் பிரதக்ஷணனே
கீதாமிர்த பக்ஷணனே
கிர்த்திகொள்சுலக்ஷணனே. இன்னந்

௩. ஈசனே நானுன்னடிமை
எப்பொருளும் உன்னுடைமை
நேசமுடன் என்மடமை
நீக்கிடுவதுன்கடமை. இன்னந்

௪. சாதககுணபரனு
சர்வபுவனாதாரனு
வேதநாயகன் ஸ்மரனு
வேகதுரிதஹரனு. இன்னந்

---

## ௮௰. இராகம்-கெங்காதரங்கணி-ஆதிதாளம்.

### பல்லவி.

உனை நானே-தொழவரம்-அருள்கோனே. உனை

### அநுபல்லவி.

வினயசுஜனசேவிதபெருமானே
வேதமுடிவில் நடனம்புரிவோனே உனை

### சரணங்கள்.

௧. சிந்தைமீதுனது பாதமே தியானம்
செய்யநீயருள்வாய் திவ்யஞானம்
தந்தைநீயறியுமே சம்ஸ்தானம்
தநயன்மீதிலில்லையோ அபிமானம் உனை

௨. ஈசனேஎனதுவார்த்தைகள்பொய்யே
இந்தவார்த்தையொன்று மாத்திரமெய்யே
பாசமூடிமனம்வெயிலுறுநெய்யே
பாவம்நீங்கும்படிதயைசெய்யே. உனை

௩. அடருமலசலாதிகள்நிறைபேழை
ஆணமாய உடலாகியபாழை
திடமென்றெண்ணிநிறைப்பேன் அதிற்கூழை
சினஞ்செய்யாதே நான்மிகஏழை. உனை

ச. சகலலோகம் அடங்காதுயர்காத்ரா
சமமிலாக்கபட நாடகசூத்ரா
சுகப்பிரதாயக கிருபாகரநேத்ரா
துதிவேத நாயகன்மனக்ஷேத்ரா. உனை

---

அக. இராகம்-பூரிகல்யாணி ரூபகதாளம்.

பல்லவி.

கருணாகரமூர்த்தி-காப்பதுவேகீர்த்தி,

அநுபல்லவி.

அருணோதயமாசரீர
அற்புதநராவதார கருணா

சரணங்கள்.

க. தேகம்வளர்ப்பதே என்விர்த்தி
தினந்துர்க்குணமே பிரவர்த்தி
ஏகமானசக்ரவர்த்தி
எனக்குநீஅருள் பாபநிவர்த்தி கருணா

உ. அற்பமானமோக போக்கியம்
அழிந்துபோம் இதுவேதவாக்கியம்
தற்பராநினைக்காணும் பாக்கியம்
தந்திடில்அதுசர்வ சிலாக்கியம் கருணா

ங. பாதகந்தனைச்சர்வ நாசம்
பண்ணுவதில்உண்டோ பிரயாசம்
வேதநாயகா நின்னேசம்
விளங்கிட அருள்வாய் பிரகாசம். கருணா



அஉ. இராகம்-பரசு-திரிபுடைதாளம்.

பல்லவி.

சித்தம்எப்படியோ-ஐயா-நின்-சித்தம்எப்படியோ.

அநுபல்லவி.

உத்தமனுகளன்னை உயர்த்திடுவாயோ
கர்த்தனேநீயென்னைக் கைவிடுவாயோ. சித்த

சரணங்கள்.

௧. அருள்புரிவாயே-அருந்தவப்
பொருள்சொரிவாயோ
தருமவானுப் படிதான்தெரிவாயோ
இருள்மூடும்பாவியென்றனைப்பிரிவாயோ சித்தம்

௨, பாதஞ்சேர்ப்பாயோ-என்தன்மனக்
கேதந்தீர்ப்பாயோ
ஆதன்செய்வினை அடியோடேபேர்ப்பாயோ
ஏதுங்கதியில்லானென் றிரங்கிப்பார்ப்பாயோ சித்தம்

௩, வாடிநொந்தேனே-மெய்ஞ்ஞானக்கண்
மூடிநைந்தேனே
நாடியாள்வாயென்று நம்பிவந்தேனே
பாடும்வேதநாயகன் பருகுஞ்செந்தேனே சித்தம்

---

அ௩. இராகம்-சஹாணு அடதாளசாப்பு.

பல்லவி.

எப்படியும்பரமே-நலம்பெற
ஈந்தருள்வாய்வரமே,

அநுபல்லவி.

செப்பருமாணிக்க தீபசொருபனே
தேவேமணமேகொந்தேன்-காவேயெனவேவந்தேன் எப்

சரணங்கள்.

௧, கேவலம்வாடினேன் கேள்விமுறையில்லையோ-என்தன்
சிவன்பிழைக்கச்செய்ய வல்லனீயல்லையோ
பாவனுனைப்பண்ணுதல்பாரமோ
பரகேசுகனியேசத்தே ஓகோதனியேவித்தே எப்

௨, அற்பன்ஆனாலும் அன்னைக்குப்பிள்ளை அல்லவோ
பற்பலவாய்ப்படித்துப்படித்துச்சொல்லவோ
கற்பகோடிகாலங்கண்டுமுடிவில்லாக்
கண்ணேமணியேபொன்னே
விண்ணே அணியேசொன்னேன், எப்

ரு, இன்பதுன்பங்கள் இரண்டிற்சமசித்தமே-தந்து
நின்பதசேவைநிலைக்கநீசெய்வாய்நித்தமே
அன்பர்வேதநாயகன் அகத்தேயணி
ஆணிப்பொருளேமுத்தே-காணப்பெறுவோர்சொத்தே, எப்

———

அச. இராகம்-கல்யாணி-அடதாளசாப்பு.

பல்லவி.

உன்னையெனக்குக்காட்டையா-காட்டாமல்சும்மா
ஒளித்தென்னவிளையாட்டையா

அநுபல்லவி.

தன்னைப்பாராமலே தன்பிள்ளைகண்மூடி
தனம்ஊட்டுந்தாயுண்டோசாமிநீதயைகூடி உன்னை

சரணங்கள்.

க, சுறவைதனைப்பிரிந்தகன்றுகசறல்போலும்
கணவன்தனைப்பிரிந்துகலங்குமுத்தமிபோலும்
இறகுகள்பறிகொடுத்தேங்கும்பறவைபோலும்
இருகண்ணுந்தெரியாத ஈனக்குருடர்போலும்
ஏங்கினேன்சுகம்-நீங்கினேன்துயர்
தாங்கினேன்மனம்-வீங்கினேன்-நீ உன்னை

உ, நினைக்கநினைக்கஎன்தநெஞ்சமெல்லாம்ருசிக்கும்
நின்னைப்புகழும்வாயேநித்தியாமிர்தம்புசிக்கும்
களக்கும்நின்னடிகாணக்கண்கள்தினம்பசிக்கும்
கர்த்தனேஉனைக்கண்டாற்கவலையெல்லாம்நசிக்கும்
கனதநிலேனுங்க-கனத்திலேனுமென்
பனத்திலேனும்சொப்-பனத்திலேனும்-நீ உன்னை

ஈ, விண்ணேநினையல்லாமல் வேறொன்றைத்தொடுவேனோ
மேதினியெங்குந்தேடி வேதனைபடுவேனோ
கண்ணேமணியேநினைக்கண்டால்நான்விடுவேனோ
கட்டிக்கொண்டானந்தக் கலக்கப்பின்னிடுவேனோ
கருத்தில்மூடுவன்-வருத்தம்போடுவன்
திருத்தமாடுவன்-விருந்தும்பாடுவன் உன்னை

௪. தேவனேஉனைக்கண்டால்திட்டிதோஷந்தொடுமோ
திவ்யதேஜோமயமென்தேகந்தனைச்சுடுமோ
கூவுங்கோழிமிதித்தாற்குஞ்சுமுடம்படுமோ
கொல்லுஞ்சிங்கமானாலும் குட்டிகள் அஞ்சிடுமோ
கோலனே அது - கூலனேபரி
பாலனேகன - மூலனேநீ உன்னை.

௫. ஆணல்லபெண்ணல்லஐம்பூதஞ்சுடரல்ல
அரியயன்சிவனல்ல அதுவல்ல இதுவல்ல
காணருமுன் திவ்யகாந்திவிரியும்நல்ல
கனவழிவினைக்காணக்காதல்கொண்டேன்வல்ல
காரணசுக-பூரணகுண
தாரண-கன-ஆரணநீ உன்னை

௬. தேனேகனியேதெவிட்டாத்தெள்ளமுர்தமே
சீனியேகரும்பேதித்திக்கும்இரதமே
வானேபுவியேசுகவாழ்வேபெரும்பதமே
மதிக்கும்வேதநாயகன்மகிழுமனோரதமே
வாடினேன்-கவி-பாடினேன்உனை
நாடினேன்-தினந்தேடினேன்-நீ உன்னை.

---

## ௮௫. இராகம்-பங்களா-ஆதிதாளம்.

### பல்லவி.

சஞ்சலமாய்நெஞ்சமிகஉடைந்தேனே-இனித்
தஞ்சமெனஉன்சகுணம் அடைந்தேனே-ஸ்வாமி. சஞ்ச

### அநுபல்லவி.

வஞ்சகப்பிரபஞ்சமெனும்
நஞ்சநதிமூழ்கியே. சஞ்சல

### சரணங்கள்.

௧. இட்டவலைபட்டயரும்மான்போலே-வெயில்
சுட்டசலம்விட்டகலும்மீன்போலே-ஸ்வாமி. சஞ்சல

௨. பொய்புலகைமெய்யெனவேகருதிமாறி-நாளும்
ஐ[illegible]கோகோமையலெனுங்கடுமீறி-ஸ்வாமி. சஞ்சல

௩. கொட்டுமெத்திற்பட்டுடையுந்தயிர்போலே-சலத்
தட்டுவரக்கெட்டுவரும்பயிர்போலே-ஸ்வாமி சஞ்சல
௪. பாய்புலியின்வாயில்உறுபசுப்போலே-பெற்ற
தாய்கரம்விட்டேஅலறுஞ்சிசுபோலே-ஸ்வாமி சஞ்சல
௫. ஈயவேசகாயமொன்றுங்கிடையாதோ-நல்ல
தூயமனம்நீயருளத்தகையேதோ-ஸ்வாமி சஞ்சல
௬. மாயமலநோயகலும் விசுவேசா-வேத
நாயகனன்னேயமனக்குகைவாசா-ஸ்வாமி. சஞ்சல

அசு. இராகம்-சுத்தசாவேரி-ரூபகதாளம்.

பல்லவி.

தருணந்தருணந்தயைசெய்வாயையா-ஓ
தேவதேவா. தருணம்

அநுபல்லவி.

ஒருவனே ஜன்மலயஅபாவா
ஓஓமகானுபாவா தருணம்

சரணங்கள்.

௧. சித்தஞ் சேற்றில் நட்டகம்பம்
ஜெகதலத்தில் இதற்குத் தினமும்கம்பம்
நித்தங்கவலைநிறைந்தசொரூபம்
நீயேயினியெனக்கவலம்பம் தருணந்
௨. சேர்தனைக்கு நான்பாத்திரவானோ
துன்பமூட்டை சுமக்கநானோ
காதகஞ்செய்யிற் பழுதுதானோ
தள்ளினலும் நான்போவேனே. தருணந்
௩. வயிறுவளப்பதே என்வேலை
மற்றநேரம் விஷயலீலை
உயிருக்குயிரோ ஞானப்பாலை
ஊட்டுவாய் தொழுதேன்உன்காலை தருணந்
௪. சப்தஸ்பரிச ரசசுகந்தர
தர்மரூப பிர்மாநந்தா
வித்தகசுஜ நானுபந்தா
வேதநாயகப் பிரபந்தா தருணந்

## அஎ- இராகம்-தேவமனோஹரி-ஏகதாளம்.

பல்லவி.

இன்னமும்தாமதமேன் - என்ஸ்வாமி இன்ன

அநுபல்லவி.

உன்னதமாகிய துரியாதீதா
உலகாதிசர்வகாரண பூதா இன்ன

சரணங்கள்.

க, பழைமுகங்காணும் பயிர்போல்வாடி
மாதாதனைவிட்ட சேய்போலோடி
தனையும்உன்குணசரித்திரந்தனைப்பாடி
சாமிநானுனையடைந்தேன் கதிதேடி இன்ன

உ, பத்தனைப்போலநான் போடுவேன்வெளிச்சம்
பாவத்தின்கடலுக்கு நானொருமச்சம்
அத்தனேமுனியாதேகொண்டேன் அச்சம்
அருவினைபோக்கி நீ அருள்வாய் ஸ்வச்சம் இன்ன

ங. அரசே நீயெனைக்கைவிடலாமா
அருளேசெயில் உன்கைப்பொருளேபோமா
திருவரம்ஈயா விடில்வினைசாமா
தேவமனோகர திவ்வியசோமா இன்ன

ச, அனவரத சுகிர்த ஆத்மசொரூபா
அனந்தலையானகுண அனகப்பிரதாபா
தினகர தினகர னாகிய தீபா
சிறியன் வேதநாயகன் இதயசல்லாபா இன்ன

---

## அஅ- இராகம்-சாமா-ஆதிதாளம்.

பல்லவி.

உன்னைத்தவிர வேறென்னைத்தாங்கிடப்
பின்னைத்துணையில்லை மன்னர்க்கரசே உன்னை

அநுபல்லவி.

அன்னைக்கிணையாகிய கனபிரபுவே
உன்னற்கரிதாகிய பாவிபுவே உன்னை

சரணங்கள்.

க, நீமுகம் பார்த்திடில் அணுவும் பர்வதமே
நீமுனிந்தால் பெருமலைகளும் அதமே
தாமதம்நீசெயிற் பிழைப்ப தெவ்விதமே
தயைநீபுரிய இச்சமயம் உசிதமே — உன்னை

உ, நினை அடுத்தவர்க்கில்லை ஜலநஷ்டம்
நின்னை அடுத்தவர்க் குண்டோ நஷ்டம்
ஆனையடுக்கினும் உண்டோ அதிர்ஷ்டம்
ஐபாகினக்கன்பனுக என்னிஷ்டம் — உன்னை

ங, ஊரார்மெச்சிடப் பாடுவேன்பாட்டு
ஊன்புகழ்பாடவென்றால் வாய்ப்பூட்டு
சீராகிய பெரியோர் சபைதீட்டு
தீயோருடன் எனக்கனுதினங்கூட்டு — உன்னை

ச. ஆதிமத்தியாந்த அபாவப்பிரகாரா
அண்டசராசர அகிலாதாரா
பூதநிர்மாண நிர்வாகசங்காரா
போத வேதநாயகா புண்ணிய சரீரா — உன்னை

---

அகூ. இராகம்-சுத்தசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

நானே உனை நம்பினேனே-நலம்
தானே அருள்கனவானே — நானே

அநுபல்லவி,

வானே என்சுகத் தேனே பொழிந்திடும்
மன்னுபிர-சன்னுதினர்-என்னவுளம்-முன்னுநிதம் — நானே.

சரணங்கள்.

க, காயம்பலதுவாரக் கந்தல்-அதைக்
காக்கநான்போடுவேன் வாய்ப்பந்தல்
மாயவலையிற் பட்டு-மதியும் விதியும் கெட்டு
மண்டுவினை-கொண்டுமிக-அண்டுதுய-ருண்டுதினம் — நானே

௨. அருணகோடிப் பிரகாசகாத்திரா-அதி
அற்புதவேதாகம சாஸ்திரா
கருணாநந்த நேத்திரா பஞ்சபக்தஜனஸ்தோத்திரா
காப்பாய்முகம்-பார்ப்பாய் வினைதீர்ப்பாய் அடி-சேர்ப்பாய்நிதம்.

௩. விபுதகணவந்திதச் சரணா-நாளும்
வேதநாயகன் அந்தக்கரணா
சுப்மங்கள தரணா சுஜநகுலாதரணா
தூயாகண நேயாபுவித்தாயான சகாய்ாநிதம் நானே

---

## ௬௰. இராகம் சஹானா-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தவேளை வந்துன் அருள் தந்தருளுவாய் இந்த

அநுபல்லவி.

வந்தனை நிரந்தரம் புரிந்தேனை ஐயனே. இந்த

சரணங்கள்.

௧. அன்னைபிதா உன்னையன்றிப் பின்னையாரைய்யா
என்னைநிதந் தின்னும் வினைதன்னைத் தீரையா
மின்னுகின்ற பொன்னுலகந்தன்னில் வாழ்மெய்யா இந்த

௨. பூதலத்தில் ஆதரவுங்காத இணையே
பேதகமாயேதுனக்கிங்கோத இணையே
தீதகலுஞ்சாதகர்க்கபேத துணையே இந்த

௩. தீயநெஞ்சில் தூய அறந்தோய இலையே
மாயையெனும் பேய்செய் அநியாயமலையே
நேயன்வேதநாயகனுக் காயநிலையே. இந்த

## ௬௧. இராகம்-சாமந்தா-ஆதிதாளம்

பல்லவி.

மெய்ஞ்ஞானங் கொடுப்பாய்-ஸ்வாமி
அஞ்ஞானந்தடுப்பாய்-ஸ்வாமி மெய்

சரணங்கள்.

பொய்ஞ்ஞானியர் அல்லார் மேற்கருணை
பூண்டவனே என் ஆண்டவனே நீ மெய்ஞ்

உ. கர்த்தனேஒழியாக் கவலைப்பிரபஞ்சம்
கண்ணரியிற்பறவையோற் கலங்கினேன்நெஞ்சம்
உத்தமகுணந்தா உனக்குண்டோபஞ்சம்
உன்னையல்லால் இனிவேறிலைதஞ்சம். ஞான.

ஈ. அமரர்சர்சோபண அமிர்தபக்ஷணனே
அனந்தபேதகஜீவாத்மரக்ஷணனே
சமரசஞானசற்குணசுலக்ஷணனே
தாசன்வேதநாயகன்பிரதக்ஷணனே. ஞான.

---

## கூச இராகம்-சஹானு-ரூபகதாளம்.

### பல்லவி.

உதவிசெய்யலாகாதா - ஓ - ஜகநாதா உதவி

### அநுபல்லவி.

நிதம்நிதம்உனதிணையடிகளை
நெஞ்சில்நினைத்திடவரம்நீ. உதவி.

### சரணங்கள்.

க. அடியேன்துயர்படவேதகுமா
சுடர்முன்இருள்தானேபுகுமா
கொடிதாகியவினையால்நிலை
குலைந்தேன்-மனம்-மலைந்தேன். உதவி.

உ. மனைவாழ்வுறு துயர்தான்மலையே
உனையல்லது கதிவேறிலையே
அனையேகொடு வினையால்மனம்
அயர்ந்தேன்-தினம்-பயந்தேன். உதவி.

ஈ. சுரசேவித பரமேசுரனே
நரபோஷக கருணாகரனே
வரவேத நாயகனேகுண
வரனே-பரம்-பரனே. உதவி.

## ௯௫. இராகம்-சாளங்கபைரவி-ஆதிதாளம்.

### பல்லவி.

உனைமறவாமலெனக்கருள்வரமே
பரமே-சுகபரமே. உனை.

### அநுபல்லவி.

பொன்னோடொளியர்போலுமெக்காலும்
அன்னைதன்னைமறவாப்பிள்ளைபோலும் உனை.

### சரணங்கள்.

௧. மங்களமாகப்பெருவாழ்வுவந்தாலும்
சங்கடமுடன்கனதாழ்வுவந்தாலும். உனை.

௨. பூமண்டலமெங்கும்புகழ்ச்சிவந்தாலும்
ஈமங்கொள்மாலையென இகழ்ச்சிவந்தாலும். உனை.

௩. மகிழ்வுறவேவெகுமானம்வந்தாலும்
இகழ்வுறவேகனஈனம்வந்தாலும். உனை.

௪. தலைகீழாகஇத்தரைபுரண்டாலும்
அலைகடல்பெயர்ந்ததன்கரைபுரண்டாலும் உனை.

௫. அருமையாகியசதானந்தநிலையே
மருவும்வேதநாயகன் மகிழ்கலையே. உனை.

---

## ௯௬. இராகம்-கண்டா-ஆதிதாளம்.

### பல்லவி.

வாவாவாதேவே-வந்தெனைக்
காவாயோகோவே வாவா

### அநுபல்லவி.

காவார்பூவே-கலையோர்பாவே
ஓ-ஓ-வேதாவே. வாவா

### சரணங்கள்.

௧. வனவேடன்வலையே-மாட்டி-மனமேநோயுறுங்கலையே
எனவேதுயர் அலையே-சார்ந்தனன்-இனியாலவயுந்தொலையே
வனமார்நிலையே-மதியோர்கலையே
கனமார்குணமலையே வாவா

௨. உடல்விழுந்திடுமுனமே-பரனே-உனையே அனுதினமே
திடமாஎன்மனமே-நிரந்தரம்-செய்வேஅருள்கனமே
அடியார்தனமே-அயலார்சினமே
படியார்தமக்கினமே. வாவா

௩. நினையாஎன்மதியே-உலகில்-நிதமும்செயுஞ்சதியே
வினைதீர் இதுதகியே-பரவும்-வேதநாயகன்நிதியே
அனைவோர்கதியே-அருள்வாரிதியே
தனைநேர்பரகதியே. வாவா

---

௧௭. இராகம்-உசேனி-ஏகதாளம்.

பல்லவி.

தருணம்ஈதையா-இக்கால-ஹரணம்ஏதையா.

அநுபல்லவி.

கருணையால்உலகனைத்தும் தாக்குபகாரா-தீரா-உதாரா
காணும்பிரபஞ்சம்-தனிற்சிக்கிக்
கோணும்என்னெஞ்சம்-அநுதினம்
பேணும்பொய்வஞ்சம்-இனிஉன்தன்
மாணடிதஞ்சம்-எனைத்தொடர்
கருமந்தனையேநீக்க-தருமந்தனைநிலையாக்க. தருணம்

சரணங்கள்.

௧. ஆண்டான் அடிமையை வேண்டாமெனத்தள்ளின்
ஐயாபுகலினிஏது-மிக
நீண்டநின்கால்களைப் பூண்டுகொண்டேன்விடேன்
நீஎங்கினிச்செல்வதோது-சற்றும்
தீண்டாதெனைத்தள்ளினாலும் விடுவேனோ
திருவே-தருவே-குருவே
தீனன்என்பீது-வினைதவி
மானம்விடாது-இனமதி
ஈனன்செய்தீது-தொலையமெய்ஞ்
ஞானம்நீஓது-பழுதறு
நித்தநமரும்கோவே-கர்த்தத்துவமுழுதேவே. தருணம்

உ. நீயெனைநீங்கிடில்-எங்கும்உள்ளோனெனும்
நின்பெயர்க்குக் குறைவாமே-அழுஞ்
சேயர்நமக்குழ தியாதிருப்பரோ
சிறந்தஅன்னையர்தாமே-வரம்
ஆயிரந்தரஞ் செட்டுங்கொடாயிது
அழகா-துழகா-பழகா
தற்றபொன்போலே-நடையின்றி
முற்றமென்மேலே-பலகலை
கற்றும்பொய்யாலே-கொண்டேன்என்தன்
சுற்றறிவாலே-எனைநிதம்
ஆளாயபலபுவிநாதா-மாளாநலமுறுநீதா. தருணம்

ங. எத்தனைசொல்லினுஞ் சித்தம்நன்மார்க்கத்தில்
என்றும்பதிந்திட இல்லை-மிக
இத்தரையெங்கும் பிரசித்தனேநீசற்
றிளகச்செய்வாயிந்தக் கல்லை-உயர்
வித்தகனே வேதநாயகன்போற்றிடும்
வேதா-நாதா-அபேதா
மின்னும்பிரக்கியாதா-அடியேன்மேல்
இன்னமும்வாதா-எனை அஞ்சல்
என்னஒண்ணாதா-நின்காதில் என்
சொன்னுழையாதா-அநுதினம்
வேதத்தமர்சர்வேசா-தீதற்றவர் மனவாசா. தருணம்

---

## கூஅ. இராகம்-பூரிகல்யாணி-ஆதிதாளம்.

### பல்லவி.

நம்பினேன் உனையே-தற்காத்தருள்
வெம்பியஎனையே-அநுதினம்-நம்பினேன்

### அநுபல்லவி.

அம்புவியெங்கும்-நிரம்பும்பலஉயிர்க்
கின்பம்பொழிபுயலே-உன்தன்செயலை
உண்டோஅயலே-அநுதினம். நம்பினேன்

### சரணங்கள்.

க. புவனகாரண பவநிவாரண-நலஉதாரணனே
சம்பூரணனே-மெய்யாரணனே-அநுதினம் நம்பினேன்

உ. கோரவினைப்பரி - காரஅகிலவிஸ் - தாரஅதிகாரா
உபகாரா - அதிதீரா - அநுதினம். நம்பினேன்

௩. சுகுணசேகர - மிதமனோகர - சுகிர்தசாகரனே
பராபரனே - தயாபரனே - அநுதினம். நம்பினேன்

௪. பஜிக்குந்தொண்டர்கள் - புசிக்கப்புசிக்க - ருசிக்கும்
தேன்மயமே - அதிசயமே - அருள்நயமே - அநுதினம் நம்பி

௫. வேதநாயகன் - போதமுறப்பிர - சாதம்அருள்பொருளே
மனஇருளே - தொலைத்தருளே - அநுதினம் நம்பினேன்

---

## கூகூ- இராகம்-நாகதொனி மிசிரம-திரிபுடை-தாளம்.

### பல்லவி.

தேவாதிதேவனே-ஜீவனேபிரபாவனே தேவாதி

### அநுபல்லவி.

ஜீவாதிகாரனே-தீரனே-சூரனே
ஜெகத்திலே-மனம்வாடி-நொந்தேன்
மகத்துவேஉனைநாடி-வந்தேன். தேவாதி

### சரணங்கள்.

க. எங்குமிறையும்நீ எனக்குன்னைக்காட்டாய்
ஈதென்ன கண்கட்டு மாயமோ
அங்கும்இங்குமே உனைத்தேடி
அலையவைத்தா யிது ஞாயமோ
தங்குபதேசம் செய்யாயின்னம்
தான்அடியேன் சிறுபிராயமோ
எங்குலதெய்வமே தாயேதந்தையே
இதுதான்புத்திர நேயமோ-கண தேவாதி

உ. எத்தனையோபிழை செய்தேன் அப்பிழை
எண்ணஉன்னாலும் கூடுமோ
சுத்தனேநீ அருள் செய்நாளென்றுடு
கருமப்பேய் போராடுமோ
அத்தனேஎன்பால் நீவரில்உந்தன்
அடிகள்வருந்தி வாடுமோ
இத்தலநீவரில் முத்தர்கள்சமூகம்
எங்கேஎன்றுனைத் தேடுமோ-உயர். தேவாதி

௩. அருளிற்பெரியனீ மருளிற்பெரியனான்
ஆதரிப்பதுன் பாரமே
பொருளிற்பிரியனா யிருளுக்குரியனாய்ப்
புரிந்தேன்துர் வியாபாரமே
ஒருமைப்பாடறு மனதுக்கேதினம்
ஊரெல்லாம் சஞ்சாரமே
திருஅற்புதனே வேதநாயகனே
செய்வாய்நீ உபகாரமே-ஒரு தேவாதி

---

## ௭. இராகம்-குந்தளவராளி-ஆதிதாளம்.

### பல்லவி.

நிதம்நிதம் உனையே தொழுதேனே
பதமலர் அருள்கோனே

### அநுபல்லவி.

சத்தவைபோகா - சகலநிர்வாகா
மதுரப்பிரவாகா - வரகுணயோகா நிதம்

### சரணங்கள்.

௧. அறம்வர இல்லையே அகம்அறவில்லையே
மறம் ஒருமலையே மனமொருசிலையே
புறமயல்வலையே-புகுமதிகலையே
துறவறநிலையே-துயர்வினைதொலையே நிதம்

௨. மலம்வளர்தீயே-மனமொருபேயே
புலமொருநாயே-புலிகொடுமாயை
பலவிதமாயே-படர்வுறும்நோயே
தலமினையநீயே-தயைபுரிவாயே நிதம்.

௩. அடியவர்இனமே-அருள்மலர்வனமே
கொடியவர்சினமே-குறையறுதனமே
முடிவறுதினமே-முறையுறுகனமே
அடிதொழும்வேத-நாயகன்தரிசனமே நிதம்.

---

## ௱க. இராகம்-சாமா-ஆதிதாளம்.

### பல்லவி.

என்னசொன்னாலும்நீ-இரங்காதிருப்பது
ஏதோகுணக்கடலே

### அநுபல்லவி.

உன்னதவகனே-உலகநிர்வாகனே — என்ன.

### சரணங்கள்.

க. இகசுகம் அநுசிதம்-என்பதென் அபிமாதம்
தகவுறும்உயர்பதம்-தாவெனவேஙிதம் — என்ன.

உ. இன்னமும்ஏன்சினம்-எனக்குநின்தரிசனம்
மன்னஎன்கண்முனம்-வாவெனவேதினம் — என்ன.

௩. மாயைபடாந்திரம்-மாறலூர்தந்திரம்
நீயருட்சுதந்தரம்-நீட்டெனநிரந்தரம் — என்ன.

௪. உலகவியாபாரமே-ஒழியாவிசாரமே
கலாசம்சாரமே-கவலைஅபாரமே — என்ன.

௫. அருமறைவாசகா-அடியர்பிரயோசகா
தருமப்பிரதாயகா-தனிவேதநாயகா — என்ன.

---

## ௱உ. இராகம்-இந்துஸ்தான்-ரூபகதாளம்.

### பல்லவி.

நாதா அடியேன்-மீதேன்கோபம்.

### அநுபல்லவி

ஆகாரமாகவே அகிலத்தைத்தாங்கும் — நாதா.

### சரணங்கள்.

க. தாரம்சுதர்இல்லாச் சந்நியாசிஎன்றேனே
சீருரில்லாப் பரதேசிஎன்றேனே — நாதா.

உ. தந்தைதாயில்லாத தனியர்என்றேனே
எந்தஉயிருமபெற்ற இனியர்என்றேனே — நாதா.

௩. மண்ணும்கைப்பொருள் இல்லா வறியர்என்றேனே
சின்ன அணுவுர் நம்மை சிறியர் என்றேனே — நாதா.

ச. உரியஆண்பெண்ணல்லா ஒருத்தரென்றேனே
விரியலயுகங்கண்ட விருத்தரென்றேனே. நாதா

ரு. ஆதிஅந்தம்இல்லா அநாதிஎன்றேனே
ஜாதிகுலமில்லா நிர்ஜாதிஎன்றேனே. நாதா.

சா. வீடுவாசல்இல்லாத வெளியரென்றேனே
கூடன்னம் துணியில்லா எளியரென்றேனே. நாதா.

எ. மனப்புகுந்தொளிக்கின்ற மாயரென்றேனே
உனும்நெஞ்சுக்கெட்டா உபாயரென்றேனே. நாதா.

அ. சகலவுலகச்சுமை தாங்கிஎன்றேனே
மிகநரர் அன்புக்கு வீங்கிஎன்றேனே. நாதா.

கூ. மற்றோர்கண்ணிற்படாத பானிஎன்றேனே
முற்றும்வாய்பேசாத மோனிஎன்றேனே. நாதா.

க0. குணமில்லார்களைக்காயும் கோபிஎன்றேனே
அணிஅங்கமில்லா அரூபிஎன்றேனே. நாதா.

கக. சீர்பேர்இல்லா அநாமதேயரென்றேனே
ஆரும்துணைஇல்லா அபாயரென்றேனே நாதா.

கஉ. மாதின்றிஉலகின்ற மாயம்சொன்னேனே
வேதநாயகா இன்னம் வேறென்சொன்னேனே. நாதா.

---

## ௩கூ. இராகம்-பியாகு-ஆதிதாளம்.

### பல்லவி.

உன்னைப்போலெனக்குற்றபேர்கள்-இந்த
உலகந்தன்னில்-உண்டோ

### அநுபல்லவி.

அன்னைதந்தைகுருதேவே-இந்த-அகிலகாரணபிதாவே உன்னை

### சரணங்கள்.

க. தந்தைதாய்க்குமனஸ்தாபம்வரில்
சாற்றுவார்கள்பலசாபம்மண்ணில்
எந்நேரமுமே பாவஞ்செய்யினும்
எனக்குநீசெய்வது லாபம் உன்னை

உ. அண்ணன் தம்பிக்குண்டு பாகம்-அதை
அடையமட்டும் அவர்ஸ்நேகம்-பின்பு
எண்ணுவார்கள்பல-துரோகம் நீ
ஈவைநன்மைகள் அநேகம் உன்னை

ங. மனைவிபாலர்க்கன்ன வஸ்திரம்-தரும்
மட்டுமேஅவர்கள் மித்திரம்-பின்பு
நினைவர்செய்வர்பல குத்திரம்-என்றும்
நீடுமுன்னருள் சமுத்திரம் உன்னை

ச. ஏவல்மன்னர்க்குண்டு திறையே-அதை
ஈந்திடாதவர்க்குச் சிறையே-உன்னை
மேவினோருக்கில்லை குறையே-தொழும்
வேதநாயகன்தன் இறையே உன்னை

---

ருச. இராகம்-காப்பி-ரூபகதாளம்.

பல்லவி.

நாளேநல்லநாள்-புண்ணியம்செய்யும் நாளே

அநுபல்லவி.

ஆளுர்வேதநாயகன்-தாளிணைபூசிக்கும் நாளே.

சரணங்கள்.

க. பாபமில்லாதகால-க்ஷேபமும்சுஜனசல்
லாபமுமேபரம-லாபமாகக்கொள்ளும் நாளே.

உ வேதமும்பெரியவர்-போதமும்தேவசங்
கீதமும்முதலான-நாதங்களுடன்செல்லும் நாளே.

ங. ஞானமும்ஜீவாபி-ஞானமும்பரன்பத
தியானமுமேசெய்து-மோனநிலையில்நிற்கும் நாளே.

ச. பத்தினிசுதாகுடும்-பத்தவர்யாவரும்
சித்தநிர்மலமுடன்-பக்திபுரிந்திடும் நாளே.

ரு. கூனர்குருடர்அங்க-ஈனர்பிணிஉடையோர்
தீனர்முதலியோர்க்குத்-தானதருமஞ்செய்யும் நாளே.

## ௫௫. இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

### பல்லவி.

ஏதோ இன்னம் வாதோ இரங்காதோ உன்மனமே ஏதோ

### அநுபல்லவி.

வேதவரோதய-விமலச்சந்திரோதய
வித்தகநயகுண-உத்தமசிரேஷ்டா
பத்தர்கள்பழுகநு-சித்தஅபீஷ்டா ஏதோ

### சரணங்கள்.

க. ஐம்புலவேடர்வேட்டை-ஆடித்திரியுங்காட்டை
வெம்பாசப்பேய்வாழ்வீட்டை-விரும்பியேதுன்பமூட்டை
மேவிமனம்அயர்ந்தேன்-நிலைமையில்லாப்
பூவின்சுகம்வியந்தேன்-அநுதினமும்
பாவவழிநயந்தேன்-இனிமேல்வரும்
சாவைஎண்ணிப்பயந்தேன்-நிரந்தரமும்
தரைமுதலாகஎங்கும்-விரிபுலசுந்தரமே
அரியகருணைமழை சொரியுங்கந்தரமே ஏதோ

உ. தீயமனோவியாபாரம்-தீர்ந்திடவே இந்நேரம்
நீயருள்பரிகாரம்-நின்பதமே ஆதாரம்
நேசஅபிமானம்-சற்றும்இல்லாமல்
பேசுவேன்ஞானம்-எனக்குலவ
வேசம்அநுஷ்டானம்-இல்லையேஉப
தேசசன்மானம்-கொடுத்தருள்செய்
தினமனமகிழ்வுறு-கனதிரவியமே
அனவரதமும்ஒளிர்-தினகரமயமே ஏதோ

ந. நீர்க்குமிழிஎனவே-நிலையாவாழ்வுகனவே
பார்க்கஉள்உணைஉனவே-பரிந்தருள்வாய்கனவே
பாசம்குலையாதா-எனக்குமோகா
வேசம்கலையாதா-உலகம்செய்யும்
மோசம்தொலையாதா-உன்மீதுகன
நேசம்நிலையாதா-நிலைமைபெறு
நீதநிரஞ்சன-அமேபதசுகுணமே
வேதநாயகன்மனப்-போதமாமணமே ஏதோ

## ௫௬. இராகம்-பந்து-ஆதிதாளம்.

### பல்லவி.

நீயேசர்வசக்தன்-நல்ல
நிச்சயனேகன-அசூயனே — நீயே

### அநுபல்லவி.

தாயுந்தந்தையுந் தமருமற்றாயே
மாயுந்தொழிலறு வாழ்வுபெற்றாயே — நீயே

### சரணங்கள்.

க. பல்லாயிரம் அண்டப் படைப்பாய்உடைப்பாய்
எல்லாஉலகமும் எள்ளினுள் அடைப்பாய் — நீயே

உ. அஸ்திவாரந்தூண் அருஞ்சுவரிலையே
பத்தியார்செய்த பகிரண்டநிலையே — நீயே

௩. பலபொருள்தாங்கிடும் பர்வதம்போலே
தலையண்டகோடிகள் தாங்குவாய்மேலே — நீயே

௪. திரிநெய்செப்பில்லாத் தீபங்கள்போலே
பரிதிசந்திரன்மீன் பலசெய்ததாலே — நீயே

௫. அண்டம் அகண்டம் அடங்காதசரீரம்
தொண்டர்கள்மணமலர் சுமக்குமேபாரம் — நீயே

௬. பாரபூதங்கள்உன் பணிசெய்யுஞ்சரியே
சூரியன் உனதுடற் சோதிமுன்கரியே — நீயே

௭. யுகம்பலகோடிகள் உனக்கரைட்சணமே
நிகழுமுக்காலமு நினக்குக்கிரகணமே — நீயே

௮. சகலர்க்கும்ஊட்டிநீ தானென்றும்உண்ணாய்
நிகழ்பெருங்காவலால் நித்திரைபண்ணாய் — நீயே

௯. தினகரசந்திர தீபமேற்றிடுவாய்
வனமுகிற்கடத்தால் மழையூற்றிடுவாய் — நீயே

௧௦. நடவாய்பறவாய் நாடெங்கும்இருப்பாய்
உடலாய்உயிராய் உயர்வாய்பொருப்பாய் — நீயே

௧௧. மரங்களினுழைந்தே மலர்வாய்கிளைப்பாய்
கரங்களில்லாதே கருமங்கள்விளைப்பாய் — நீயே

௧௨, கண்ணாய்ப்பொருள்களைக் காட்டிவாய்பார்ப்பாய்
அண்ணாசகலமும் ஆட்டியேதீர்ப்பாய் நீயே

௧௩. கணைகடல்உனதருட் கடலிலேலோர்திவலை
இனிவேதநாயகா எனக்கென்னகவலை நீயே

---

௱௪. இராகம்-தோடி-ரூபகதாளம்

பல்லவி.

ஞானகுருபரவடிவே-அருமறையின்முடிவே ஞான

அநுபல்லவி

மோனசுகாசனசம்பிரம-முத்தியளித்திடும்-நித்தியபரப்பிரம ஞான

சரணங்கள்.

௧, பாமரனான என்மீதுனக்குக் கிருபைஇல்லையா-எந்தன்
பாவம்தொலைத்தென்னை ஆள்வதுனக்கொருமலையா
தாமதம்நீசெய்ய தேகம்எனக்கென்னநிலையா-நிதம்
தஞ்சம்பத-கஞ்சம்பிர-பஞ்சம்தரு-நஞ்சம்தொலை ஞான

௨. தீனகிருபாநிதிஎன்றுபேர் கொண்டநீஅலவா-அருள்
செய்தென்னை ஆள்வதினால் உனக்கியாதொருசெலவா
ஆனமலர்ப்பதம்அண்டும் நான்கிள்ளை நீஇவர்-புவி
அஞ்சும்புலன்-அஞ்சும்பகை-நெஞ்சுபசெயும்-வஞ்சம்தொலை ஞான

௩- நின்மலநித்திய நிரஞ்சனநீதவிநோதா-நானும்
நிகிலசராசரம் யாவையும்தாங்கும் பிரக்கியாதா
தன்மவிலாசா சுகானுபவானந்த நீதா-எனைச்
சாடும்வினை-வாடும்வழி-பாடும்பர-வீடும்கொடு ஞான

௪. நம்பும்அடியவர் துன்பம்அகற்றுங் குணாளா-பவ
நாசமகேச பிரகாசவிலாச தயாளா
அம்புவியில்வேதநாயகன் போற்றும்பொற்றாளா-இங்கும்
அந்தர்புவி-எங்கும்புகழ்-தங்கும்படி ரங்கம்பெற ஞான

---

## ௱௮. இராகம்-ஈசமனோகரி-ஏகதாளம்.

பல்லவி.

மெய்யிது மெய்யிது மெய்யிது தேவே

அநுபல்லவி.

ஐயையோஎன்செய்வேன் அருள்புரிகுவாயே — மெய்

சரணங்கள்.

௧. மலர்ந்துனைப்போற்றாத வாயனும்நானே
கலந்துநின்பணி செய்யாக்காயனும்நானே — மெய்
௨. கண்டுநீர்பெருகாக் கண்ணனும்நானே
அண்டுவாவியர்க்கெல்லாம் அண்ணனும்நானே — மெய்
௩. நிதம்உனைநினையாத நெஞ்சனும்நானே
மதங்கொண்டுதிரிகின்ற வஞ்சனும்நானே — மெய்
௪. கனிந்துனைச்சேவியாக் கரத்தனும்நானே
தினந்தினம்வணங்காத சித்தனும்நானே — மெய்
௫. கருதிஉன்புகழ்கேளாக் காதனும்நானே
சுருதியைமறுத்திடும் சூதனும்நானே — மெய்
௬. கடுகஆலயம்செல்லாக் காலனும்நானே
மூடுகியவினைக்கெல்லாம் மூலனும்நானே — மெய்
௭. போதஅபேக புநிதநிஷ்கோபா
வேதநாயகன்தொழும் விமலசொரூபா. — மெய்

---

## ௱௯. இராகம்-சாமா-ரூபகதாளம்.

பல்லவி.

பரபிரமமே-திருவருள்-தரல்கிரமமே- அநுதினமும்

அநுபல்லவி.

வரகுண சுகாநுபவ
சுரகண பூஜிதவைபவ — பரபிரம

சரணங்கள்.

௧. செய்வதெல்லாம் தீவினையே
தினையளவும் உனை நினையேன்
தெய்வமே நாயினன் உனையே
தீர்த்தருள்வாய் துயர் தனையே — பரபிரம

| | | | |
|---|---|---|---|
| ௨. | அறியேன் மேற்குக் | கிழக்கு | |
| | அன்புமில்லேனினி | சழக்கு | |
| | சிறியேன்மேல்வன் | வழக்கு | |
| | ஜெபதபத்தில்லனேப் | பழக்கு | பரம |
| ௩. | பாழ்மனமோவல் | விரும்பு | |
| | பாவம் அதற்குக் | கரும்பு | |
| | தாழ்வுறுநான்சிறு | துரும்பு | |
| | சாமிஎன்மேல்மனந் | திரும்பு | பரம |
| ௪. | நினையேன்தர்மம் | அதர்மம் | |
| | நிலமிசைநான்மூட | ஜென்மம் | |
| | அனையேயதின்னம் | வர்மம் | |
| | அகற்றிடுவாய்எனது | கர்மம் | பரம |
| ௫. | அகண்டமண்டலாதி | பத்திய | |
| | ஆதியந்தரகித | நித்திய | |
| | மிகுந்தகுணபரண | சத்திய | |
| | வேதநாயகன் | ஸ்துத்திய | பரம |

---

## ௱௰. இராகம்-பியாகு-ஆதிதாளம்.

### பல்லவி.

பார்தர்நம்பினேனே-போதம் அருள்கோனே

### அநுபல்லவி.

வேதமுதலோனே-மாதவர்பிரானே பாதம்

### சரணங்கள்.

௧. ஆதரவுநீயே ஐயனேஎன்தாயே
வாதைமலநோயே-மாற்றி அருள்வாயே பாதம்

௨. தீங்குகள் அனேகம்-செய்கிறேன் துரோகம்
நீங்கிட விவேகா-நீ [illegible] மோசா பாதம்

௩. முக்தாகள்சமூகனே-முக்கியபிரமுகனே
உத்தமசமூகனே-ஓ வேதநாயகனே பாதம்

## ௱௰௧. இராகம் கனகவசந்தம்-ஆதிதாளம்.

### பல்லவி.

நீயே துணைபரனே-துன்பம்
நீங்கிட அருள்பரனே

### அநுபல்லவி.

மாயாதிமிரவிஜயதினகரனே
தாயாகியசர்வ சாதகரனே — நீயே

### சரணங்கள்.

க, அடியேன்செய்வ தெல்லாம்அரும்பாவம்
கொடியேன்மீது கொவிளாதேகோபம் — நீயே

உ, பண்ணேன் துதியே படியேன்விதியே
கண்ணேமணியே கதியேநிதியே — நீயே

ந. உனையேநம்பிடில் உண்டோபயமே
அனையேவினைதீர்த் தருள்வாய்ஜெயமே — நீயே

ச, மாதவம்உடையவர் மகிழ்மலரகிதா
வேதநாயகன்தொழும் விபுதர்கள்சகிதா — நீயே

---

## ௱௰௨- இராகம்-பைரவி-திரிபுடைதாளம்

### பல்லவி.

நாதாகன-வேதாதினம்-நீதாவரமே

### அநுபல்லவி.

போதாசுக-தாதா அதி-கியாதாபிர-சாதாபுவி — நாதா

### சரணங்கள்.

க. நித்தியம் அநித்தியம் சுகத்தினை மதித்திடு
பைத்தியம் விடுத்தினியசத்தியம் உதித்திடவே — நாதா

உ, சுந்தர மடந்தையர்கள் சந்திர முகந்தனை
நினைந்தெனது சிந்தனைசெய் தந்திரம் ஒழிந்திடவே — நாதா

ந. சொப்பனமே ஒப்பனைகொள் அற்பஉடலைப்பொருள்
எனப்பிரியம் வைப்பதல நற்பலன் உறாதுவன — நாதா

௩. மாதர்கீதி-பூதலமேல்-ஆதரவுற்றாடி-
சாதகப்பிர போதமருள-வேதநாயகன்புகழும். நாதா

---

## ௱௰௩. இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

### பல்லவி.

வேதநாயகனே-மெய்-மெய்-மெய்-மெய் வேத

### அநுபல்லவி.

பாதகஞ்செய் துழலும்பாழ்மதியே-ஐயன்
பாதங்கள் அன்றிநமக்காரகதியே
பூதலவாழ்விலெனும்புகழ்நிதியே-வெறும்
பொய்-பொய்-பொய்-பொய் வேத.

### சரணங்கள்.

௧. அத்தமியாதொளிர் திவாகரனை-அதி
அற்புதமான சிவாகரனை
சித்தமிசைஒளிர் சுதாகரனைத்-துதி
செய்-செய்-செய்-செய்- வேத

௨. பூதலநம்எங்கும் இசைபோனவனை-அதி
புனிதனைஉயிர்க்குயிர் ஆனவனை
மாதவர்காணுகின்ற மானவனை-உன்னுள்
வை-வை-வை-வை வேத

௩. நாதபூதபௌதிகஸ்தாபகனை-வேத
நாயகன் மீதில்என்றும் ஞாபகனை
ஓதரிதானசர்வ வியாபகனைப்-பணிந்
துய்-உய்-உய்-உய். வேத

---

## ௱௰௪. இராகம் கௌளிபந்து-ஆதிதாளம்.

### பல்லவி.

ஓ-ஓ-ஜெகநாதா-ஒருவரம்-உதவிடல் ஆகாதா.

### அநுபல்லவி.

தேவேதினப்பல பாவேபாடி என்
நாவே இளைத்தேனே. ஓ ஓ

சரணங்கள்.

க. மனம்விஷயப்பிரியம்-சகலமும்
வாசாகைங்கரியம்
சினமதம்மாற்சரியம்-பூண்டஎன்
செய்கைகள் ஆச்சரியம்
இனமாகிய பக்தஜனமுடன் ஐக்கியம்
கனவினும் நீங்காமல். ஓ-ஓ

உ. பொய்யை மெய்யெனநாடி-அநித்தியப்
பொருள்களையேதேடி
வையகம்எங்கும்ஓடி-நான்செய்த
வஞ்சகம்பலகோடி
மையற்கரிஇடர்கள்-செய்யவேதொடருதே
ஐயோ-கூ-கூ-கூ. ஓ-ஓ

௩. நேசர்சிந்தாமணியே-அடியேன்
நெஞ்சகம்பூண் அணியே
ஆசையில்வரும்பிணியே-தொலைத்துநல்
அறமேவிடப்பணியே
ஈசனேஉனைத்தொழும்-தாசன்வேதநாயகன்
பாசவலை உறாமல் ஓ-ஓ

---

௯௫. இராகம்-தேசமுகாரி-ஆதிதாளம்.

பல்லவி.

போதம்தர என்னவிவாதம்
எனக்கமல
போதத்தர என்னவிவாதம்.

அநுபல்லவி.

வேதம்உணர்ந்தொழுகும்
நீதம்உடையவர்க்குப்
பேதம்அறவரப்பிர
சாதம்அருள்தெய்வமே. போதம்

சரணங்கள்.

க. மோகம்பெருகியவெள்ள
கீகள்எனும்பெரும்பிர
வாகந்தனில்அழுந்தி
ஆகம்மெலிந்தேன்ஐயா. போதம்

உ. நெஞ்சோர்புறம்புலன்கள்
அஞ்சோர்புறம்மின்னார்கண்
நஞ்சோர்புறம்வருத்தும்
என்சோர்வெலாம்அகலப் போதம்.

௩. பெண்ணாசையாலும்வளர்
மண்ணாசையாலும்நிதி
எண்ணாசையாலும்மனம்
புண்ணாகிவாடினேனே போதம்.

௪. ஏதும்அறிவில்லாஎன்
மீதுவர்மஞ்செய்தல்த
காதுபரமபக்தர்
ஓதும்வேதநாயகா போதம்

---

ஙஃகூ- இராகம்-கௌளிபந்து-ஆதிதாளம்

பல்லவி.

சருவேசாசரணம்-எக்குன்-தாளே ஆபரணம்

அநுபல்லவி.

இரவும்பகலும் உனையே அநுசரணம்
இசைந்திடச்செய்யிதுநல்லபிரகரணம் சருவே

சரணங்கள்.

௧. நீயேசெய்வதெல்லாம் உபகாரம்
நின்மேற்சொல்லஉண்டோ விவகாரம்
தீயேன்புரிந்திடும்பிழைகள் அபாரம்
தேவர்செய்இதற்கோர் பரிகாரம் சருவே

உ. புண்ணியம்செய்திலன்கடுகுப் பிரமாணம்
பொய்யன்நான் ஆயினும்இது பிரமாணம்
எண்ணிடில்எனக்குமின்னார் விழிபாணம்
என்சரித்திரம்பெருங்கதா புராணம் சருவே

௩. பேசுவதெல்லாம்வாசா ஞானம்
பெரும்பாவியர்க்கெல்லாம்நான்பிர தானம்
நேசாசகலமும்உனதா தீனம்
நீயருள்எனக்குக்கிருபாரச பானம் சருவே

௪. ஈமேல்தொடுக்கின்றபாணப் பிரயோகம்
எனநீமுனிந்திடில்வது நிர்வாகம்
மாமோகாதியில்மயங்கி னேன் ஆகம்
வரவேதநாயகா அருள் பரிபாகம் சருவே

---

௯௰ இராகம்-நாதநாமக்கிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

சமயம்ஈதையா-நலம்எனக்-கமையஓதையா

அநுபல்லவி.

அமர்செய்தீவினைச்-சுமைதொலைத்தெனை
அமலன் ஆக்கிடல்நேர்த்தி-ஒரு
சமமிலா அருட்பூர்த்தி-உறு
நிமலகாரணமூர்த்தி சமய

சரணங்கள்.

௧. இன்னம்தாமசமோ-வினைசுமந்
திடஎன்னுல்வசமோ-எனக்
கின்னல்சகசமோ-உனக்கருள்
ஈய அவசமோ
அன்னமென்னடை-மின்னல்நேரிடைக்
கன்னியர்விழி இணையே-மனம்
தன்னில்பாய்ந்திடும்கணையோ-இனி
என்னசெய்வேன்நீதுணையே சமய

௨. கருணைகூராயோ-எனதுளக்
கவலைதீராயோ-இந்தத்
தருணம்வாராயோ-எளியேன்
தன்முகம்பாராயோ
இரணியம்பெண்கள்-தரணிமீதந்தக்
கரணமேவமெய்துறந்தேன்-கடல்
திரணம்போலெங்கும்பறந்தேன்-உன்றன்
சரணபங்கயம்-மறந்தேன் சமய

௩. மாயைநீக்காயோ-எனைமுகம்
மலர்ந்துநோக்காயோ-வினைத்
தீயைப்போக்காயோ-எனை அதி
சீலன் ஆக்காயோ

நீலா னசகாயமவ திலித்
தியவர்பயங்கரனே-மல
நோய்அறஅருள்வரனே-வேத
நாயகன்தொழும்பரனே. சமய

---

## ௧௧அ. இராகம்-இந்துஸ்தான்காப்பி-ஆதிதாளம்.

### பல்லவி

வாவா-வாவா-என் இதயந்தனில்
வந்தேமலரடிதந்தேஆண்டிட வாவா

### அநுபல்லவி.

சாவால்வருந்துமுன்-காவாகாத்திடில்
தவா-பூவார்-ஜீவா-தேவா வாவா

### சரணங்கள்.

௧. மீனனூர்கள்விழிவலே-தன்னுல் மயங்கினேன்
உன்னாதரவில்லாமல்-பன்னுள்மயங்கினேன் வாவா

௨. பொய்யானவாழ்வுதனை மெய்யாகநம்பினேன்
ஐயாநின்னடிக்கன்பு-செய்யாமல்வெம்பினேன் வாவா

௩. சிந்தாகுலங்கெட-விளைந்தாளிலதின்மையா
சுந்தாயேகீயெனை-முனிந்தேகலநன்மையா வாவா

௪. வேதநாயகன்தொழும்-சீதமலர்ப்பாதனே
ஆதவன்எனப்புவி-மீதில்வரும்நாதனே வாவா

---

## ௧௧௯. இராகம்-இந்துஸ்தான்காபி-ஆதிதாளம்.

### பல்லவி.

இன்னமும்என்மீ துனக்கேன்பராக்கு
நின்னருள்தந்தே யெனைநீகைதூக்கு இன்ன

### அநுபல்லவி.

மன்னரியபுவன மனோகரா
உன்னதப்பிரதாப கிருபாகரா இன்ன

## சரணங்கள்.

௧. ஏதும்கதியில்லா ஏழைநானே
    என்னசெய்யும்சலம்நீக்குமீனே
பாதவனஜமலரே நம்பினேனே
    பாகேஅமுதே பசுந்தேனே இன்ன

௨. கானலெனும்காய சுகபோகம்நாடிக்
    கர்த்தனேசெய்தேன் வினைகோடிகோடி
வேனில்வெயிலுற்ற புழுப்போலவாடி
    வேதனைவந்தேன் உன்தன்பாதந்தேடி இன்ன

௩. அண்டபகிரண்ட சர்வாதிகாரா
    அவ்வியக்தமய அசகாயசூரா
தொண்டன்வேதநாயகன் மனோசஞ்சாரா
    தோஷபரிகார உதாரதீரா

---

## ௧௨௦ இராகம்-சுருட்டி சாப்பு தாளம்.

## பல்லவி.

இப்படிப்பட்டநான்-எப்படிஉன்முகத்
    தேவர்துவிழிப்பேன் ஐயா இப்ப

## அநுபல்லவி.

தப்பறியாதவர்-தமதறிவினைத்தூண்டும்
தாயேதந்தையேஎன்மேல்-நீயேஇரங்கவேண்டும் இப்ப

## சரணங்கள்.

௧. பாதாதிகேசபரியந்தமும்நான்விடம்
    பகலும்இரவும்மாயை பண்ணும்என்னெஞ்சில்நடம்
ஏதம் அற அந்நெஞ்சம்ஏகா இடம்எவ்விடம்
    எனினும் உன்னிடம்வர வெளில் அருளுமூடம் இப்ப

௨. கத்தனேஎன்மேல் அம்புக் காற்றடிக்கினும்பொறேன்
    சாஸ்திரியெல்லாங்கேட்டும் கலங்கினும் தாபருறேன்
எத்தனைபொருள்பிறர் எனக்கீந்திடினுமறேன்
    எச்சிற்கையாலுங்காகம் ஓட்டிநான் இழிவுறேன் இப்ப

௩. இகபரசைநான்சுமந் திம்வதுபழிச்சுமை
எளினும்பிறர்செய்பற்ப இடருக்கும்செய்யேன்கூதமை
மிகஅற்பர்தமைச்சேர்வ தல்லால்மேலவர்சமை
வேதநாயகனேநான் மேவிஅறியேன்இமை இப்ப

---

## ௧௨௧. இராகம்-மோகனம்-திரிபுடைதாளம்

### பல்லவி.

எந்தவிதமும்உன்-கந்தமலர்ப்பதமே-அடியேன்அடைந்திடச்
சிந்தைமகிழ்ந்துநீ-தந்தருள்வாயிதமே

### அநுபல்லவி

அந்தரமெங்கும்-அமர்சர்வசாக்ஷியே
வந்தனைசெய்பவர்-மானசக்காக்ஷியே எந்த

### சரணங்கள்.

௧. சகசமானிடர் தமக்குப்பாவமே-பிழையாவும்பொறுத்துத்
தயைசெய்தாள் வதுநின்சுபாவமே
தகவேஉன்சரித்திரப்பிரபாவமே-அநுதினமும்பாடிச்
சாதகப்பெறஎன்மனோபாவமே
தந்தைநீதானே-உனக்கொரு
மைந்தனும்நானே-இவ்வாறுநான்
சொந்தமானேனே-தரிசனம்
தந்தருள்கோனே-புவிதனில்
நிகரில்லாதநியாயப் பிரசித்தனே
சகலலோகசராசர கர்த்தனே எந்த

௨. மணல்அன்னத்தில்கல்லாய்ந்திடுவகையே-எனைச்சோதித்திடில்என்
மனதில்உள்ளதெல்லாம் வினைத்தொகையே
குணம்உண்டோபுவிவாழ்வுவெறும்புகையே - அதைவிரும்பிஎன்மனக்
குரங்கும்ஐம்புலன்களும் செயும்பகையே
கோதையர்மோகம்-தனில்வரும்
வாதைஅநேகம்-எவர்க்குமே
ஈதநுபோகம்-எனக்கினிப்
போதும்இப்போகம்அநுதினம்
புணரும்ஆநந்த பொக்கிஷசாலையே
மணமிகுந்தருள் மலரும்சோலையே எந்த

௩. தாதைபிள்ளையத்தள்ளல் பாந்தமா-இழுநான்குபேரும்
சரியென்றெப்புக்கொள்ளும்சித்தாந்தமா
நாதனேஎன்னைமுனிதல் சாந்தமா-எனதுளஇரும்பையெந்
நாளும்இழுக்கும்விஷயம் காந்தமா-உனையேகதியென
நண்ணியசித்தர்-பெருந்தவம்
பண்ணியசுத்தர்-நிகரறு
புண்ணியபத்தர்-முதலிய
எண்ணிலாமுத்தர்-அடையுமுன்
பாதநிதி அவர்க்கே பிதிராஸ்தியா
வேதநாயகன் பங்கென்னநாஸ்தியா எந்த

---

## ௧௨௨. இராகம்-பைரவி-ஆதிதாளம்.

### பல்லவி.

ஏகாகனையோகா அநுதினம்-எனையாண்டருள்வாயே

### அநுபல்லவி.

சேகாகுணதிவ்ய தேஜோமயகாத்திர
பாகாநித்தியானந்த பாக்கியபரமக்ஷேத்திர ஏகா

### சரணங்கள்.

௧. கண்டுநிகர்மொழியும்-வண்டுநிகர்விழியும்
தண்டுநிகர்புயமும்-கொண்டுமயக்குமந்தப்
பெண்டுபிள்ளைகட்குழைத்-தண்டுறங்கிநிதமும்
மண்டுவினையலாவை-தொண்டுசெய்தறிகிலன் ஏகா

௨. நாடேன்பெரியரொடு-கூடேன்புண்ணியந்தன்னில்
நீடேன்உனதருளைத்-தேடேன்உனதுபுகழ்
பாடேன்அநுதினங்கொண்டாடேன்பதமலரைச்
சூடேன்அருவினையைச்-சாடேன்சுரர்புகழும் ஏகா

௩. நாதாதிவ்யவரப்பிர-சாதாஅகண்டசமு
கீதாநீனைவினுக்க-நீதாஅடியார்கள்ச
மேதாநிலைகொள்பஞ்ச-பூதாநிரிகர்மவி
னோதாதினந்தினமும்-வேதநாயகன்புகழ் ஏகா

## ௯௨௩. இராகம்-மோகனம்-ரூபகதாளம்.

பல்லவி

இன்னம்பராமுகமாமோ-வினை
நின்னருள்தானின்றிப்போமோ.

அநுபல்லவி.

மின்னல்உறுபுகழ்-நன்னலமேவிய
வேதார்த்தா-கன-போதார்த்தா-ஓ

சரணங்கள்.

௧. வன்பிழைபொறுப்புக்கொண்டாலே-க்ஷமை
மன்னர்செய்வார்புவிமேலே
என்பிழையைப்பலகாலே-ஒப்பி
னேனேமுனிவேதென்பாலே
அன்பேனும்தெப்பம் இல்லாமல்வினைக்கடல்
ஆழ்ந்தேனே-துயர்-சூழ்ந்தேனே-ஓ இன்

௨. தன்பதியைப்பகையோர்-கொள்ளத்
தான்பார்த்திருப்பவன்யாரோ
நின்பதிஎன்மதிதேரோ-அதில்
நீங்காமல்உன்கண்முன்னேரோ
உன்பகையோரொனும் காமக்குரோதாதிகள்
உற்றாரோ-ஜெயம்-பெற்றாரோ-ஓ இன்

௩. நெஞ்சங்கவலைக்குவிடா-ஐயா
நின்சோதனைக்குநான்ஈடா
அஞ்சாதேநீ இங்குவாடா-என
றருளாதின்னம் வேறுபாடா
தஞ்சமெனவேதநாயகன்போற்றிடும்
தாதாவே-பெற்ற-மாதாவே-ஓ இன்

---

## ௧௨௪. இராகம்-உசேனி-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஏகநாதா-அரும்பர-போகம்நீதா

அநுபல்லவி.

பாகவிகசித கற்பகாரண்ணிய
பதிதபாவன பரமகாருண்ணிய
தேகம்பிழை நதி ரூபலாவண்ணிய
தீயர்நமைச்சிக்ஷை செயுந்நீர்க்ஷாதண்ணிய ஏக

## சரணங்கள்.

௧. நனாழ்கினன் பாப அங்கணம்
நாடினேன்பெரியோர்கள்வங்கணம்
ஆளும்படி தரித்தனைநீகங்கணம்
அன்போடெனைச்சேர் நல்லோர்கள்தங்கணம்
நீளும் அகண்டித மாகியோங்கிய
மாளுந்தொழிறு மாசுநீங்கிய ஏக

௨. அடியன்மீதுனக் கென்னபிணக்கமே
அகற்றுவாயென தகங்கள்உணக்கமே
நெடியநின்பதமலர்க்குவணக்கமே
நிதமும்நான்செய்ய அருள்நல்லிணக்கமே
கடியதுயர்கடல் கடக்கஉனதிணை
அடியலாதினி அயலுண்டோபுணை ஏக

௩. உதிக்கும்பலகதிர்நிகரும்விதுரனே
உயர்நித்தியானந்த நகரச்சதுரனே
துதிக்கத்துதிக்கவே இனிக்கும்மதுரனே
சூழும்சீவராசிகள் தம்பிதுரனே
குதிக்குமாயையைக்கொன்றுதாழ்விக்கும்
மதிக்கும்வேதநாயகனைவாழ்விக்கும் ஏக

---

## ௱௨௫ இராகம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

### பல்லவி.

தயைபுரியே-எனதுளத்-துயர்பிரியே தயை

### அநுபல்லவி.

உயரும்தர்மசம்வர்த்தனா
உத்தமர்தம்மனநிர்த்தனா
கயவர்இழிகுலமர்த்தனா
கருதரும்புண்ணியயத்தனா தயை

## சரணங்கள்.

௧. புண்ணியம்தாயெனுக்கெட்டி
 பொய்களெல்லாம்வெல்லக்கட்டி
திண்ணியமெய்ஞ்ஞானதிட்டி
 சிறிதியில்என்னைநட்டி
சின்மயமே-மெய்வேத-நன்மயமே-எனையுறு
 தின்மைப்பழியோட-நன்மைப்பலன்கூட
உண்மெய்ப்பதம்நாட-கன்மப்பயிர்வாட தயை

௨. என்குறைபாராட்டாதே
 இன்னம்என்னைவாட்டாதே
நின்கோபங்காட்டாதே
 நிந்தைகள்என்மேற்சாட்டாதே
நிச்சயமே-நிலைபெறும்-அட்சயமே-கணமுறு
 நேசத்திடம்ஓங்க-பாசத்திடம்நீங்க
 மாசற்றறம்வீங்க-வாசத்தசைதாங்க தயை

௩. அண்டசராசரரூபா
 அகதிகளுக்கநுதாபா
விண்டலமண்டலபூபா
 வேதநாயகன்லாபா
விண்மணியே-எனதிரு-கண்மணியே-பழிசெயும்
 வேகப்பவமோட்டி-மோகப்பகைவிட்டி
 பாகப்பதம்கூட்டி-யோகப்பதிகாட்டி. தயை

---

## ௧௨௬. இராகம்-ஜங்கலா-ரூபகதாளம்.

### பல்லவி.

நல்வரந்தந்தாளுவாய்
நாதனே அபேதனே நல்ல

### அநுபல்லவி.

*அல்லும்பகலும் உன்னைநாட
அற்புதபரமார்த்தந்தேட நல்ல

### சரணங்கள்.

௧. அன்பருடனேகூடவும்-அநுதினம்துதிபாடவும்
இன்பசாகரம்ஆடவும்-ஞானக்கண்டால்ஓடவும் நல்ல

௨. பஞ்சபுலனை அடக்கவும்-பாவக்கலைக்கடக்கவும்
நெஞ்சமிளைந்கிக்கிடக்கவும்-நீதிநெறியில்நடக்கவும் நல்ல

௩. தினர்களையேதாங்கவும்-சிந்தைத்துயரம்நீங்கவும்
ஞானவழியில்ஓங்கவும்-நானுன்னடியில்தூங்கவும் நல்ல

௪. பத்தர்பரவுந்தேவனே-பரமதிவ்வியசுபாவனே
வித்தகமனோபாவனே-வேதநாயகன்சீவனே நல்ல

---

௧௦௭ இராகம்-பூரணச்சந்திரிகை-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னம்தான் பராமுகமோ-இதுதகுமோ-ஸ்வாமி

அநுபல்லவி.

சந்நிதானதரிசனம் அருளாமல் இன்னம்

சரணங்கள்.

௧. செந்தாமரைப்பதமே-சேரோன்நாவிதமே
நொந்தேன்பலவிதமே-நோய்தீர்ந்தருள்வுதமே
சிந்தைதனிற்பிரமைகொண்டேன்
தீமைகள்செய்து நைகண்டேன்
சந்ததமும்நலம் விண்டேன்
சஜ்ஜனசங்கமும் அண்டேன் இன்னம்

௨. பூண்டேன்அபசரிதம்-புகழேனின்சரிதம்
ஆண்டோய்என்துரிதம்-அறவேசெய்துரிதம்
நீண்டபெருந்தகை பூணேன்
நீதிதனையுமே பேணேன்
மூண்டபெருப்பழி நாணேன்
முத்திபெறும்வழி காணேன் இன்னம்

௩. அடியார்திரவியமே-அமலோதஸ்வரூபமே
வடிவார்ஆலயமே-வளர்தேஜோமயமே
திடமுறு புவனாகாரா
தினகரகோடிசரீரா
விடயமுரூ அதிகாரா
வேதநாயகன் உபகாரா

கஉ௮. இராகம்-பிலகரி-ரூபகதாளம்

பல்லவி.

கருணாலயநிதியே - தினமுமுன்
சரணம்புயம்கதியே கருணாலய

அநுபல்லவி.

சருவபேதவிநோதகாரண
பரமசாதகபவநிவாரண கருணாலய

சரணங்கள்.

க. நிதம்வெளுக்கவெளுக்கவெண்தூசு
நிமிஷந்தோறும்நிறையுமேமாசு
அதுபோல்என்தன் அகமுறும் ஆசு
அகலவேஉன் அருள் ஒளிவீசு
அகிலகோடிவிசாலகற்பித
சகலஜீவதயாள அற்புத கருணாலய

உ. இங்கென்செய்கைகள்யாவும்நிகிரஷ்டம்
எனக்குப்புண்ணியம்என்றும்அநிஷ்டம்
பங்கம்தீர்க்கில்உனக்குண்டோநஷ்டம்
பரமனேஅருளர்போஉதகிரிஷ்டம்
யாரமாகவேபண்ணும்பாதகம்
தீரவேநீசெய்வைஜாதகம். கருணாலய

௩. அமலபாஸ்கரகோடிசொரூபா
அகண்டசச்சிதானந்தபிரதாபா
நிமலவேதவேதாந்தநிரூபா
நிர்விகற்பநிரஞ்சனதீபா
நீதபூரணநிலயமஞ்சித
வேதநாயகன் இதயரஞ்சித. கருணாலய

---

கஉ௯. இ-ம் அமீரகல்யாணி-ரூபகதாளம்.

பல்லவி.

நாதாகிடையாதாவரமே - ஜெக - நாதா

அநுபல்லவி.

பாதாரவிந்தம்நம்பும் பாவியைமேதாவியாக்க நாதா

சரணங்கள்

க. எந்நாளுமூடவிர்த்தி - இல்லையேதிரிகரணசுத்தி
மந்தமானஎன் துர்ப்புத்தி-மாறவே அருளாயோசித்தி நாதா

உ. அகமெனுமதயானைஎன்வசம்-ஆகவே அநள்ஞான அங்குசம்
சுகதுக்காதிகளில்சமரசம்-தோன்றவே அருள்வாய்தயாரசம் நாதா

௩. அபயவரதகரசீர்வாக-ஆபத்பாந்தவ அருட்பிரவாகா
விபவசார்வபௌமயோக-வேதநாயகன்ஸ்வாநுபோக நாதா

---

## கஙo. இராகம் - அபூர்வம்.

பல்லவி.

சருவவிநோதா - திருவருள்தாதா - சருவ

அநுபல்லவி.

இரவுபகல் உனதிணையடி நாடவும்
தருநிர்மல சுகசாகரம் ஆடவும் சருவ

சரணங்கள்.

க. பசிதாகசோகரோக பாபசரீரம்
கசிவுறுமலஜல காமபண்டாரம்
சுசிஅறும் இதில்வினை தோஷம்அபாரம்
நீசமயனே அருள் நீபரிகாரம் சருவ

உ. கடல்நடுவேகலா காணுதகாகம்
இடர்உறல்போலவே எனதுயிர்வாகம்
மடம்அறஅருள்செய் நிர்மலபரிபாதம்
கடவுளேநாடினேன் கருணைப்பிரவாகம் சருவ

௩. சுரகணசேவித துரிதவிநாசன்
சருவதயாபர சாபவிமோசன
கருமநிவாரண கருணவிலோசன
வரவேதநாயகன் மனகமலாசன சருவ

---

## கஙக. இராகம் - சரசாங்கி - ரூபகதாளம்.

பல்லவி.

எத்தனைகவிபாடினும்பலன் ஏதுமில்லையே எத்தனை

அநுபல்லவி.

சித்தம்வாக்குக்கிரியை - அத்தனையும்தினம்
உத்தமமார்க்கத்தில் - ஒத்தூமில்லாமல் எத்தனை

## சரணங்கள்.

க. சந்ததமும்பரன்-சுந்தரபாதத்தை
அந்தரங்கமதனில்-சிந்தனைசெய்யாமல் எந்தனை

உ. மோசஞ்செயுமாசா பாசங்களென்னும்பி
சாசந்தனைச்சர்வ நாசஞ்செய்யாமல் எந்தனை

ந. கோபம்பொறாமைபொய் லோபம்முதமுதம்
பாபங்கட்கேமனஸ் தாபங்கொள்ளாமல் எந்தனை

ச. மும்மலபாசத்தை நிர்மூலமேசெய்து
நிர்மலசித்தனும் தர்மஞ்செய்யாமல் எந்தனை

ரு. தாயகனும்வேத நாயகன்தினர்ச
காயன்தனைநெஞ்சுள் நேயம்பண்ணாமல் எந்தனை

---

## கநஉ. இராகம் - ஹம்சத்தொனி - ஆதிதாளம்,

### பல்லவி.

ஞானோதயவரம் அருளே

### அநுபல்லவி.

பானோதயபரம்பொருளே ஞானோ

### சரணங்கள்.

க. மாயாவிகாரஜெகமே-தோயாமல் அருள்சுகமே
தூயர்நேசனே-ஸ்வயம்பிரகாசனே
தீயர்நாசனே-சித்விலாசனே ஞானோ

உ. தேகாபிமானம் அறவே-யோகாநுசாரம் உறவே
பாகம்சீட்டுவாய்-பாதம்காட்டுவாய்
மோகம்ஓட்டுவாய்-முத்திகாட்டுவாய் ஞானோ

ந. ஆதாரமேதுமிலேயே-பாதாரவிந்தம் நிலேயே
போததாயகா-புண்ணியரூபகா
வேதநாயகா-விமலதூயகா ஞானோ

## க௨௫. இராகம்-நீலாம்பரி-ரூபகதாளம்

### பல்லவி.

ஆதிமூலனே - நீதிநூலனே - நித்ய ஆதி

### அநுபல்லவி.

வேதபோதசாதகம்பெற - நீதயைபுரிவாய் ஆதி

### சரணங்கள்.

க. இட்டமாகமாயைக்கேஅஷ்டதிக்கும்விஜயமா - நான்
துஷ்டன்ஆகலால்உனக்கும் என்கிட்டவரப்பயமா
கெட்டஇதயமே - அதில் - கஷ்டம்உதயமே
துஷ்டரோடெனைக்கூட்டிஞான-நிஷ்டன்ஆக்குவாய்-நித்ய ஆதி

உ. துணைஉன்பாதஇணையலாது சொல்லவேறுண்டோ
இணையிலாயொரு நினையிலாய்தெய்வம் எனக்குத்தான் இரண்டோ
குணம்தருவாயே - அருள் - மணம்தருவாயே
உணரொண்ணாதநின துசேவை புணரவேஅருள்வாய்-நித்ய ஆதி

ஙு. மனையைச்சுத்தஞ்செய்தினிதுறல் மனிதர்க்கும்சகசமே
நினதகமெனும்எனது நெஞ்சம்நிதமலவசமே
புனிதம்செய்வாயே - அதில் - இனிதமர்வாயே
தநயன்வேதநாயகனுக்குன்-தரிசனமருள்வாய்-நித்ய ஆதி

---

## ௱௨௬. இராகம் - பியாகு - ரூபகதாளம்.

### பல்லவி.

பிக்ஷை அருளாயோ - ஞான பிக்ஷை

### அநுபல்லவி

அக்ஷயநிர்மல - லக்ஷணனேஜீவ
ரக்ஷணனே அதி - பக்ஷமுடன் ஞான பிக்ஷை

### சரணங்கள்

க. சத்தியமாறாத - புத்தியும்ஓயாத
பத்தியுமெய்ஞ்ஞான - சித்தியுமுத்தியும் பிக்ஷை

உ. நேசருடன்சகா - வாசமும்ஞானப்பிர
காசமும்உன்திரு - வாசமும்நேசமும் பிக்ஷை

௩. தானம்பொறைஅருள்-மானம்இதராதி
மானம்கிதானமும்-மோனமுந்தியானமும் பிறைசூ

௪. பூதமெல்லாம்விப-ரீதம்உருமலே
ஆதரவுசெய்யும்-வேதநாயகனே பிறைசூ

---

௧௫௫. இராகம்-ஸௌராஷ்டிரம்-சாப்புதாளம்.

பல்லவி.

இந்தமனம் கெட்டதையா
பந்தவலைப் பட்டதையா இந்த

அநுபல்லவி

சந்ததம் புண்ணியந்திரண்ட
சுந்தரமேதகா நான்கொண்ட இந்த

சரணங்கள்

௧. சொன்னபடி கேளாச்சண்டி
தோஷமூட்டை தூக்கும்பண்டி
உன்னிடம்வரவே நொண்டி
ஓடும்விஷயத்தை அண்டி இந்த

௨. இதரர்வாழக்கண்டால் வாட்டம்
எவருங்கெட்டாலோ கொண்டாட்டம்
மதனநெருப்புக்குக் காஷ்டம்
வாயுவினும் வேகம் ஓட்டம் இந்த

௩. சுகதுக்கபேதம்போதிக்கும்
சூழலெல்லாம்பேதிக்கும்
பகல்இரவென்றுசாதிக்கும்
படுவிஷயஉண்டுசோதிக்கும் இந்த

௪. காடுங்கரையும்சஞ்சாரம்
காமப்பசாசுக்காகாரம்
நாடும்பிரபஞ்சவியாபாரம்
ஞானம்இதற்கெட்டாத்தூரம் இந்த

௫. பாதகக்கட்கெல்லாங் குரு
பாசம் விளைவிக்கும்எரு
ஏதுவில்லா விஷதரு
எனக்கநுகூல சத்துரு இந்த

௬. பஞ்சபூதாதி நிர்மாணு
பக்தர்கள் இதயவாணு
விஞ்சையாம் சாஸ்திரபுராணு
வேதநாயகப் பிரமாணு இந்த

---

௧௦௬. இராகம்-மனோகம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

எந்தையே உனக்கும் அடியேனுக்கும்
எத்தனைபேதம்-ஐயா எந்தை

அநுபல்லவி.

சந்ததசர்வ சாம்பிராஜ்ய பிரபுத்துவ
சாசுவததேவதேவ மகத்துவ எந்தை

சரணங்கள்.

௧. தேவனீசகல புவனேசன்
சிறியனுன்உன்தன் தாசானுதாசன்
காவலனனீ ஸ்வயம்பிரகாசன்
கசடனுன் அந்தகாரப்பிரவேசன் எந்தை

௨. சத்தியமாகநீதர்மசொரூபி
தாரணிமீதிலேநான் பெரும்பாவி
நித்தியஞானநீசுத்த அரூபி
நிச்சயமாகநான் மெத்தக்குரூபி எந்தை

௩. சமமில்லாதநீயேமலரகிதன்
சாமிநான்உலகில் மலசகிதன்
விமலனேநீபல பிரயாணிகள்விகிதன்
வேதநாயகனேநான் எவர்க்குமேஅகிதன் எந்தை

# காவல் ஸ்தோத்திரம்.

௱௩௭. இராகம்-தேசிகதோடி-ஆதிதாளம்.

## பல்லவி

உனக்கே நமஸ்காரமையா-இடர்
ஒன்றும்வராமலே நன்றுசெய்தாயே உனக்கே

## அநுபல்லவி.

தனக்கோர்நிகர் என்றுமிலாத
தயாகரனே பராபரனே உனக்கே

## சரணங்கள்.

௧. நேத்திரங்களைநீயெம்-மாத்திரமுமூடாமற்
காத்திருந்தாயெனை-இராத்திரிமுழுதும் உனக்கே

௨. சத்துருபயமின்றி-நித்திரைசெயவெனைப்
பத்திரமாயுன்கையில்-வைத்திருந்தாயே உனக்கே

௩. முந்தும்அரவம்விஷ-ஜெந்துக்களால்அபாயம்
வந்துகெடாமலேகர்-பந்துசெய்தாயே உனக்கே

௪. தீயும்வெள்ளமுங்காற்றும்-பேயும்விலங்கும்பல
நோயும்வராமற்காத்தாய்-தாயுந்தந்தையும்போல் உனக்கே

௫. நாங்களோர்தடையின்றித்-தூங்கஇராமுழுதும்
வீங்கிருட்போர்வைதனைத்-தாங்கிநின்றாயே உனக்கே

௬. இருட்மொழிவிடியும்-பொருட்டுநீபுவிதனை
உருட்டிஇராமுழுதும்-புரட்டிநொந்தாயே உனக்கே

௭. பூதநாயகனேபிர-போதநாயகனேசங்
கீதநாயகனேநல்-வேதநாயகனே உனக்கே

# ஈசுரவருடத்துப் பஞ்சத்தைப் பற்றிப் பாடியது.

௧௩௯. இராகம்-உசேனி-திசிரஜாதி-மட்டியதாளம்

பல்லவி.

பஞ்சந்தீர் ஐயா-உனையன்றித்
தஞ்சம்ஆர் ஐயா பஞ்சம்

அநுபல்லவி.

வஞ்சகமோகம்உலோபர்கள்போலே
மண்ணில்மழைபொழியாமையினாலே
சஞ்சலமாகித்தளர்ந்தேமேன்மேலே
சாமிகதிஉந்தன்தாமரைகாலே பஞ்சம்

சரணங்கள்.

௧. எட்டுநாள்பத்துநாள்பட்டினியோடே
இடையிலேகந்தைஇருகையில்ஓடே
ஒட்டிஉலர்ந்தஉடல்எலும்புக்கூடே
ஒருகோடிபேர்கள்வசிப்பதுகாடே
ஊரும்இல்லாமல்-குடிக்கத்தண்
ணீரும்இல்லாமல்-அன்னமெனும்
பேரும்இல்லாமல்-பசிதீர்க்க
ஆரும்இல்லாமல்
பாரில்அனேகர் பரதேசிஆனூர்
ஊரில்அனேகர் உயிர்மாண்டுபோனூர் பஞ்சம்

௨. தாரங்களையேபுருஷர்கைவிட்டார்
தந்தைதாய்பிள்ளைகளைவிலைவிட்டார்
வேரும்இலையுங்கிழங்கும்சாப்பிட்டார்
வெறுங்கையராய்வெளியேபுறப்பட்டார்
வேசியும்அற்றூர்-பெண்சாதிகள்
தாலியும்விற்றூர்-வேலைசெய்து
கூலியும்பற்றூர்-பலபல
சோலிகள்-உற்றூர்
தோலும்எலும்புமாய்த் தோன்றியேசோம்பினூர்
பாலருந்தாய்முலைப்பால் அற்றுந்தேம்பினூர் பஞ்சம்

௩. பஞ்சம் இதுபோலக்கண்டதில்லையே
பலபேர் அடிப்பில்லையார்கள் உலையே
நஞ்சம்போல்நாட்குநாள்வறும்விலையே
நாங்கள்படுந்துன்பம்நானூறுமலையே
நரர்கள்மெய்வாடி-மனமிக
உருகித்தள்ளாடிக்-கண்ணீர் ஆறாய்ப்
பெருகியேஓடிப்-பிச்சைக்கேட்க
வருபவர்கோடி
இரவுபகல்எங்கும் ஏழைகள்சத்தமே
பரனைகலியொடுபண்ணினார்யுத்தமே பஞ்சம்

௪. ஏரிகுளம்நதியாவும்நீர்சுண்ட
ஏகமாக்கோடைகனல்எங்குமண்ட
சேரிமாடாடுகள்செத்துப்போய்வெண்ட
ஜெகமுழுதுமஉதராக்கினி அண்ட
தீனர்கள்நாட-அவர்களை
ஈனர்கள்ஜாட-தங்கள்கத
வானதைமூட-அதுகண்டு
மாளிகள்பாட
மேனிகுலைந்துமெலிந்தாரே இப்படி
கோன்உனையன்றிக்குடியாவதெப்படி பஞ்சம்

௫. மண்ணில் அநேகர்என்கண்ணின்முன்மாய்ந்தார்
மாஞ்செடிபுல்லையும்மாடுபோல்மேய்ந்தார்
எண்ணில்லாப்பேர்கள்சருகுபோற்காய்ந்தார்
இளைத்துக்களைத்துத்தவித்துடன்ஓய்ந்தார்
ஏங்கிடுவாரும்-களைகொண்டு
தூங்கிடுவாரும்-அன்னம்உண்ண
வாங்கிடுவாரும்-உடன்உயிர்
நீங்கிடுவாரும்
ஈங்கிந்தவண்ணம்இருண்டதுமேதினி
தாங்கும்வேதநாயகாதஞ்சம்வதினி பஞ்சம்

# ஹிதோபதேசக்கீர்த்தனைகள்.

## கடவுளைத்தியானிக்கும்படி வற்புறுத்தல்.

கசஎ. இராகம்-குந்தளவராளி- ஆதிதாளம்,

பல்லவி.

மனமேநீ-ஈசனாமத்தைவாழ்த்துவாய்-தினம்
வாழ்த்துவாய் மனமே

அநுபல்லவி.

அனவரதமும்நீ - அரும்பதம்பாடிக்
கனசுகமேவிடக் கலந்துகொண்டாடி மனமே

சரணங்கள்.

க, வம்புவார்த்தைகளே பெரும்பாவம்
வாய்க்குச்சேதமல்லாலென்னலாபம்
எம்பிரான்திருமகிமைப்பிரதாபம்
எடுத்துப்பேசுவது சத்காலக்ஷேபம் மனமே

உ, ஏகமாகவுள்ளுருகியேபரிய
இருகண்ணுனந்த பாஷ்பங்கள்சொரிய
தேகபரவசமதாயன்புவிரிய
சிரகராதிகள் அஞ்சலிபுரிய மனமே

ரு. கரும்புதின்னக்கைக்கூலியுமேனோ
கற்கண்டோ அமுதோபசுந்தேனோ
விரும்பும்பிரமானந்தமேயதுதானோ
வேதநாயகன்பேர்க்கிணைசொல்லநானோ மனமே

---

இதுவும் அது.

---

கசஅ இராகம்-அடாணா-ஆதிதாளம்

பல்லவி.

மனமேமறவாதே - ஐயன்பதத்தை மனமே

அநுபல்லவி.

கனவிலும் - நிதமுறு - நனவிலும்பலபல
நினைவிலும் - ஒழியாமல் - அனவரதமுமே மனமே

சரணங்கள்.

௧. பண்ணுஞ்சராசரமும் விண்ணும்படைத்தளித்தழிக்கும் பராபரன்தன்
வண்ணமலர்ப்பதத்தைக்கண்ணும்பொழுதில்இன்பந்தேக்கும் ஆகையினாலே
உண்ணும்பொழுதும்வேலை-பண்ணும்பொழுதும் ஒன்றை
எண்ணும்பொழுதுந்துன்பம்-நண்ணும்பொழுதுமே மனமே

௨. கல்லும்பெருமரமும் புல்லும்புனமுமேசஞ்சாரம் செய்யுமந்திபோல்
தில்லும்புல்லுந்திரியாவாமுஞ் செய்தென்னசாரம் வெளியிலேசான்
செல்லும்பொழுதும்-வார்த்தை-சொல்லும்பொழுதும்-பகை
வெல்லும்பொழுதும்-பின்னும்-அல்லும்பகலுமே மனமே

௩. துஷ்டதிசையும்ஓடிக் கெட்டலைந்தோம்புவோம்சரீரம் இருப்பிடத்தை
விட்டகலாமல்நியாணநிஷ்டை செய்வதில்என்னபாரம் பலவியாதி
குஷ்டம்வந்தாலுந்-துணைப்-பட்டம்வந்தாலும்-பெரும்
கஷ்டம்வந்தாலும்-பிறர்-வெட்டவந்தாலுமே மனமே

௪. கெடுக்கும்பவவினையை ஒடுக்கும்வேதநாயகனுமம் துயர்வராமல்,
தடுக்கும்இகபரமுங் கொடுக்குந்தினமும் உண்டுக்ஷேமம் நித்திரைசெய்ப்
படுக்கும்பொழுதுந் - துயில் - உடுக்கும்பொழுதும்ஒன்றைத்
தொடுக்கும்பொழுதும்-சுகம்-அடுக்கும்பொழுதும் மனமே

---

## இதுவும் அது

௧௪௨ இ-ம் கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

இனிய இம்மனமே - ஐயனை நீ-நினையாயோ இனமே
இகபரசித்திபெறவே இனி

அநுபல்லவி.

தனியிளம்பருவமுந் தாண்டிப்போனதே
பனைபோல்வளர்ந்துகிழப் பருவமானதே. மனமே

### சரணங்கள்.

௧. ஆசைக்கொருகருப்புமயிரோனும் இல்லையே
ஐயையோ கொக்குப்போல்நரைத்ததுதலையே
காசுக்குதவாக்கிழமென்பதுநிலையே
கன்னியர்க்கும் இனிநாம்கசக்கும்வேப்பிலையே — இனி

௨. கண்கள் இரண்டும் மூக்குக்கண்ணாடி தேடும்
காலூசலாடும் ஊர்கழியைக்கைநாடும்
தண்கொள்ளும்வேரற்றுத்தந்தங்கள் ஆடும்
கடுத்தாலுநில்லாமல்யெளநர் ஓடும் — இனி

௩. பசிவந்தபின்னெல்லைவிதைப்பதுமதியோ
பாடுந்தாகம்வந்தபின்வெட்டுதல்நதியோ
விசயஞ்செய்திடச்சாகுங்காலமேதகியோ
வீணையுனக்குக்கெட்டுப்போகச்சம்மதியோ. — இனி

௪. காலந்தனக்கென்னசெய்தோம்அபசாரம்
கனத்தஆசை அறுகினுஞ்செய்யுஞ்சோரம்
மேலுமேலும்உடலில்விளைக்கும்விகாரம்
வேதநாயகன்சொல்லேவேதாந்தசாரம் — இனி

---

## துற்குணங்களை வெளியிடல்.

---

௱௪௯. இ-ப-ா துருலகாய்போதி-ஆதிதாளம்.

பல்லவி

நெஞ்சேசந்தநாடெங்குந்தேடினும்
நீசர்நமைப்போலுண்டோ — நெஞ்

அநுபல்லவி.

அஞ்ஞானம்நாளும அகந்தைகள்நீடுவோம்
சஞ்சலப்பேயால் தலைசுற்றியாடுவோம் — நெஞ்

டிசு

## சரணங்கள்.

க. தேகம்உயிர்முதல்யாவைமேதந்த
தேவன்தனைமறப்போம்-கரு
மேகநிழல்போல்மறையும்பொய்வாழ்வை
விரும்பிநலந்துறப்போம்
மோகவிகாரத்திலேதடுமாறுவோம்
முன்னொன்றுபின்னொன்றுமாகப்பொய்கூறுவோம்
ஏகமாய்எங்கும்பிறர்களைத்தூறுவோம்
எப்படிஐயையோநாங்கரையேறுவோம் நெஞ்சே

உ. கோயில்திருக்கள்ஜெபதபம்யாவும்
கொடுவிஷம்போல்வெறுப்போம்-தினம்
நேயமதாகவேதூயமறைசொல்லும்
நீதிகளைமறுப்போம்
ஆயிரம்பாவம்அடிக்கடிபண்ணுவோம்
அன்னியமாதரை ஆசையாய்எண்ணுவோம்
ஈயாஉலோபகுணத்தையேநண்ணுவோம்
ஏழைபசியோடிருக்கநாமுண்ணுவோம் நெஞ்சே

ந. உள்ளபடிநமக்கெள்ளளவென்கிலும்
உத்தமந்தான் இலையே-பாவ
வெள்ளம்நிறைந்திடும்பள்ளமதனிலே
விழுந்துகெட்டோமிங்கேயே
வள்ளலைப்போல்வெறுமாயக்கூத்தாடுவோம்
வந்தஎளியர்க்குவாசலைமூடுவோம்
உள்ளேபகையும்உதட்டன்பும்நீடுவோம்
ஊனாஅடிதடுதேஉலையிலேபோடுவோம் நெஞ்சே

ச. உற்றாரையெல்லாம்சற்றமெய்ஞ்ஞானிபோல்
ஊனமயக்கிடுவோம்-பழு
தற்றமெய்ஞ்ஞானத்தில்பற்றுதலின்றி
அலையஉடம்படுவோம்
மற்றவரைக்கெடுத்துப்பழிவாங்குவோம்
வாழ்வோரைக்கண்டால்வயிறுப்பிவீங்குவோம்
நற்றவம்செய்யாமல்நாளெல்லாந்தூங்குவோம்
நல்வேதநாயகன்பாதத்தைநீங்குவோம் நெஞ்சே

## மனமயக்கந்தவிர்த்தல்.

---

கஉச. இராகம்-யதுகுலகாம்போதி-அடதாளசாப்பு.

### பல்லவி.

நீமலைக்காதே-நெஞ்சே-நீமலைக்காதே

### அநுபல்லவி.

நேமத்துடன்ஐயன்-நாமத்தைப்போற்றிடில்
க்ஷேமத்தைகொள்ளுவோம-காமத்திலேசிக்கி நீமலை

### சரணங்கள்.

௧. சோகத்தையும்அவி-வேகத்தையும்தரு
போகத்தையும்உத்தி-யோகத்தையும்நம்பி நீமலை

௨. ஆட்டையும்மந்தையின்-மாட்டையுங்கட்டிய
வீட்டையுமுன்கெட்ட-கேட்டையுமேஎண்ணி நீமலை

௩. இச்சுக்கிசசென்றேகிய-மூச்சுப்போனால்ஒரு
பேச்சுக்காகாமலப்-பீச்சுக்குழல்நம்பி நீமலை

௪. நாட்டைக்கொள்ளையிடும்-வேட்டைக்காரன்நமன்
காட்டைக்கலைத்துயிர்க்-கூட்டைக்கொள்வான்ஐயோ நீமலை

௫. கேட்டைத்தருஞ்சோற்று-மூட்டைதனைஒன்ப
தோட்டைப்பாண்டத்தைக்கற்-கோட்டையெனநம்பி நீமலை

௬. கொண்டையிலேரத்நக்-தண்டையிலேவிழிக்
கெண்டையிலேமதன்-சண்டையிலேசிக்கி நீமலை

௭. சேலையென்றும்முத்து-மாலையென்றும்இணைப்
வேலைகொள்ளும்பெண்கள்-காலைத்தழுவியே நீமலை

௮. சொத்துதமக்கென்று-கத்துவதன்றிஆ
பத்துக்குதவாத-புத்திரனைநம்பி நீமலை

௯. தாயகனைவேத-நாயகனைவிட்டு
மாயவலைப்படுத்-தாபமெய்திகெட்டு நீமலை

## நற்புத்திகூறல்.



௧௪௫. இராகம்-செஞ்சுருட்டி-திரிபுடைதாளம்

பல்லவி

போனதுபோகட்டும் இனியாகிலும்
புதிதாய்வாழ்மனமே

அநுபல்லவி.

ஞானமில்லாத நடக்கையைத்தொட்டாயே
நம்பினஎன்னை நட்டாற்றிற்கைவிட்டாயே — போனது

சரணங்கள்

௧. எத்தனைநாள் இருந்தாலும்-ஒருநாள்
இறப்பதுசத்தியமே-அப்போ
தென்னவரும்புண்ணியபாவம் அல்லாமல்மற்
றெல்லாம் அநித்தியமே
பித்தஉடம்பை வளர்த்திடச்செய்கிறாய்
பிரேதவயித்தியமே-என்றும்
பேதமில்லாப்பரன் பாதம்பணிந்தோர்க்குப்
பேரின்பசாநித்தியமே
பத்தர்சங்கத்தைநீ நித்தம்பிரிந்தாயே
பங்கம்புரிந்தாயே-எங்குந்திரிந்தாயே — போனது

௨. தன்றாரம் அன்றிப் பரதாரந்தாய்க்குச்
சமானம் இதுதெரி-கெட்ட
தாசியைக்கண்டால் நமஸ்காரஞ்செய்துநீ
தப்பவழிபாரோ
இன்றுநாளையென்றுநாள்போக்காமல்வினை
இக்ஷணமேதீரோ-பின்னும்
எந்தவுயிரையும் சொந்தவுயிரென
எண்ணித்தயைகூரோ
என்றும்பணப்பேய் தனைநீ நம்பிட்டாயே
எச்சுக்குட்பட்டாயே-சீசீகெட்டாயே — போனது

௩. நாதனைப்பேசிடும் நாவினில் அற்ப
நரஸ்துதி-ஏனாமே-நாளும்
நானெனதென்றபிமானம்பிடித்துநீ
நாடெங்கும்ஓடாதே

சாதகபாதகம் என்னவந்தாலும்
தவம்விடக்கூடாதே-கோடி
தர்மம் உனக்குண்டு கர்மம்விளைக்கும்
தனத்தினைத் தேடாதே
போதவேதநாயகன் தான்விடுத்தாயே
பொன்னை அடுத்தாயே-என்னைக்கெடுத்தாயே. போனது

---

## நித்தியானந்தந்தேடல்.

௧௯௬ இராகம்-இந்துஸ்தான்காப்பி-ஆதிதாளம்

பல்லவி.

நித்தியானந்தத்தைநாடு - பர
நிர்மலசுகந்தேடு-மனமே. நித்தியா.

அநுபல்லவி.

சத்தியமார்க்கந் தனிலேகூடு
சற்சனசங்கத் துடன்உறவாடு. நித்தியா.

சரணங்கள்.

௧. இந்திரஜாலம் உலகவைபோகம்
இன்றைக்கிருப்பதுவோ சந்தேகம்
அந்தரமின்னல்போல் அழியும்தேகம்
ஐயோ அதனுடன் உனக்கென்னஸ்நேகம். நித்தியா.

௨. தனதானியமுத லானசம்பத்து
சாசுவதமோ அதற் காயிரந்தத்து
தினமுங்கவலை விளைத்திடும்வித்து
சீச்சீ அதனை விரும்பல்விபத்து. நித்தியா.

௩. மெய்யேஒன்றுக்கும் உதவாப்பண்டம்
மிருகாதிகள்சூழ் மாமிசகண்டம்
பொய்யோ இதற்கிங்கு நித்தியகண்டம்
புண்ணியஞ்செய்யுனக் காயிரந்தண்டம். நித்தியா.

௪. காண்பவைகளெல்லாம் நிலையல்ல அநித்தியம்
காடமிறங்கிடவேண்டும் அநித்தியம்
வீண்பொருள்மீதுனக் கென்னபைத்தியம்
வேதநாயகன் சொல்லேசத்தியம். நித்தியா.

## கள்ளஞானம்.

---

### ௯௪௭. இராகம்-இந்துஸ்தான்காப்பி-ரூபகதாளம்.

#### பல்லவி.

புண்ணியம்போல் பாபம் - மனமே
புரிந்தோம்நாம் தினமே- புண்ணியம்.

#### அநுபல்லவி.

திண்ணமாகக்குளிக்கப் போயுந்தன்மேலே
சேற்றைப்பூசிக்கொண்டு திரும்புதல்போலே புண்ணியம்

#### சரணங்கள்.

௧. கையிலேநாம்பிடிப்பது ஜெபமாலை
கக்ஷத்தில்வைப்பதுவோ கன்னக்கோலை
மெய்யாகத்தினம் படிப்பதுதர்மநூலை
மேலுமேலுமநக்கு துன்மார்க்கவேலை. புண்ணியம்.

௨. ஒருபெண்வேண்டாமென்று கொள்வோம்சந்நியாசம்
ஊரில்உள்ளபெண்கள் மீதெல்லாம்நேசம்
பருகப்பசியில்லாத போதுபவாசம்
பசித்தால்ஒருபானைப் பருக்கையும்நாசம். புண்ணியம்.

௩. கடவுளைத்துதிப்பது போல்வாய்பாடும்
கண்ணுங்கருத்துங்கண்ம இடமெங்கும்ஓடும்
திடமாகக்கோயிற்குள்ளே தேகம்போய்க்கூடும்
சிந்தனைவெளியிலே திரிந்துதிண்டாடும். புண்ணியம்.

௪. ஆனதலையில்வளர்ப்பது ஜடைமுடியே
அநுதினமும்கொடுப்ப தாயிரந்தடியே
தானம்பிறர்அறியக் கொடுப்பதோர்கொடியே
தனியேவந்தவனுக்குத் தாண்தடிஅடியே புண்ணியம்.

௫. அடித்திடும்கொடுமையிற் புலிக்குநாமேலே
ஆகையினால் ஆசனம் புலிகதோலே
நடித்திடும்குரங்கு நாம்சேஷ்டையினாலே
நமக்குள்குறைவு பின் புறத்தொருவாலே. புண்ணியம்

௬. அங்கமெல்லாங்கரு மேகனியாதி
அதனைமறைக்கமெய்யில் அணிவோம்விபூதி
நங்கையில்லாப்பொருள் மனையாதி
நாம்துறந்தோம்கல்ல துறவறநீதி புண்ணியம்.

௭. ஏகஅன்னம்தள்ளிப் பிடிப்போம்ஒருசந்தி
இதரபக்ஷணங்களால் நிறைப்போம்தொந்தி
தேகபலம் ஒடுங்கில் விரக்தியாம்பிந்தித்
திடமானால்நம்செய்கை சிரிக்குமேசந்தி புண்ணியம்.

௮. உள்ளத்தின்அழுக்கை எங்ஙாளுமேசழுவோம்
உடலைக்கழுவநீரில் அடிக்கடி விழுவோம்
கள்ளத்தனமாகச்சந் நிதிமுன்னே அழுவோம்
காசுக்குநாயையும் கைகட்டித்தொழுவோம் புண்ணியம்.

௯. பசியில்லாதவர்க்குச் செய்வோம் அன்னதானம்
பசித்துவந்தோரைச் செய்வோம் அவமானம்
சுசியாகப்பிறர்க்குப தேசிப்போம் ஸ்நானம்
தூக்குணக்கடலிலே தினம்செய்வோம்நாணம் புண்ணியம்.

௰. பெருமையாஅணிவது காவிவஸ்திரமே
பிரதிஷ்டைசெய்வது தர்மசத்திரமே
பாவியநமதுதுர்க் குணம்சமுத்திரமே
பாடோம்வேதநாயகன்சரித்திரமே. புண்ணியம்.

# பொருளாசையொழித்தல்.

௧௪௮ இ-ம் கனகவசந்தம்-ஆதிதாளம்.

பல்லவி.

பொருளைவிரும்பவேண்டாம்-மனமே
பொருளைவிரும்பவேண்டாம்

அநுபல்லவி.

ஒருவரிடமும்நில்லாது எங்கும்பறக்கும்
திருவேதநாயகன் சேவடிமறக்கும் பொருளை.

சரணங்கள்.

க. பணமுள்ளவர்க்குநமன் பயப்படுவானோ
குணமுடன் அவர்களைக்கும்பிடுவானோ — பொருளை

உ. தனவான்களைத்துயர சாரஅஞ்சிடுமோ
கனசுகம்அவருடன் கலந்துகொஞ்சிடுமோ — பொருளை

௩. பார்க்கவொட்டாமலே பார்வையைக்கெடுக்கும்
வார்த்தைசொல்லாமலே வாயையுந்தடுக்கும் — பொருளை

௪. மண்டலத்தில்நமக்கு வயிறொருகுதிரா
கண்டபடிஉண்ணநாய் கபந்தனுக்கெதிரா — பொருளை

௫. ஊரில்நம்மிருப்பிடம் ஓருமுழமட்டே
பாரிலேநமக்கேன் பலமனைக்கட்டே — பொருளை

௬. உலகில்வயிறுநமக் குள்ளதுகாணே
மலைமலையாக்குவித்து வைக்குதல்வீணே — பொருளை

௭. சங்கையில்லாமற்பணந் தலைவெட்டும்ஒருவாள்
தங்கைவருவாள்பின்பு தமக்கையும்வருவாள் — பொருளை

௮. வித்தாரமாகப்பொருள் வேண்டுதல்தாழ்வு
செத்தால்தெரியுமே செட்டியார்வாழ்வு — பொருளை

௯. அருளுடன்ஏழைக்குதவாப்பணம்பிணமே
பொருள்அதைக்குழிவெட்டிப் புதைக்குதல்குணமே — பொருளை

௰. பூதமானாலும் உண்ணப் போதுமாகாணி
ஆகலால்நமக்கேன் ஆயிரங்காணி — பொருளை

௧௧. கெண்டைச்சேலைக்காரிதான் கிழவியாகாளோ
கொண்டைப்பூமுடித்திடும் குமரியாகாளோ — பொருளை

௧௨. வெறுங்கழுத்தாயிருந்தால் விக்குமோதொண்டை
உறுந்தலைஅணிபோனால் உடையுமோமண்டை — பொருளை

௧௩. கடுக்கன்யில்லாவிட்டாற் காதுகேளாதோ
உடுப்புகள்இல்லாவிட்டால் உடம்புமீளாதோ — பொருளை

௧௪. கந்தலைஅணிந்தவள்கர்ப்பம் ஆகாளோ
விந்தைநகைஉள்ளவள் [illegible] — பொருளை

௧௫. பொருந்தச்செலவிடாமல்புதைத்திடும்பணமே
இருந்தென்னபோயென்ன இதில்என்னமணமே — பொருளை
௧௬. நிதிவெள்ளியாதிகள்நிச்சயம்மண்ணே
புதையல்தன்னினமென்றுபுசிப்பள்மண்பெண்ணே — பொருளை

---

## செல்வச்செருக்கு

---

### ௧௪௬. இராகம்-தேமநோகரி-ஏகதாளம்.

பல்லவி.

வீண்கர்வம்ஏன்மனமே-உனக்கு
வீண்கர்வம்ஏன்மனமே

அநுபல்லவி.

காண்பொருள்சகலமுங் கடவுள் ஆதீனம்
கனதொண்டமானுந் தோட்டியுமேசமானம் — வீண்

சரணங்கள்.

௧. நம்முடன்பிறந்ததுண்டோ உத்தியோகம்
நமக்குமுன்னே அநுபலர் அநுபோகம்
அம்ம அதற்குக்காத்திருப்பர் அனேகம்
அனைவர்க்கும் உண்டு ராஜீகதெய்வீகம் — வீண்

௨. தாசிகள்போல்செல்வம் பலருடன்கூடும்
தனமிருந்தஇடத்தில் தரித்திரம்நாடும்
கூசாமல்யானையைக் கொசுகுமேசாடும்
குப்பைஉயர்ந்து கோபுரத்தையுமூடும் — வீண்

௩. கனவில்கண்டகத்திரிக்காய் கரிக்காமோ
கல்லால் இரும்பால்காயங் கொண்டோமோ
தினம்அசையாமல்மண்ணில் வேர்கொண்டநாமோ
சினந்துநாம்சபித்திடில் திசையெல்லாம்வேமோ — வீண்

௪. தம்பொருளென்பர் மனைவியர்மைந்தர்பேரர்
தப்பினால்விடுவரோ தாயாதிகாரர்
வெம்பிச்சமயம் பார்த்திருப்பார்சோரர்
மிச்சத்தைச்சுருட்டுவார் மேல்அதிகாரர் — வீண்

௫. இடையிற்கோவணமின்றிப்பிறந்தோமெய்யே
இறந்திடுங்காலத்தும் நாம்வெறுங்கையே
உடைமைகமதுசொந்தம் என்பதுபொய்யே
ஊரார்பொருளைநாம் சுமந்தோம்ஐயே வீண்

௬. செகமுழுதும்நமக்குச் சர்வமானியமா
சிந்தித்தகாரியமெல்லாம் ஜயமா
சுகதுக்கபேதம் இல்லாதிவ்யமயமா
துஷ்டன்இயமனுக்கு நமைக்கண்டால்பயமா வீண்

௭. நீடுங்கங்கையுந் தமக்கையும்அதிநேசம்
நிதமுங்கைம்மாறிக் கொள்வார்அவர்வாசம்
சூடுண்டமாடுபோல் துள்ளல் ஆபாசம்
துள்ளினமாடுபொதி சுமக்கும்பிரகாசம் வீண்

௮. தாய்வயிற்றில்இருந்து ஜனித்திட்டபோது
சட்டைதலைப்பாகுடன் நாம்வந்ததேது
மாயப்பிரபஞ்சத்தின் வாழ்வெல்லாஞ்சூது
மாவேதநாயகனை மறக்கலாகாது வீண்

---

## உலகவாழ்வை வெறுத்தல்.

௧௫௰. இராகம்-ஹிந்துஸ்தான்காபி-ரூபகதாளம்.

பல்லவி.

வாழ்வைநம்பாதே-மனமே-வாழ்வைநம்பாதே

அநுபல்லவி.

தாழ்வில்லாதநமதுஸ்வாமி
தாளைத்தேடுபாடுபூமி வாழ்வை

சரணங்கள்.

௧. தேகமாம்ஸமூட்டை-பல
ஜெந்துவுக்கும்நல்லவேட்டை-அதில்
ஓகோஅனந்தம்ஓட்டை-உயிர்
ஓடிடஎத்தனைபாட்டை-இந்த

உ. இன்றைக்காளுவார்நாடு-நாளை
எடுப்பர்கையிலேஓடி-உடல்
ஒன்றுக்குதவாதகூடு-இதை
உற்றுப்பார்த்தால்-வெட்கக்கேடு-புவி வாழ்வை

௩. பெண்டுபிள்ளைச்சென்னவாட்டம்-நம்மைப்
பிடிக்கித்தின்பதில்நாட்டம்-கையில்
உண்டாகும்போதுகொண்டாட்டம்-செல்வம்
ஓய்ந்தால்சகலரும்ஓட்டம்-புவி வாழ்வை

௪. இந்தவுலகத்திற்பிறந்தார்-முன்னம்
எத்தனையோபேர்கள் இறந்தார்-பெற்ற
தந்தைதாய்பாட்டரும்பறந்தார்-நாளு
தாரங்கள்போய்நம்மைமறந்தார்-புவி வாழ்வை

௫. இன்றுபல்லக்கிலிற்போவார்-நாளை
எடுக்கும் ஆள்களும் ஆவார்-நரர்
என்றவர்யாவருஞ்சாவார்-மதி
ஈனர்நரகத்தில்வேவார்-புவி வாழ்வை

௬. கூத்தில் அரசனைப்போலே-வேஷம்
கொண்டவர்க்குண்டோசெங்கோலே-புவி
சாத்தியநாடகசாலை-அந்தச்
சாலையில்நாம்எந்தமூலை-இந்த வாழ்வை

௭. வண்டியும்ஓடத்தில்ஏறும்-ஓடம்
வண்டியில்ஏறும்நாள்தோறும்-நாம்
கொண்டபொருள்கள்கைம்மாறும்-வேதம்
கூறுஞ்சொல்லில்நிறைவேறும்-புவி வாழ்வை

௮. எண்ணிக்கையில்லாமல்இங்கே-முன்னம்
இருந்தவரெல்லாம்எங்கே-நாமும்
நண்ணிப்போகவேண்டும்அங்கே-வேத
நாயகன்பாதம்நம்பங்கே-புவி வாழ்வை

## உடலைவெறுத்தல்.

### ௩௰௧. இராகம்-ஹிந்துஸ்தான்காபி-ரூபகதாளம்.

பல்லவி.

உடலைநம்பாதே-மனமே

அநுபல்லவி.

குடலுந்தசையுமெலும்புநரம்பும்
கொழுத்துப்பழுத்துப்புழுத்துநிரம்பும் உடலை

சரணங்கள்.

௧. இந்திரியம்மலமூத்திரம்-தசை
இரத்தம்நிறைந்தபாத்திரம்-பாச
பந்தப்பேய்வளர்க்ஷேத்திரம்-வெறும்
பவந்தநாடகசூத்திரம்-இந்த உடலை

௨. ஆசைப்பக்ஷியின்கூடு-பல
அசுத்தஞ்சேர்குப்பைமேடு-இதை
ஏசிப்போபோவென்னும்வீடு-கிட்ட
எட்டிவாவாவென்னுங்காடு-இந்த உடலை

௩. கண்ணிற்பீளைகள்வடியும்-இரு
காதிற்குறும்பிபடியும்-சளி
வண்ணமூக்கில்வந்திடியும்-நல்ல
வாயுமெச்சிலாய்மூடியும்-இந்த உடலை

௪. பயனின்றிவிழுமட்டை-கொடும்
பாம்புகழற்றுஞ்சட்டை-போலே
உயிர்போனால்வெறுங்கட்டை-இதை
உற்றுப்பார்த்தால்லொடலொட்டை-இந்த உடலை

௫ காகம்நாய்நரிக்கூட்டம்-பல
கழுகுக்குநல்லஊட்டம்-கரு
மேகநிழல்போல்ஓட்டம்-இது
மெய்யல்லப்பொய்மலாட்டம்-இந்த உடலை

௬. எத்தனைபேர்புவியாண்டார்-அவர்
எல்லாருமுன்னேமாண்டார்-இங்கே
செத்தவரில்எவர்மீண்டார்-தெய்வ
சித்தம் ஒருவருந்தாண்டார்-இந்த உடலை.

௭. மோடியேன் ஒருக்காலே-உடல்
முழுதும் எலும்புதோலே-அதில்
நாடிஒடுங்கினலே-பின்பு
நமக்கிங்கேஎன்னவேலை-இந்த உடலை.

௮. கணவன்தெய்வமென்பாள்பாரி-அவள்
காரியத்திற்கெட்டிக்காரி-செத்த
பிணமுன்வருவாளோநேரில்-சுகம்
பிரிந்ததற்கல்லோஒப்பாரி-இந்த உடலை.

௯. கிருமிகட்குபகரணம்-தசை
கிழிந்துவடியும் இரணம்-இது
கருமமேற்கொள்ளுந்திரணம்-இது
காரணந்தப்பினல்மரணம்-இந்த உடலை.

௰. வேதநாயகன் கூறும்-சொல்லை
மீறினல்நலமாறும்-பல
காதந்துர்க்கந்தம்நாறும்-பித்தம்
கபமலஞ்சலம் ஊறும்-இந்த உடலை.

---

## பணதூஷணை.

---

### ௧௫௨- இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

#### பல்லவி.

பணமேஉன்னால்என்னகுணமே-தண்டம்
பண்ணினேன்சற்றும் என்கண்ணின்முன்னில்லாதே பண.

#### அநுபல்லவி.

மணமில்லாதமோகக்குரோதந்துன்
மார்க்கமுமூர்க்கமும் யார்க்குமேபோதிக்கும் பண.

## சரணங்கள்.

௧. தேடிஉன்னைவைத்துமூடியவர்க்குநீ
தீர்க்காயுசுதருவாயோ-இனி
நாடியமன்வந்துசாடும்போதுநீ
நானென்றுமுன்வருவாயோ-இனி
கூடியபேர்கள்குடியைக்கெடுப்பாயே
கொல்லச்சொல்லிப்பின்னும்காட்டிக்கொடுப்பாயே
ஓடி ஓடி அற்பனாப்போயடுப்பாயே
உத்தமனைக்கண்டால்ஓட்டமெடுப்பாயே பணமே

௨. மத்தியில்உன்னைப்படைத்ததல்லால்மூனி
வரும்போதுகூடவந்தாயோ-இஷ்ட
சித்தியும்சத்தியும்நித்தியமகைகூடச்
சிலாசாசனம்நீதந்தாயோ
புத்தியிருக்கும் இடம்விட்டேநீங்குவாய்
பொய்யும்புரட்டும்உள்ளவிடத்தோங்குவாய்
எத்திசையுங்கெடுத்துப்பழிதாங்குவாய்
ஈயாதவர்கையகப்பட்டுத்தூங்குவாய் பணமே

௩. மண்ணில்உன்னைநரர்பண்ணினதன்றி
மனிதனைநீபண்ணினாயோ-உயர்
விண்ணினைமண்ணினைப்பண்ணினோன்நேசம்
விலகச்செய்சத்துருநீயோ
எண்ணரிதான இடமெங்குமோடுவாய்
இந்திரஜாலஞ்செய்துவிளையாடுவாய்
வண்ணநரர்கள்மனக்கூனைமூடுவாய்
வைத்துப்புதைப்பவர்வாயில்மண்போடுவாய் பணமே

௪. வஞ்சகமாயப்பிரபஞ்சமெல்லாம்நீ
விளைத்துச்செய்வாய்கொடுங்கோன்மை-கெட்ட
நஞ்சம்நிகருனைநெஞ்சமெண்ணாதமெய்ஞ்
ஞானிகட்கல்லவோமேன்மை
பஞ்சமாபாதகங்கட்குநீ ஆலயம்
பாரில்துன்பமென்பதெல்லாம்உன்தன்மயம்
மிஞ்சஉனையடையோர்க்கொழியாப்பயம்
வேதநாயகன்மேனனக்குண்டோஜயம் பணமே

# பரஸ்திரீகமனம் விலக்கல்.

---

௬௩. இ-ம் கமாஸ்-ஆதிதாளம்.

பல்லவி.

மாதரை நினையாதே-நெஞ்சே மாதரை

அநுபல்லவி.

பூதலமேல்பெரும்-பாதகமும்விப
ரீதமுமேவரும்-ஆதலினால்மறு மாதரை

சரணங்கள்.

௧, ஆரமஞ்சட்பூச்சல்லவோ முகக்காந்தி
அடிக்கடி பெண்கள் நிறமாறும்பச்சோந்தி
ஒருமையா அவர்களை விரும்புதல்பிராந்தி
உடற்குட்புகுந்து பார்த்தால்வரும்வாந்தி மாதரை

௨, முன்னழகும் பின்னழகு மேபட்டு
முகஅழகானது நெற்றியிற்பொட்டு
அன்னநடையென்பதுகவிஞர்கள்கட்டு
அருகிலில்லாமற் பறந்திடுஞ்சிட்டு மாதரை

௩. மரீத்திசியமாதர்கள் சுகம் அனாக்ஷணமே
மறுகிவிஷத்தில் உண்டாந் துன்பாணமே
பிடித்திடில் மலஜலம் எலும்புதோல்திணமே
பிராணன்போனால் நரிநாய் பிடுங்கிடும்பிணமே மாதரை

௪, மேனிமுழுதும் வெளிவேஷத்தின் தளுக்கு
மினுக்கெண்ணெய்பூசியே காட்டுவார் சுளுக்கு
ஸ்னானம் அறவேகினாற் தண்ணீர்முழுக்கு
இல்லாவிடில்கப்பல் ஏற்றலாம்அழுக்கு மாதரை

௫. இணையில்லாக்குவது சாலியன்சேலை
இருகாதில் ஜொலிப்பது தட்டான்வேலை
சடையிமேல் விற்பது கொண்டைப்பூமாலை
கன்னிக்குச் சொந்தமெல்லாம் வெறுந்தோலை மாதரை

௬. கன்னியர்விழிஉயிர் பிளந்திடும்அம்பு
கனதனம்நமன்குழல்உனைக்கட்டுந்தும்பு
அன்னியமாதர்கள்விஷமெனநம்பு
அவருடன்பேசுவதேபெருவம்பு மாதனை

௭. இதமாகவேமணஞ் செய்தசீமாட்டி
இகபரம்இரண்டுக்கு மேவழிகாட்டி
இதரமின்னார்களைச் சேர்வோன்காமாட்டி
என்றைக்கும் அவருக்கு மூத்தவள்பேட்டி மாதனை

௮. என்றுங்காமாதுரர்க்கு ரோகங்கள்நிலையே
ஈனரும்போட்டக்கையில் வேண்டும்வெப்பிலையே
ஆனதுகொண்டவன் அறிந்தால்வருங்கொலையே
அற்பசுகத்தில்வரும் ஆபத்துமலையே மாதனை

௯. கழுவிவாசனை ஊட்டாவிடில் கெட்டவீச்சு
காதவழி அடிக்கும் இதுநிசப்பேச்சு
தொழும் அழகென்பதெல்லாம் யேற்பூச்சு
தோகையர் கிழமானல் கனவச்சு மாதனை

௰. அழகழகென்பதெல்லாம் வெறுஞ்ஜாலம்
அணியுந் துணியும்போனல் அலங்கோலம்
அநுதினம்சுகததினை வெறுப்பதுசீலம்
அன்பன்வேதநாயகன்சொல் அநுகூலம் மாதனை

---

## இதுவும் அது.

---

௬௪ இராகம்-தௌளிபந்து- ஆதிதாளம்.

### பல்லவி.

மனமேஉனக்குமகாசுகிர்தம்-மறு
மாதனைவிழைாதே மனமே

### அநுபல்லவி.

இனமென்சொற்படி கேட்டால்உனைத்துதி
செய்வேன்மடித்திடில்-வைவேன்-வைவேன் மனமே

௩. சட்டிமுகத்தைச்சந்திர பிம்பமென்றும்-வெறும்
சதைக்கட்டிகளைத் தங்கக்கும்பமென்றும்
முட்டிக்கால்களைச்சொர்ண ஸ்தம்பமென்றும்-மாதர்
மூன்கமலைக்குஞ்சப் பாக்கம்பமென்றும்
மொட்டைத்தலைக்குமுழுங் காலுக்கும்பிணைத்தே
முடிந்தாயே-வினை-படிந்தாயே-கெட்ட மனமே

௪. உச்சிட்டத்தை அமிர்தக் கட்டியென்றும்நாறும்
ஊத்தைவாயைப்பவளப்பெட்டியென்றும்
மச்சம்பீளைவடியுந் திட்டியென்றும்-தே
வாங்குருவை அபூர்வசிட்டியென்றும்
பிச்சைக்காரன்கந்தையை மெச்சிக்கொள்வதுபோல்
பிடித்தாயே-பொய்யைப்-படித்தாயே-கெட்ட மனமே

௫. செட்டிகளால் அல்லவோ இடையழகு-எண்ணெய்ச்
செத்தார்களால்-அல்லவோசடை யழகு-மாதர்
தட்டார்களால் அல்லவோ நடையழகு-மாதர்
தம்மழகெல்லாம் பலகடையழகு
குட்டிச்சுவரில்முட்ட வெள்ளெழுத்தோநீ
குதித்தாயே-பெண்ணைத்-துதித்தாயே-கெட்ட மனமே

௬. சொத்தைப்பற்களை முத்துச்சரங்களென்றும்-மிகச்
சூம்பியதோளை மூங்கில்மரங்களென்றும்
சித்தமாக்கமலங் கரங்களென்றும்-நாறும்
சிக்குமயிரைச் சலதரங்களென்றும்
பித்தன்போல்வர்ணித்து வேதநாயகன்-அடி
பிரிந்தாயே-துன்பம்-புரிந்தாயே-கெட்ட மனமே

இதுவும் அது.

௧௩௫. இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

பெண்ணாசையே பெரும்பித்து-அதில்
பிரமிப்பதெல்லாம்விபத்து பெண்

அநுபல்லவி.

கண்ணிலேவலைபூட்டி அற்பசுகம்
காட்டிப்புருஷரை வாட்டிவதைக்கும் பெண்

## சரணங்கள்.

க. கலகலென அசைப்பார் அவர்தண்டை
காட்டுமிருக மயிரோ கொண்டை
உலகைமயக்கும் அவர்சேலைக் கெண்டை
உற்றுப்பார்த்தால் நன்மைஏதவர் அண்டை பெண்

உ. கேவலம் அங்கமெல்லாம் பிணநாற்றம்
கிறுகிறென மயக்கந் தலைக்கேற்றம்
ஓவியமேனி மினுக்குப் பொய்த்தோற்றம்
உள்ளேதிரும்பிப் பார்த்தால் முழுநாற்றம் பெண்

௩. கட்டிகட்டியாகக் கண்பீளைசாரும்
காதிற்குறும்பி சளிஎச்சல்சேரும்
கொட்டும்வியர்வைதலைப் பேனும்ஈரும்
கும்பிநாற்றமாங் குளித்திட்டநீரும் பெண்

௪. மண்ணில்எலும்புபோல் அல்லவோமாது
மற்றதெல்லாஞ்செட்டி தட்டார்செய்சூது
பெண்ணில்லாவிட்டால் பிழைப்பவர்கேது
பெணஜெபமும் அவர்போனால் செல்லாது பெண்

௫. மண்ணிற்பரஸ்திரீயைச் சேரும்நிமித்தம்
வாழ்வுஞ்சுகமுந்தனமும் அநர்த்தம்
எண்ணில்லாத் துன்பமும் புண்களும்சித்தம்
ஈனமும்பமகோற்சவம் நித்தம் பெண்

௬. இரவிற்கூத்தாடிகள் வேஷம்எடுப்பார்
இருட்டில்எவருமயங்கிக் கொடுப்பார்
தரையில்மின்னார் பகல்வேஷம் தொடுப்பார்
ஜாலவித்தைசெய்துலகைக் கெடுப்பார் பெண்

௭. உண்டால்விஷம் வெட்டினாற் கொல்லுங்கத்தி
உன்னினோர் கண்டோரைக் கொல்லும் பெண்சத்தி
அண்டாமல் ஆடவர் ஓடுதல்புத்தி
ஆர்வேத நாயகன் சொற்கேட்டால்சக்தி பெண்

# உய்யும் வழி.

கடுசு. இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்

## பல்லவி.

உய்யும்வகையிது நெஞ்சமே-வேறு
செய்யும்உபாயங்கள் வஞ்சமே உய்யும்

## அநுபல்லவி.

மையல்தரும்மலங்களைநீக்கு
ஐயன்பொற்பாதத்துக்குன்னை ஆளாக்கு உய்யும்

## சரணங்கள்.

௧. நீந்தைகலந்தமூவாசையே-நாளும்
நிக்கிரகஞ்செய அப்பசாசையே
எந்தவிதத்திலுமாசையே-ஒழித்
தென்றெண்ணுஞ்செய் தெய்வபூஜையே உய்யும்

௨. நானெனதென்றபிமானமே-மிக
நாட்டுவதுமதியீனமே
ஏன்உனக்கிந்த அஞ்ஞானமே-நீதான்
என்றுஞ்செய்வாய்ஜெபத்தியானமே உய்யும்

௩. பெண்டுசெய்பண்டபதார்த்தமே-பெரும்
பீடையாம் அந்தச்சங்காத்தமே
கொண்ட அறந்தான்யதார்த்தமே-அதைக்
கூடில்உண்டாம்பரமார்த்தமே உய்யும்

௪. மையல்மிகுந்துகெடாதே-புவி
வாழ்வென்பதுவெறும்சூதே
ஐயர்மெய்யன்புவிடாதே-வேத
நாயகனைநிதம்ஓதே உய்யும்

## நெஞ்சொடுபிணங்கல

௱௫௭. இ-ம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

அதுதினம்இந்தப்படி-உன்னுடன்போர்கொடுக்க
யாராலாகும்நெஞ்சே   அதுதின

அநுபல்லவி.

கணபக்தரொடுநள்ளாய்-கர்மானுபந்தந்தள்ளாய்
தினமும்என்னுயிரைக்கொள்ளாய்-சீச்சீஇதென்னபிள்ளாய். அது

சரணங்கள்.

௧. அனந்தமுறைநான்சொல்லக் கேளாய்
அகந்தை அழியாயோ
தினந்தினமும்நீ புரிந்திடுந்துற்
செய்கைகள் ஒழியாயோ-நீ
நினைந்ததே திடமா-உன்னால்
நிதமுஞ் சங்கடமா
சினந்தகவலைக்கு நீ இருப்பிடமா
செய்வதெல்லாம் ஹடமா.   அதுதி

௨. படித்ததனிவேதந்தான் சொல்லிப
படி நீநடவாயோ
கடித்தவிஷம் ஒப்பாகியவினையின்
கடலைக்கடவாயோநீ
பிடித்ததேபிடியா-ஆசை
பேயுன்னிடங்குடியா
உடுத்தமானயக்கு நீமிதியடியா
உன்தொழில் இப்படியா   அதுதி

௩. கடந்தமேலோர் பகர்ந்தமொழியைக்
கனவினுமதியாயோ
நடந்தபொய்யாகிய வழிநீங்கி
நல்வழிமிதியாயோ-நாம்
அடைந்தஉடல்சதமா-புவிவாழ்
வானதுசாசுவதமா
தொடர்ந்துவேதநாயகன் ஹிதமாய்ச்
சொல்லியுமேமதமா   அதுதி

## துர்க்குணம்போன்ற நற்குணங்கள்.

௧௫௮. இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

பல்லவி.

செய்யவேண்டுமானால் நிதமநுதினம்
செய்-செய்-செய்-மனமே செய்ய

அநுபல்லவி.

ஐயோவெருந்தாய்நற் செய்கைகளையே
ஆசைகயிற்பின்சொலுந்துர்ச் செய்கைகளையே செய்ய

சரணங்கள்.

௧. எதிர் உதவிகருதி ஈயாலோபம்
ஈனர்கள்காற்றடிக்கிலும் அதில்சோபம்
வதிதீவினைமேல் தீராக்கோபம்
வருவதுவரட்டும் இப்படிப்பாபம் செய்ய

௨. பரன் அடிமீதில் அடங்காமோகம்
பலதெய்வங்களைப்பணியாத்துரோகம்
இரவும்பகலும் புண்ணியர்தன்னில்இராகம்
இப்படியேதான் பாபம் அநேகம் செய்ய

௩. பலருக்குப் உதவி செய்வதில் பலவந்தம்
பரஸ்திரீக்கிடம்ஈயாத நிர்ப்பந்தம்
தலமிசைபிறர்க்கிடர் செய்வதில்மந்தம்
தளராதிவ்வகை தோஷம் அனந்தம் செய்ய

௪. பொய்கொலை களவுகள் செய அறியாமை
புனிதர்போலநாம் இலையென்னப் பொறாமை
மெய்விலகிய அவநூறுதராமை
மேன்மேல்இப்படியே பலதீமை செய்ய

௫. நற்குணந்துற்குணம் எனச்சொலும் அசத்தியம்
தன்காரியம்பேணாத அபத்தியம்
நற்கதிபெறுவதில் ஒழியாப் பைத்தியம்
நானிலத்திவ்வித மான துஷ்கிருத்தியம் செய்ய

௬. நன்மைதின்மைகள் மேல்காமக்குரோதம்
நாளும் அச்செய்கையிலே பிடிவாதம்
தன்மமிமித்தம் சர்வலோக விரோதம்
தளராதிவ்வாறே அபராதம் செய்ய

௭. ஆட்கொள்வேதநாயகன் பாதமுத்தாரம்
அணியென்ன உனக்குரைத் தேன் விஸ்தாரம்
கேட்கிலை ஆதலிற்கொடுத் தேன்உத்தாரம்
கெட்டசெய்கைகள் உனதிஷ்டப்பிரகாரம் செய்ய

---

மனவஞ்சகத்தைப்பற்றி.

௧௩௬. இராகம் - பந்துவராளி-ஆதிதாளம்

பல்லவி.

புரட்டெல்லாம்எங்கே படித்துக்கொண்டனை
புகலுவாய்மனமே-இந்தப் புரட்

அநுபல்லவி.

முரட்டுமார்க்கம் சென்றிழைகிறாய்-அணு
முனையின்உள்ளும்நீ நுழைகிறாய்இந்தப் புரட்

சரணங்கள்.

௧. பொருளைத்தந்தவன் அருளை மறந்து
பொருளுக்கே உபகாரஞ்-செய்யும்
மருளர்போல் அற்பப்பொருளை விரும்பி
வான்பரன் உபகாரம்-தன்னை
மறந்தாய்-என்னைத்-துறந்தாய்-பொன்னைச்
சிறந்தாய்-பின்னைப்-பறந்தாய்-பாரில்
உருளில்லாமல் தேரோட்டுகிறாய்-பானு
உதயம்இரவிற் காட்டுகிறாய்-கன
இருள்கொள்பாசத்தில் மாட்டுகிறாய்-நாளும்
என்னைப்பம்பரம்ஆட்டுகிறாய்-இந்தப் புரட்

௨. மண்டலந்தனில்கண்ட பொருளெலாம்
வண்மையென்று நீகுறித்தாய்-பிர
சண்ட ஆசைக்கள் உண்டதாலேநீ
தலைமயங்கியே வெறித்தாய்-தனத்

தாசி-எனப்-பேசி-வினை
புசினையே-சீசீ-பார
அண்டங்களைக்கை அடைக்கிறாய்-கால்போல்
ஆழ்கடல்மீதும் நடக்கிறாய்-பல
வண்டருவின்னும் கடக்கிறாய்-புண்ணியம்
என்றால்எழாமற் கிடக்கிறாய்-இந்தப் புரட்

௩. என்னசொல்லினும் உன்னல் செய்யாயுனைக்
கேணித்தத்தலைபரட்டை-யாளும்
மூன்னமேஐயோ பின்னஞ்செய்கிலை
மூழுந்தீவினைதிரட்டை - இது
மோசம்-எய்தும்-நாசம்-லவ
லேசம்-விசுவாசம்-இன்றி
அன்னம்போலெங்கணும் பறக்கிறாய்-கல்லின்
ஆவிடத்தும்பால் கறக்கிறாய்-சுக
நன்னலந்தனை துறக்கிறாய்-வேத
நாயகன்சொல்லை மறக்கிறாய்-இந்தப் புரட்

மனமயக்கம்.

௧௩௦. இராகம்-வசந்தா-ஆதிதாளம்

பல்லவி

மயங்கிறாய்மனமே-ஐயோவீணே மயங்

அநுபல்லவி.

மயங்கிறாய்மனமே-வாழ்வுசொப்பனமே
மாறாமல்தினமே ஐயோ வீணே மயங்

சரணங்கள்.

௧. வானைமோசஷக்-கியாகனைக்கருணைப்பிர
வாகனைப்பணியாமல்-ஐயோவீணே மயங்

௨. எண்ணிய பெரியோர்-நண்ணிய பொருளாம்
புண்ணியம்புரியாமல்-ஐயோவீணே மயங்

௩. நேயர்உள்ளோர்கள்-நாயகன்வேத
நாயகனைத்தெரியாமல்-ஐயோவீணே. மயங்

## காலதூஷணை.

---

கசக. இராகம்-தர்பார்-ஆதிதாளம்.

### பல்லவி.

ஓகோகாலமே-உன்போலெவர்க்-குண்டிந்த-ஜாலமே ஓகோ

### அநுபல்லவி.

போகபாகவேஅண்டம்பூவெல்லாமேய்வாய்
பூனைபோலிருந்துநீபுலியைப்போற்பாய்வாய் ஓகோ

### சரணங்கள்.

க. ஊரெல்லாந்தூங்கிலும் உனக்கில்லை தூக்கம்
ஓயாமல்ஓடுவாயுனக்குண்டோதேக்கம்
ஆர்கெட்டால்உனக்கென்ன அறியாய்நீநோக்கம்
அதிகவட்டிகள்கொடுப்பவர்களுன்மேல்ஏக்கம் ஓகோ

உ. பாலனைக்கிழவராப்பண்ணியேகெடுப்பாய்
பகைமதன்ஜெபம்நடவாமலேதகிப்பாய்
காலிரண்டுடையார்க்குக்கோலொன்றுகொடுப்பாய்
காலனுக்குயிரெல்லாங்காட்டியேவிடுப்பாய் ஓகோ

ங. ஆயுதமில்லாமல்யாவையும் அறுப்பாய்
அழுதாலுந்தொழுதாலும் அகன்றெம்மைவெறுப்பாய்
சாயுங்கிராகுபோலேசகலமுங்கிறுப்பாய்
சகலஉயிரையுஞ்சட்டியிலிட்டுவறுப்பாய் ஓகோ

ச. கல்லைப்போல்உடம்பையும்வில்லைப்போல்வளைப்பாய்
கணந்தினம்மதிவாரம்ஆண்டெனக்கிளைப்பாய்
வில்லைப்போல்வதனத்தைச்செல்லைப்போல்துளைப்பாய்
வீங்குபுகையர்க்குத்தேவாங்குருவிளைப்பாய் ஓகோ

ரு. துக்கம்உற்றவர்க்குநீதொலையாமற்கிடப்பாய்
சுகமுள்ளோர்க்குநீதுரிதமாய்நடப்பாய்
விக்கலுமிருமலும்சிலைதையுங்கொடுப்பாய்
பிருசுங்கருமபிணைப்பஞ்சுபோற்கெடுப்பாய் ஓகோ

௬. மலைகள்மண்டபங்களை வலிமையாஇடிப்பாய்
வாரிஎழுகடலும் வற்றிடக்குடிப்பாய்
தலைதடுமாறநீதாண்கொள்ளை அடிப்பாய்
தனிவேதநாயகன் தயையாலேகடிப்பாய் ஓகோ

---

# உத்தியோகசம்பந்தக்கீர்த்தனைகள்.

## நியாயபரிபாலனஞ்செய்யவரம்வேண்டல்.

---

௧௩௨. இ-ம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

நானே-பொதுநிதி-தானேசெலுத்திட
நல்வரம்அருள்கோனே நானே

அநுபல்லவி.

தானேயாகிய சாக்ஷாத்காரமே
தேனேஅமுதமே திவ்யஞானசாரமே நானே

சரணங்கள்.

௧. வட்டஉலகில்யாரும் பொதுவில்அநுபவிக்கும்
மழைகால்வெயில்பூதாதி போலவே
இஷ்டர்அநிஷ்டர்தமர் எளியர்செல்வர்பெண்புமான்
என்னும்பேதமஉன்னுமல்லலவே
இட்டமாச்சரிநீ செலுத்தவின்மனம்நாட்டி
சிறியவழக்கும்பெரு வழக்கெனத்திண்ணம்நீட்டி
சட்டசாஸ்திரங்கள்மிக உணர்ந்தறிவினைத்தீட்டி
சகலஉயிர்களும்என் தன்னுயிர்போல்பாராட்டி
சிட்டபரிபாலனெனு முடிசூட்டிக
தியர்மொழிபுகாமற் செவிவழிபூட்டிக்
கொட்டஞ்செய்துட்டர் கண்ணிலிவிரலைவிட்டாட்டிக்
கூகூஎனப்போய் கதறும்படிமாட்டி நானே

௨. அருணன்சந்திரன்இவை நீங்கினுந்தனாபேலகிழ்
ஆயினும்அறக்கடைநான்விட்டாயல்
வருணன்போற்பொருள்பாரி வழக்கர்செய்யினும்அதை
வாங்கயாசகன் போற்கைநீட்டாயல்

வருமவழக்காமனத்தை வன்சொற்களாற்சுடாமல்
மற்றகீழ்உத்தியோகஸ்தர் வம்புக்கிடங்கொடாமல்
அருமடியால்வழக்கா ராச்சியில்பின்னிடாமல்
அப்பன்பாட்டன் சொன்னாலும் அறநெறிகைவிடாமல்
தருமதேவதைநாயஸ்தலந்தனில்நடிக்கத்
தப்புச்சாக்ஷிகள் கிடுகிடென்னவேநடிக்க
இருமையகல்அநீதியே ஓட்டம்பிடிக்க
இலஞ்சம்வாங்கிகள் வெட்கத்தால் உயிர்மடிக்க நானே

௫, அந்தவிலங்குருடங் கூன்குருடுமைமூத
லானஜென்மம்வராமல் தடுத்தாயே
மூந்தமானிடஜென்மந் தந்ததுமன்றிப்பின்னும்
முன்சீபதிமாரமுங் கொடுத்தாயே
இந்தஉபகாரத்தை இதயத்தெழுதித்தேக்கி
எவர்க்கும்பெரியவனா னெனும்அகங்காரம்நீக்கி
நந்தாவிளக்கம்போல் நவையிருளினைப்போக்கி
நன்செய்கநீதிநூற்கென் நடையைத்திட்டாந்தமாக்கித்
தொந்தயெனவேவிளை யாடிஉண்டுதூங்கிச்
சுகஉடலம்வளர்க்குஞ் சோம்பினைநீங்கி
விந்தைநன்முயற்சியில் மேன்மேல்ஓங்கி
வேதநாயகன்நல்லோன் என்இசைதாங்கி நானே

---

## துர்வழக்காளிகளைப்பற்றி.

### ௧௬௫. இராகம்-சௌராஷ்டிரம்-அடதாளசாப்பு.

பல்லவி.

இந்தவழக்குக்கெல்லாம்நாம்தானா-கோர்ட்டில்
வந்தவனெல்லாம்நமக்கெஜமானா இந்த

அநுபல்லவி.

நந்தன்வலியச்சண்டைபிடித்தானும்-அந்த
நாகனைத்திட்டிஅவன் அடித்தானும் இந்த

சரணங்கள்.

௧. தந்தைதுர்மார்க்கஞ்செய்துகெட்டானும் பிள்ளை
தாரங்களைத்தெருவில்விட்டானும்
முந்தஉதிக்கடன்பட்டானுமங்கில
முழுதுந்துரவிநியோகம்இட்டானும் இந்த

௨. அண்ணன்தன்தம்பியை வெறுத்தானும்-அவர்க்
காஸ்திபாகங்கொடாமல் மறுத்தானும்
கண்ணன்வயலைப்பொன்னன் அறுத்தானும்-கடைக்
காரன்கெட்டசரக்கைநிறுத்தானும் இந்த

௩. ககனப்பூவந்திமகன் கொய்தானும்-அதைக்
கண்டுகுருடன் அம்பால் எய்தானும்
ஜெகமிசைஊமையனும் வைதானும்-அதைச்
செவிடன்கேட்டுநகை செய்தானும் இந்த

௪. துங்கன்வாதியைக்கண்டு சிரித்தானும்-சிங்கன்
தும்மிஇருமிநெட்டி முரித்தானும்
தங்கள்இரண்டுகையும் விரித்தானும்-அந்தச்
சாந்தனுந்தன்முகத்தைச்சுரித்தானும் இந்த

௫. கரமிலான்வாதியைப் பிடித்தானும்-இரு
காலிலான்உதைத்துதைத் திடித்தானும்
சிரமில்லாதவன்கடித் தடித்தானும்-பதம்
தினம்வேதநாயகன் படித்தானும் இந்த

---

## உத்தியோகசங்கடம்.

---

௧௩௪. இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

### பல்லவி.

அப்பாஇதென்ன அதிகாரம்-ஐயோ
எப்போதும்பக்திசெய்ய இல்லையேநேரம் அப்பா

### அநுபல்லவி.

சுப்பையரோ அபத்தமூட்டை-அந்தச்
சுந்தரையர்வழக்கிலே தொள்ளாயிரம்ஓட்டை
அப்பையர்கற்பிப்பார் பொய்ச்சீட்டை-அந்த
அணந்தையர்கட்டுவார் ஆகாசக்கோட்டை அப்பா

### சரணங்கள்.

௧. சிலர்கேட்பார் கற்பகச்சோலை வேறு
சிலர்கேட்பார்நமன் அணுகாமலேஓலை
பலர்கேட்பார் நூறுபுவிப்பாலை-அல்லும்
பகலும்உலகில் நமக்கிதுதானேவேலை அப்பா

௨. அண்டப்புரட்டன் அந்தவாதி-அதி
லாண்டபபுரட்டன் அப்பா அவன்பிரதிவாதி
சண்டப்பிரசண்டன் நியாயவாதி-நாளும்
சகஸ்திரப்புளுகன்சாக்ஷிக் காரனெனுமியாதி அப்பா

௩. எப்போதும்பொய்வழக்கர் கூட்டம்-அவர்க்
கிந்திரலோகங்கிடைத்தாலும் இன்னமுந்தான்வாட்டம்
தப்புச்சாட்சிகள்வாய் நீட்டம்-பொய்ச்
சத்தியம் ஆணையென்றால் அவர்க்குக்கொண்டாட்டம் அப்பா

௪. பேராசக்காரன் குப்பன்செட்டி-அவன்
பிரமாதிகளிடத்தும் வாங்குவான்வட்டி
சேரான்வழக்கில் சிங்கக்குட்டி இவர்
நாதன்வேதநாயகன் பதந்தொழ அட்டி அப்பா

---

## இதுவும் அது.

---

௧௬௫. இராகம் - புன்னாகவராளி-திரிபுடைதாளம்

### பல்லவி.

போதும்போதும் உத்தியோககனமே-இதில்
ஏதுசுகம்நமக்குமனமே போதும்

### அநுபல்லவி.

ஓதக்கடலின் அலைக்கோய்வுண்டோ ஆரவாரம்
வேதநாயகன்நாமம்விளம்பஉண்டோநேரம் போதும்

### சரணங்கள்.

௧. சிலர்நிலவழக்குகள்கொடுப்பார்-வேறு
சிலர்பணவழக்குச்செய்தடுப்பார்
பலருநம்முடன்சண்டைதொடுப்பார்-அல்லும்
பகலுநம்பிராணனையெடுப்பார்
உலகில்வழக்கிழந்தோர் ஊளையிங்குத்தூற்றுவார்
நலமில்அப்பில்கோர்ட்டார் நம்தீர்ப்பைமாற்றுவார் போதும்

௨. ஒருவன்கேட்பான் அளகாபுரியை-லே
ஒருவன்கேட்பான்மேருகிரியை
ஒருவன்கேட்பான் அருணைப்பரியை - லே
மற்றொருவன்கேட்பான்வெள்ளைக்கரியை
நரர் சுதந்திரப்புச்செய்தால்விண்ணாட்டோர்க்குமனஸ்தாபம்
சுரர்பசுதந்திரப்புச்செய்தால் துஷ்டநரர்க்குக்கோபம் போதும்,

௩. எந்தநேரமும் ஓயாவேலை - இதில்
என்னபெற்றோமுதலாலே
அந்த உத்தியோகமே ஆலை - அதில்
அகப்பட்டநாம்கரும்புபோலே
சததமும் உழைத்துத் தணிக்கலுண்டோ க்ஷேமம்
இந்தக்கூழுக்குத்தானோ இருப்பதுபட்ட நாமம் போதும்

௪. எழுகிளமூகிஎன்னகிரீடம் - பெற்றோம்
இங்கிதந்தெரியார்கிர்மூடம்
பழுதுசொல்வதிவர்க்குப்பாடம் - பஞ்ச
பாதகங்களுக்கிவர்பீடம்
அழுதாலுந்தொழுதாலும் அவர்துர்க்குணம்போமோ
கழுதைக்குவாழ்க்கைப்பட்டுக்கடி உதைக்கஞ்சலாமோ போதும்

---

## பெரியதுரையாகி கடவுளுக்கும்
## மனுஷத்துரைகளுக்கும் உள்ளபேதம்.

---

### ௧௬௬. இராகம்-சௌராஷ்டிரம-ஆதிதாளம்.

பல்லவி.

அந்தப்பெரியதுரைக்-கிந்தத்துரைகள்சரியா
மூடமனமே
விந்தைப்பொன்னுக்குநிகர்-பிந்தைக்குறியகரியா. அந்த

அநுபல்லவி.

இந்தப்புவியில்நமைச்-சொந்தப்பொருளாச்செய்து
தனதுக்குநிகராகச்-சிந்தைக்குள் உறையும் அந்த

சரணங்கள்.

க. அந்தத்துரைநாம்செய்யும் எந்தப்பிழைகளையும்பொறுப்பான்
இரக்கமின்றி
இந்தத்துரைநாம்செய்யும் எந்தப்பிழைக்கும்தலை அறுப்பான்
வேலைகொள்ளாமல்
அந்தத்துரைதான்நமக் கெந்தப்பொருளுந்தந்து நிறுப்பான்
வேலைவாங்கியும்
இந்தத்துரைநமது சொந்தப்பொருளையுமேமறுப்பான்
விளையாட்டாக
அந்தத்துரைஉலகம் அமைத்தளித்தழிப்பான்
இந்தத்துரைகந்தலை இரண்டாகக்கிழிப்பான்
அந்தத்துரைதனிமை யாப்பகைஒழிப்பான்
இந்தத்துரைபடைகள் இருந்துமேவிழிப்பான் அந்த

உ. அந்தத்துரைவாகனமின்றிஅண்டங்களெல்லாங்கடப்பான்
முடவன்போலே
இந்தத்துரைவாகனம் இல்லாவிட்டால்விழுந்து கிடப்பான்
எக்காலமுமே
அந்தத்துரைதானென்றும் அருந்தாமல்நமக்கன்னம்படைப்பான்
சோறுகறியும்
இந்தத்துரைதான்நமக் கீயாமல்தன்வயிற்றில் அடைப்பான்
பலவகையில்
அந்தத்துரைதான்நமக் கனுதினம் உழைப்பான்
இந்தத்துரைதான்நம்மை ஏவல்கொண்டுபிழைப்பான்
அந்தத்துரைஎன்றைக்கும் அழிவின்றித்தழைப்பான்
இந்தத்துரையைஇனி இயமன்வந்தழைப்பான் அந்த

ங. அந்தத்துரைசகல அந்தரங்கங்களையுந்தெரிவான்
குருடன்போலே
இந்தத்துரைஉலகில் ஏதுந்தெரியாமலேதிரிவான்
துஷ்டனாயெல்லாம்
அந்தத்துரைஅடக்கி மூந்தச்சிஷ்டருக்கருள்சொரிவான்
பொய்யனாயெல்லாம்
இந்தத்துரைஉயர்த்தி வந்தநல்லவர்க்கிடர்புரிவான்
சத்தியமாக

அந்தத்துரைதான்சுத்த அமலசொரூபி
இந்தத்துரைஉலகில் இணையில்லாப்பாவி
அந்தத்துரைவேத நாயகன்மனைவியாபி
இந்தத்துரைஎவர்க்கும் ஈயாதலோபி அந்த.

கோட்சொல்லும் உத்தியோகஸ்தர்களைப்பற்றி

௧௬௭. இராகம்-அசாவேரி-திரிபுடைதாளம்.

பல்லவி.

எந்தநாளினுந்தர்மமே ஜெயம் என்மயங்கிறாய்-பெண்ணே

அநுபல்லவி.

நிந்தனைபலர் கூறட்டும்-அவர்
நினைவெல்லாம் நிறைவேறட்டும் - பின்பு
சிந்தனைதடுமாறட்டும் - அவர்
சிரிப்பார் சிரித்துநாறட்டும் - பெண்ணே எந்த.

சரணங்கள்.

௧. தரிகிறவீட்டில் பிடுங்குவதுலாபம்
என்றுசொல்வார் அந்தவண்ணமே
பெரியகோட்சொல்லிநம் உத்தியோகத்தைப்
பிடுங்குவதிவர் எண்ணமே
சரியிவர்எண்ண முடிக்கட்டும் - லஞ்சம்
சர்வகொள்ளைகள் அடிக்கட்டும் - உண்மை
துரைமகன்கண்டு - பிடிக்கட்டும் - அந்தத்
துஷ்டரை ஜன் அடிக்கட்டும் - பெண்ணே எந்த.

௨. வரும்இடரெல்லாம் வரட்டும்நாம்அதில்
வருத்தங்கொண் டென்னசாரமே
சருவமூடர்கள்வாழும் நாட்டினில்
சாதுக்கட் கபசாரமே
துரைமகன்நம்மைக் கெடுக்கட்டும் - அந்தத்
துஷ்டர்க்குத்தியோகங் கொடுக்கட்டும் - அவர்
தரையில்கெட்டபே ரெடுக்கட்டும் - பின்பு
தம்பியார்களை முடுக்கட்டும் - பெண்ணே எந்த.

௩. வல்லவனுக்குப் புல்லும்ஆயுதம்
வாழ்வது நமக்கருமையா
நல்லவர்க்கிதுகாலமா இங்கு
நாமிருப்பது பெருமையா
கல்லில்நார்இவர் உரிக்கட்டும் - அவர்
காலில்விலங்கு தரிக்கட்டும் - கண்ட
எல்லவருமே சிரிக்கட்டும் - மிக
என்சொல்அப்போது சரிக்கட்டும் - பெண்ணே எந்த.

௪. கோளும்பொய்களும் கூறட்டும் - நாய்
குலைத்துசத்தம் பாழாகுமா
மூளும்சூரியன் ஒளிவையக்கையினால்
மூடமறைந்து போகுமா
நீளுந்தீயர்கள் குதிக்கட்டும் - அவர்
நெஞ்சில்வஞ்சகம் பதிக்கட்டும் - நமை
நாளுமே அவமதிக்கட்டும் - வேத
நாயகன் சிக்ஷை விதிக்கட்டும் - பெண்ணே. எந்த.

---

## சுவாமியை நினைக்க நேரமில்லையென்று முறையிடல்.

---

௧௱௮. இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்

பல்லவி.

நினைப்பதெப்போது நெஞ்சே - ஐயன் பதத்தை
நினைப்பதெப்போது நெஞ்சே நினை.

அநுபல்லவி.

தனத்தையும்மாதர் - யௌவனத்தையும் உத்தியோக
கனத்தையும் எண்ணிப்பல - தினத்தையும்கழித்தால் நினை.

சரணங்கள்.

௧. பாட்டிலும்பலவிளை - யாட்டிலும் துர்விஷயக்
காட்டிலும்புத்திதனை - நாட்டினுள்கழித்தால் நினை.

௨. தாரத்தைப் பிள்ளைகள் - சம்சாரத்தை எண்ணித் துர்விசா
பாரத்திலேநமது - நேரத்தைக்கழித்தால் நினை.

ரு, தாரைக்குள் ஒருசாண்குக்ஷி- இரைக்காகவெள்ளைக்காரத்
துரைக்குக்கைகட்டிச்சாகும் வரைக்குநாம்உழைத்தால் நினை

சு, பாருக்குள்வரும்கட்சிக்காரர்க்கும்பின்னும்இந்த
ஊருக்கும்உழைத்துநம்-வீரத்தைக்குலைத்தால் நினை

ரு தொண்டைக்கிழித்துக்கொண்டு சண்டைசெய்யும்வக்கீல்கள்
அண்டையில்இருந்துநம்-மண்டையைஉடைத்தால் நினை

சு, ஞாலத்தில்பெண்கள்செய்யும்-சாலத்தைநம்பிஅவர்
மூலத்திலேநமது-காலத்தைக்கழித்தால் நினை

எ. உழக்கில்தெற்குவடக்குக்-கிழக்குமேற்கென்றுசொல்லும்
வழக்கர்பெருஞ்சமூத்திர-முழக்கத்திலிருந்தால் நினை

அ, வேதநாயகன்திருப்-பாதங்களைமறந்து
பூதஉடல்வளர்க்க-காதங்கள்அலைந்தால் நினை

---

## உத்யோகத்தை வெறுத்தல்.

### கசுகூ இராகம்-மோகனம்-ஆதிதாளம்

பல்லவி.

இந்தஉத்தியோகமென்னபெரிதா-நெஞ்சே
இதுபோனால் நாம்பிழைப்பதரிதா

அநுபல்லவி

எந்தஇடம்போனாலும் கந்தபொடிவாசிக்கும்
அந்தவிதமாய்நம்மை அகிலமெல்லாம்பூசிக்கும் இந்த

சரணங்கள்.

க, நல்லபிரபுக்களெல்லாம் நாட்டைவிட்டோடுகின்றார்
ஞானசூரியரெல்லாம் நமக்கதிபதியென்றார்
இல்லாததோஷம்நம்மேல் எடுத்தவர்மூடுகின்றார்
இரவியினுங்களங்கம் இருக்குமெனப்புகன்றார்.

உ, ஆகாதகாலம்இதில் அசடர்தலையெடுத்தார்
அருங்குணசீலர்கள் அதிகாரத்தைவிடுத்தார்
போகாமற்கோளரும் பொய்யரும்வந்தடுத்தார்
பூவிற்றகடையிலே புல்லுவிற்கத்தொடுத்தார். இந்த

ந, இந்தவுலகுக்கெல்லாம் இவரேயதிபதியா
இவருக்குழைக்கநமக் கென்ன தலைவிதியா
அந்தமாகவேபடி அளப்பதிவர்பொதியர்
ஆயிரந்தொழிலுநாம் அறியாதசங்கதியா இந்த

ச, பாரில்இவனைக்கண்டோ படித்திட்டோம்பலபாடை
பட்டதற்கென்னதந்தாற் பாக்கியக்கூடைகூடை
ஊரில்உத்தியோகம்போனால் ஒழியும்பிடித்தபீடை
உயர்வேதநாயகன் உதவுவான் அன்னம்ஆடை. இந்த

---

## துன்பத்துக்கு அஞ்சாமை.

---

### ௧௭௦. இ-ம் முகாரி-ஆதிதாளம்

பல்லவி

என்னவந்தாலும்-மனமே-ஐயன்
இருக்கையில் என்னவிசனமே என்ன

அநுபல்லவி.

மன்னர்பகைக்கில்உயிர்-தன்னைவதைப்பர்வே
றென்னசெய்வார்நிதம்-பண்ணரும் இடர்கள் என்ன

சரணங்கள்

௧, உத்தமமானசஞ்சீவி-கையில்
உடையவனைக் கொல்லுமோநாவி
அத்தனைநம்புமே தாவி-தன்னை
அலைக்குமோ துயரமு மேவி
கத்தனைமறந்தவர்-சித்தமேகவலைகள்
வைத்தபாத்திரமாகும்-சிக்கருந் துன்பம் என்ன

௨, கூடுகாவுடன் ஓடை-அரு
கிருக்கையில் என்செய்யுங்கோடை
மாடகூடகோபுர மேடை-தனில்
வசிப்பவர்க்குண்டோ குளிர் வாடை
தேடரியபுண்ணியபொற்-பீடம் அமர்ந்தன்பெனும்
கிரீடந்தரித்தோர்க்கின்பம்-நாடகம்செயுமகோய் என்ன

௩, ஓசரும் தேவ நாபத்தி-நாளும்
உலகில்யாவையும் வெல்லும் சத்தி
போதமுடன் அதுவே முத்தி-அதில்
புருஷார்த்தங்களெல்லாம் சித்தி
வேதநாயகன் பத்தர்-மீதருந் துன்பங்கள்
ஆதவன்முன் பனியாம்-ஆத்தில் துயரம் என்ன

---

## பிறர்மேல்குறைகூறாமை.

---

### ௧௭௧. இராகம் - பைரவி-ஆதிதாளம்

பல்லவி.

ஒருவர்மேலுங்குறைநீ கூறாதே-திரு
வுளச்செயற்காப் பிறனைச் சீறாதே ஒருவர்

அநுபல்லவி.

வருவதுவந்தொழிய மாறாதே-கரு
மஞ்சுக்கிணைகிருபேசனை-கஞ்சக்கழல்மறந்து
வஞ்சக்கடலில்விழும்-நெஞ்சக்குரங்கேநீ ஒருவர்

சரணங்கள்

௧, துன்பம் என்பதெவர்க்கும் சுதந்தரமே-அதைத்
தொலைப்பதற்குண்டோஒரு தந்திரமே
இன்பம்உற்றவரொவர் நிரந்தரமே-பிறர்
இடிக்கவந்தாலுங்-கட்டி-அடிக்கவந்தாலும்-பழி
முடிக்கவந்தாலும்-உயிர்-மடிக்கவந்தாலும்-நீ ஒருவர்

௨. பொறுமைஎக்காரியமும் சாதிக்குமே-அதைப்
பூண்டவர்க்கேசுகம் ஆதிக்கமே
மறுமையின்துயரத்தைப் பேதிக்குமே-மிக
மகிழ்ந்தபோதிலும்-துயர்-கிழ்ந்தபோதிலும்-பிறர்
புகழ்ந்தபோதிலும்-உனை-இகழ்ந்தபோதிலும்-நீ

௩, மற்றவர்தாமசெய்யினும்-பெருந் தீங்கு-அதை
மனதிற்கொள்ளாதிருப்பதே-பாங்கு
குற்றமாகியவழிதனை நீங்கு-மிகக்
கோத்தபலபுவனம்-காத்தபரன்-அடியை
ஏத்தும் வேதநாயகன்-வார்த்தையின்படி-நீ ஒருவர்

## பரிதானகண்டனம்.



### ௭௨. இராகம்-சௌராஷ்டிரம-ஆதிதாளம்.

பல்லவி.

சீச்சீநீர்லஞ்சம்வாங்கல் ஞாயமாமோ - அதனால்உமைச்
சேர்ந்ததரித்திரம் விடிந்துபோமோ. சீச்சீ

அநுபல்லவி

வீச்சிலும்வீண்பகட்டுப்-பேச்சிலும்பணம்வாங்கும்
தேர்ச்சியுடையவினைப்-பூச்சிலைப்பவரே சீச்சீ

சரணங்கள்

௧. வரவேண்டியகடனை வகையுடன் கேட்டுவாங்கக் கூசிப்
பலரிருக்க
வலியநீர்கேட்டுவாங்க மனம்எப்படி வந்ததோ சீசீ
உலகில்நீங்கள்
பரவியபெருந்தவம் பதினாயிரம்வருஷம் ஊசி
முனையில்நின்று
பண்ணினும்போமோ அந்தப் பர்வம்ஒருமூன்றிரிவாசி
இலஞ்சந்தனைக்

கரம்வாங்கினோர்கள் தந்தோர்க்குப்பாதகூசி
கள்ளர்க்கும் வேண்டுநடு இரவமாவாசி
இரவும்பகலும் உமக்கே ஏகராசி
எவரையுமயக்கிடும் நீர்புருஷதாசி சீச்சீ

தனதுகேடறியாமல் சகலர்க்குஞ்சாஸ்திரஞ்சொல்லும் பல்லி
கழுநீர்விழுந்து
சாகுதல்போல்யாவுந் தெரிந்தமகிமைக்கொத்துமல்லி
ஆகியநீங்கள்
மனமயங்கும்எளியரிடம் வாங்கலாமோதனம் இல்லிக்
குடநீர்போலே
வாழ்வுந்தனமுங்கெட்டுத் தாழுமென்பதுள்ளங்கை நெல்லி
ஆகையால்ஏழை

ஜனம்அழவாங்கிடுந் தனம்உயிர்கொல்லி
சாய்க்குமேஅதுவாழ்வின் வேரினைக்கெல்லி
தினமுமேஅடிக்கிறீர் நீர்ஜெகஜல்லி
திருட்டுத்தொழிலில்நீங்கள் ருத்திராக்ஷப்பில்லி சீச்சீ

௩. இழிவுக்காலயமான உமையஷ்டமச்சனி பற்றாதோ
பொல்லாததுஷ் ரநீர்
என்றுசனிபிடிக்க அஞ்சினும்பாதகஞ்சுற்றாதோ
புண்ணியங்கைவிட்டு
வழிகெட்ட உங்களுக்கு வளநிதியாவுமே வற்றாதோ
ஒருசாண்கும்பி
வளர்த்திடஉங்களுக்கு வருமாதச்சம்பளம் பற்றாதோ
குண்டோதரன்போல்

ஓழிவில்உம்முதரந் தூராப்பெருங்குழியா
உம்மாற்சகலஉத்தி யோகர்க்கும்பழியா
விழியவிழியாதோஉமக் கென்னகெட்டகழியா
வேதநாயகன்உரைப்பது வீண்மொழியா சீச்சீ

---

இதுவும் அது.

---

கஎ௨-இராகம்-சங்கராபரணம்-சாப்புதாளம்.

பல்லவி.

ஏதுக்குவாங்குகிறீர்லஞ்சம்-உமக்
கிதைவிடவேறுண்டோ பஞ்சம் ஏதுக்கு

அநுபல்லவி

வாதுக்குவீணே வழக்குரைபேசி
வாங்குகிறீர்என்னபிழைப்பதுசீசீ ஏதுக்கு

சரணங்கள்

க. நீசப்பொருளினை ஆசைப்பட்டேகல்ல
நீதியை நீக்குகிறீர்-ஐயோஅபக்
கியாதியைத்தூக்குகிறீர் உமக்கும்பொய்த்
தாசிக்குமேயென்னபேதம்-நீர்தான்
சாதிப்பதென்னபிரமாதம்-பிறர்
காசுக்கேன் இந்தவிவாதம்-அப்பு
காத்தான்முதலோர்க்குநீர்முதற்பாதம் ஏதுக்கு

உ. மணமுமலரும்போன்றநேயர்களிடத்திலும்
வாங்குவீர்பரிதானம்-உமைவிட்டு
நீங்குமோஅவமானம் அலட்சியம்
பணமென்னகாணும் பாஷாணம்பிறர்
பணமென்றால்விடுகிறீர்பிராணம்-அதில்
குணமுண்டோகடுகுப்பிரமாணம்-வாங்கக்
கூசுகிறீரிலேகிடையாதோநாணம் ஏதுக்கு

௩. பாழில்இறைத்தஜலம்போல்உமக்குப்
பரிசளித்தாவதுண்டோ-துரைதீர்ப்புப்
பண்ணுவதும்மைக்கொண்டோ-வெட்கமின்றி
ஏழைகளிடத்திற்கைக்கூலி வாங்க
இச்சைகொண்டீரென்னகேலி-வந்து
சூழுமேபலபலசோலி-நிஜம்
துரையறிந்தால்உங்கள் உத்தியோகம்காலி ஏதுக்கு

௪. உழக்கிற்கிழக்குமேற்குண்டாகி ஒருக்காலே
ஊரைப்புரட்டுகிறீர் விவாதிக்கும்
பேரைமருட்டுகிறீர் நிச்சயமுண்டோ
வழக்குச்சேற்றினில் நட்டகம்பர்-பிச்சை
வாங்கியும்உமக்கென்னடம்பம்-ஞாயம்
இழக்கின்றபேர்பரிந்துவம்பர்-உமக்
கிசைந்திடுஞ்செல்வத்தை அறுத்திடும்ரம்பம் ஏதுக்கு

௫. சிலையில்நாருரிப்பதுபோலே எவரையும்
திட்டமாஎத்துகிறீர்-கைகளில்அகப்
பட்டதைச்சுற்றுகிறீர்-பெரிதான
மலையேரஉரதுகாயல்துலம்நீர்தாம்
வாழ்வதுண்டோகோடிகாலம்-ஊரில்
கொலைஞர்களவர்கள்விசாலம்-ஆனால்
கொடுக்கவேண்டுமூர்க்கி உமக்குத்தாபபூலம் ஏதுக்கு

௬. ஆடுக்கறங்கெனவாடும்பஞ்சைகளிடம்
அடிக்கிறீர்சர்வகொள்ளை-உமைவந்து
பிடிக்குமேபெரியசள்ளை-வாங்கினபின்பு
போடுகிறீர்பட்டாரமம்-ஒரு
போதும்விடியுமோக்ஷாமம்-உமை
காடிமிஞ்சாதொருநேரமம்-வேத
நாயகன்சொற்கேட்டால் உமக்குண்டுக்ஷேமம்

---

இறைவும் அது.

---

௧௪௭- இராகம்-பியாகடை-சாப்புதாளம்.

பல்லவி

ஆர்வேணுமோ அவர் வாங்கட்டும் லஞ்சம்
ஆசைவையாதே நெஞ்சே

அநுபல்லவி

சீர்வளரும்குளத்தூரெனும்பதிஉள்ளார்
செல்வன்வேதநாயகன் சொல்லுமுரையைக்கொள்ளார் ஆர்

சரணங்கள்

௧. சமபளமிருக்கப்பின் மேல்வருமானம்
தனைநாடிஎன் அதன்மேலித்தியதியானம்
அமபுவிமிசை விளைந்திடும்அவமானம்
அதைவிடஎடுக்கலாமோ உபாதானம்
அஞ்சிடும்பல-பஞ்சையோர்களையே-நிதம்-துன்பஞ்செய்து
மிஞ்சவே அவர்-லஞ்சமேதரா
வஞ்சமேபுரி-பஞ்சபாதகா ஆர்

௨. கக்ஷிகாரருக்குன்னல் ஏதுபகாரம்
கனதுரைதீர்ப்பான் தன்மனதுப்பிரகாரம்
ரக்ஷிப்பேனெனப்பொய் சொல்வதில்என்னசாரம்
லஞ்சமென்பதுபட்டப் பகலிற்செய்சோரம்
ரத்னராசியும்-அர்த்தநாணயமும-தந்தால்-உன்காரியம்
சித்தியென்றுப-யதிராளியும்
எத்திவாங்கிடும்-உத்தியோகர்கள் ஆர்

௩. அயலார்பொருளின்மேல் நமக்கென்னசொந்தம்
அதிகயைமடிபிடித் தேன்பலவந்தம்
இயல்வாங்கிக்கெட்டகுடிகள் அநந்தம
இகபரம்போம்வரும் நரகனிர்ப்பந்தம்
இக்கணத்தில்-உன்பக்கமாகிடவே-செய்வேன்-தந்தாலென்று
அக்கிரமத்தில்-அலைக்கழித்து
வழக்காைத்தொடர்-துற்குணத்தர்கள் ஆர்

௬, ஒருகாசர்கிலும்வாங்குதல் துரோகம்
ஊர்கொள்ளை அடிக்கவோ உனக்குத்தியாகம்
தருபவர்க்கென்ன உன்னாலேநிர்வாகம்
தனத்துக்கேன்செய்கிறாய் நீபிராணத்தியாகம்
சட்டநீதிபுரட்டி வாதியையே-தினம்-தெட்டித்தங்கக்
கட்டிவெட்டி-உருட்டி ஓட்டிய
பெட்டிகொட்டி-மருட்டுமட்டிகள் ஆர்

---

# பிரபுத்துவ தூஷணை

௧௪௫. இராகம்-தன்னியாசி ஆதிதாளம்

பல்லவி

ஓஓபிரபுத்துவமே-தினமும்
உன்னால்கன உபத்திரவமே ஓஓ

அநுபல்லவி

காவலர்பூமியில் என்னிடத்துன்தொழிலைக்
காட்டாதேஎன்னை வாட்டாதே ஓஓ

சரணங்கள்

௧. அன்னத்தைக்கண்டால் விஷம்போல் வேம்புபோல்
அருவருத்துண்ணத் துணியாய்
ஆயிரம்பக்குவஞ்செய் தொருவாய்சாதம்உண்
டாலும்நீஜீரணியாய்
என்னத்துக்கிந்தஅன்ன மென்றெண்ணிஏழைகளுக்
கிந்தவர்பசிதணியாய்
இறுமாப்போதிமிர் வாதமோ
ஈசன்வந்தாலும் எழுந்துபணியாய் ஓஓ

பார்க்கச்சகியா அங்க ஈனர் அழகவென்று
பலருந்துதிக்க விதிப்பாய்
பலசாலிநானென்று துள்ளிக்கொண்டுசெத்த
பாம்பையுமே மிதிப்பாய்
ஊர்க்குள்எவருஞ்சொல்லும் நிந்தையே அறியாமல்
உன்னையேநீ துதிப்பாய்
உண்மைசொல்வோரைத் தள்ளிப்பொய்சொல்வோர்களை
உற்றவரென்றுமதிப்பாய் ஓ

௨, காரியமில்லா வீண்டப்பவிஷயத்தில்
காசெல்லாம் செலவழிப்பாய்
காலத்தையும் உனது காயத்தையும் விஷய
காமத்திலே கழிப்பாய்
பாரில்சுகம்எளிய ராவென்று நினையாமல்
பாவி அவமாய்ப் பழிப்பாய்
பத்துபேர்சித்தம் உனைத்தாங்க இல்லாவிட்டால்
பரக்கப் பரக்க விழிப்பாய் ஓஓ

௩, பாலையும்விஷஞ்செய்யும் பாம்புபோற்சுரமெல்லாம்
பாழாக்கிக் கெடுப்பாய்
பலநோய்களுக்கிருப்பிடமாய் வைத்தியர்
பலருக்கு வேலைகொடுப்பாய்
காலையுமாலையுங் காரணமின்றிக்கடு
கடுத்துநீ சிடுசிடுப்பாய்
கைப்பொருள்போனால் ஒருவேலையும்தெரியாமல்
கையிலே ஓடெடுப்பாய் ஓஓ

௪, சீமையிற்கவிசொல்லக் கம்பனும்நிகரல்லச்
சேஷன்நானென்று விரிப்பாய்
சேஷனீயென்பதற்குச் சாக்ஷியாகவிஷத்தைத்
தேகமுழுதுந் தரிப்பாய்
ஊமைக்குளுளவாயன் சண்டப்பிரசண்டனென
ஓயாமல் விவகரிப்பாய்
உயர்கவிஞரைக்கண்டால் ஒன்றும்பேசாமல்நீ
ஓட்டத்தை யனுசரிப்பாய் ஓஓ

௫, பெருநொண்டிபோல்உனைத் தூக்கச்சொல்லிபல
பிராணிகள் கழுத்தொடிப்பாய்
பெருந்தொழில்செய்து களைத்தவன்போல்உடம்பெல்லாம்
பிடிக்கச்சொல்லி அடிப்பாய்
அரும்பலசாலிநான் தூக்கிவிட்டால்பிணக்கா
டாக்குவேனென்று நொடிப்பாய்
ஐயன்வேதநாயகன் அடியைமறந்துபெண்கள்
அடிகளையே பிடிப்பாய் ஓஓ

## குடும்பசம்பந்தக்கீர்த்தனைகள்

### தாய்தந்தையரை நமஸ்கரித்தல்.

௧௭௯. இராகம்-பியாகு-ஆதிதாளம்-

கண்ணிகள்.

௧, உற்றவரோஎனைப் பெற்றவரோ தினம்
உமக்கே நமஸ்காரம்
முற்றும்நீர்செய்த உதவிக்குநான்என்ன
மொழிவேன் உபசாரம்

௨, பத்துமாதம்என்னை வயற்றிலேசுமந்து
பலதுயர் சகித்தீரோ
எத்தனைபிராண சங்கடமுடனேஎனை
ஈன்றுபிர்வகித்தீரோ

௩, பெற்றீர்வளர்த்தீர் பெயரும்இட்டுஜீவப்
பிரதிஷ்டை செய்வித்தீரோ
உற்றஉம்உதிரத்தை முலைப்பாலாகவே
ஊட்டியே உய்வித்தீரோ

௪, தேனினும்அமிர்தினும் இனிதேஎனக்குநீர்
செப்பியதாலாட்டு
வானினும்அமரர்க்கு வருமோஇதுபோல்
மங்களத்திருப்பாட்டு

௫, மாந்தவியாதிகள் என்னையணுகாமலே
மருந்துகள் கொடுத்தீரோ
வாந்தியுமலசல அசுத்தமும்சகித்தெனை
மார்புற எடுத்தீரோ

௬, உடல்உயிர்ச்சகலமும் நீர்தந்ததேயன்றி
உண்டோஇனிவேறு
அடரும்உலகமெல்லாம் உமக்களித்தாலுமே
ஆமோகைமாறு

௭, சீவன்போலநீர்என்னை வளர்த்திட்ட அருமையை
செப்பஎன்னாலாமோ
நாவேஆயிரம் இருக்கினும்நீர்செய்த
நன்மையைச் சொல்லப்போமோ

௮, கவலையெல்லாம்என் கவலையல்லால்வேறு
கவலையொன்றறியீரோ
புவியிலேஎன் சுகம் அல்லதுவேறொரு
பொருளையுங் குறியீரோ

௯, பாலியபாதிகள் எனை அணுகாமலே
பத்தியம்பிடித்தீரோ
காலமெல்லாம்பல விரதங்கள் அனுஷ்டித்துக்
கருமங்கள் முடித்தீரோ

௰. இரவுமுழுதுமே தூங்காதிருந்துநீர்
எந்தனைக்காத்தீரோ
அரவுமுதற்பல ஜெந்துக்களால்வரும்
ஆபத்தைத்தீர்த்தீரோ

௰௧, தரணியில்என் சுகம் வேண்டியேநீர்பல
தருமங்கள் செய்தீரோ
கருணைசெய்யும்படி கடவுளைத்துதித்துநற்
காணிக்கைசெய்தீரோ

௰௨, சற்றுநீர்என்முன் மறந்திருந்தால்நான்
சடலம்பெருப்பேனோ
உற்றஉலகிலே இன்னாள்மட்டும்நான்
உயிர்வாழ்ந்திருப்பேனோ

௰௩, காணுதெய்வத்தின் அருளாலேவந்த
கண்கண்ட தெய்வம்நீரோ
ஆணுப்பெண்ணுயிரா அந்தத்தேவதையும்
அனைதந்தையென்பாரோ

௰௪, எனக்கொருசுகம்வரில் உமக்குவந்ததுபோல்
எக்களிப்படைந்தீரோ
எனக்கொருதுயர்வரில் உமக்குவந்ததுபோல்
ஏங்கிஉள்ளுடைந்தீரோ

௰௫, பாலும்சோறும்பக்ஷணங்களும் எனக்கிட்டுப்
பழஞ்சோறுண்டீரோ
காலமெல்லாம்நல்ல சோமனென்உடுக்கநீர்
கந்தையைக்கொண்டீரோ

௰௬, சப்பிரமஞ்சத்தில் நான்படுத்துறங்கநீர்
தனையிலேபடுத்தீரோ
சகப்பொருளெல்லாம் என்னிமித்தம்பரி
காரிக்குக்கொடுத்தீரோ

௰௭, வாக்கால்உளறும்என் மழலைச்சொற்கேட்டு
மகிழ்ந்தேதுதித்தீரோ
காக்கைக்கும்தன்குஞ்சு பொன்குஞ்சென்பதுபோல்
கரிசனம்பதித்தீரோ

௰௮, குற்றம்எத்தனையோ செய்தேன் அவற்றைக்
குணமாய்க்கொண்டீரோ
சற்றுநான்நோய்கொள்ளில் அன்னம்நித்திரையின்றித்
தளர்ந்துமெய்துவண்டீரோ

௰௯, தோளினும்மார்பினும் இடையினுமேயெனைத்
தூக்கிக்கொண்டலைந்தீரோ
நீள்பஞ்சகாலத்தில் உள்ளசோறெனக்கிட்டு
நீர்பசித்துலைந்தீரோ

௨௰, சுயநலம்வேண்டி இங்கொருவருக்கொருவர்
துணைசெய்வார் மெய்தானே
பயனொரும்வேண்டாதெனை நீர்வளர்த்திட்ட
பட்சம்யென்சொல்வேனே

௨௧, உறவினரெல்லாம் உம்மாலேவந்த
உறவினர்தாமலவோ
அறநெறிகாட்டும் குருவுமேநீரெனில்
அயலினி என்சொலவோ

௨௨, பலபொருள்எனக்குச் சம்பாதித்துவைக்கவே
பலவிதம் உழைத்தீரோ
நிலபிசைஉம்முயிர்க் குயிர்நானேஎன்று
நினைத்துநீர்பிழைத்தீரோ

௨௩, தாரம்போனால்மறு தாரம்வருவர்பெற்ற
தாயரும் அப்படியே
நீர்போனால்வேறு தாய்தந்தையர்வந்து
சேருவதெப்படியே

உ௪, தக்கபருவத்தில்எனை அடக்கிப்பாட
சாலையில்விட்டீரோ
பக்கமெல்லாந்திரிந் தென்னுலேபல
பாடுகள்பட்டீரோ

உ௫, இளந்தைப்பருவத்தில் என்னால்வருந்துன்பம்
எல்லாம்பொறுத்தீரோ
தளர்ந்தபருவத்தில் உம்மால்வருந்துன்பம்
சகிப்பதுபெருஞ்சீரோ

உ௬, துக்கங்களெல்லாம் நீர்வகித்துக்கொண்டு
சுகம்எனக்களித்தீரோ
மக்களேசகல பாக்கியமென்றெண்ணி
மனமிகக் களித்தீரோ

உ௭, மண்பிள்ளையாயினுங் கண்பிள்ளையென்றெனை
மகிழ்ந்தாதரித்தீரோ
பண்புடன்என்பொருட் டாகநீர்பலரையும்
பணிந்துபசரித்தீரோ

உ௮, தெரியாமல்நான்செய்த பிழைபொறுத்தென்னிடம்
திருவருள்பதிப்பீரோ
அரும்வேதநாயகன் அருள்செய்யும்படி என்னை
ஆசீர்வதிப்பீரோ

---

## தகப்பன்மகனுக்குப்புத்திகூறல்.

---

### ௬௭௭. இராகம்-மோகனம்-ஆதிதாளம்

பல்லவி.

மார்க்கம்இதுமகனே - சந்திரன்
தோற்கும்எழில்முகனே மார்க்கம்

அநுபல்லவி.

மூர்க்கருடனேஉறவாடாதே-பழி
மூண்டிடும்சூதுவிளையாடாதே-இந்தப்
பார்க்குள்ஒருபொய்சொல்லக்கூடாதே-மது
பானம்விரும்பிமனம்வாடாதே-சன் மார்க்கம்

## சரணங்கள்

௧, நித்தியன்பொன்னடியிணையே-துயர்க்கடலை
நீக்குதற்குதவும்புணையே
பத்திமான்கட்குண்டோ ரிணையே-கடவுள்நேசம்
பரகதிக்குவழித்துணையே
சத்தியமார்க்கத்தைப்பிரியாதே-பல
தப்புவழியை அனுசரியாதே-சுய
புத்தியில்லாமல்எங்குந்திரியாதே-இந்தப்
புவியில்எவர்க்குமிடர்புரியாதே-சன் மார்க்கம்

௨, புண்ணியபாவங்கள் இரண்டே-நிச்சயம் அந்தப்
புண்ணியவழியைநீ அண்டே
மண்ணினுமேமகிமைகொண்டே-நீசெழிப்பதன்றி
மறுமையினும்பாக்கியம் உண்டே
கண்ணியமாகஎன்றும்பிரகாசி-நல்ல
கனதந்தைதாய்பெரியர் அடிபூசி-தினம்
அண்ணன் தம்பிசோதரிகளைநேசி-நிதம்
அன்னம்எளியர்க்கிநயம்பேசி-சன் மார்க்கம்

௩, சத்தியம் அடக்கம்பொறையே-முதலாகிய
சற்குணங்களோடுநிறையே
சித்திபெறில்ஒருகுறையே- அனுகாலனைக்
செப்பினேன்நிதிமுறையே
சுத்தமாகவேதினம்நீராடு-நல்ல
தூயவஸ்திரங்களைக்கையாடு-கன
புத்திமான்களுடனேதினங்கூடு-கெட்ட
புல்லரைக்காணில் அஞ்சியேஓடு-சன் மார்க்கம்

௪, கல்விநயக்கவசியமே-கற்றவர்க்கிந்தக்
காசினியெல்லாம்வசியமே
செல்வமுடன்வநக்கமே-கற்றவர்க்கென்றும்
ஜீவனத்துக்கில்லைபாரமே
பல்வகைப்படிப்பையும்நீங்காதே-உன்
பாடம்படிக்காமலேதூங்காதே-நீ
நல்வழிகடக்கப்பின்வாங்காதே-எந்த
நாளும்நீகடன்வாங்கிஏங்காதே-சன் மார்க்கம்

௫. பாடமெல்லாம்நெஞ்சில் இருந்து - எழுதப்பேசப்
பாடவும்பழக்கம் பொருந்து
நீக்கையெழுத்தும் திருத்த - கற்றபடி நீ
நிற்கவேண்டும் ஈதென்கருத்து
ஏடுங்கையுமாயிருவாடாதே - நீ
என்றும்பிறர்பொருளை நாடாதே - சர்வ
மூடனைக்கூடிவிளை யாடாதே - என்றும்
மூக்குத்தூள்புகையிலை போடாதே - சன் மார்க்கம்

௬. சீலத்தைக்கைவிடாதே - துர்ப்போதனை
செய்பவர்க்கிடங்கொடாதே
ஜாலத்துக்குட்படாதே - மாதுஷ்டனென்று
தாரணியிற்பேர்யெடாதே
காலத்தைவிருதாவிற் கழிக்காதே - உன்
கைப்பொருள்வீணிற்செலவழிக்காதே - இந்த
ஞாலத்தொருவனையும் பழிக்காதே - வேத
நாயகனைமறந்துவிழிக்காதே-சன் மார்க்கம்

## தகப்பன்மகளுக்குப் புத்திகூறல்.

௧௭௮. இராகம்-சஹானா-ரூபகதாளம்.

பல்லவி

புத்தியிதுமகளே-உனக்குநற் புத்தியிதுமகளே புத்தி

அநுபல்லவி

நித்தியம்பரன்நேசம்விடாதே
சத்தியமார்க்கத்தைத் தாண்டிக்கெடாதே புத்தி

சரணங்கள்

௧. ஆலயங்குருக்களை அசட்டைபண்ணாதே
அடிக்கடி ஜெபஞ்செய்யாதிருக்கவொண்ணாதே
காலத்தைவீணிற் கழிக்கவொண்ணாதே
கண்ணேபிக்ஷையிடாமல் உண்ணாதே புத்தி

உ. மாதாபிதாக்களை மகிழ்ந்துநீதாங்கு
மண்ணில்நல்லபிள்ளை யென்றுபேர்வாங்கு
தீதுகள்உனக்குச்செய்தோர்க்குமே தீங்கு
செய்யாமலிருப்பது திருவுளம்பாங்கு புத்தி

ங, ஞானபுஸ்தகங்களை நாளும்நீவாசி
நல்லவருடன்கூடி சாதனைநேசி
ஈனர்தமக்குஞானோபதேசி
என்றுங்குணவதியேமகராசி புத்தி

ச. உயிர்போனாலும் நீஒருபொய்சொல்லாதே
உன்வீடுகடந்தயல்வீடுசெல்லாதே
பயில்மறுபுருஷர்கள் பார்க்கநில்லாதே
பாவத்தைக்கனவிலும் நினைத்தல்பொல்லாதே புத்தி

ரு. அம்புவிழியே அறங்கைவிடாதே
அற்பப்பொருள்விரும்பி ஐயோதொடாதே
வம்புக்காரிகளுடன் வார்த்தைகொடாதே
மற்றவர்பொருளைக்கண்டாசைப்படாதே புத்தி

சூ. வாழ்வுவந்தாலும் நீ மயங்கித்துள்ளாதே
மற்றவர்இழிவைஉன் வாயால்விள்ளாதே
தாழ்வுவந்தாலும்நீ சலித்துக்கொள்ளாதே
சகலமும்பரன்செயல் தடுத்துத்தள்ளாதே புத்தி

எ. மாமிநாத்திகளை மதித்துறவாடு
மகளுந்தாயும்போலே மகிழ்ந்துநீகூடு
சரமியாருங்கணவன் தயவைநீதேடு
தலையணைமந்திரம் ஓதுதல்கேடு புத்தி

அ. தப்பாமல்எளியரைத் தாங்கிக்கைதூக்கு
தானதருமம்ஜெபதபத்தில்நாள்போக்கு
கைப்பாகத்தாலேஉன் கணவனார்மூக்கு
கம்மென்றுமணமேறக் காய்கறியாக்கு புத்தி

கூ. விடியுமுன்எழுந்துநீ வேலையைநாடு
வீட்டைக்கண்ணாடிபோல் விளக்கிக்கையாடு
உடலும்ஆடையும் அழுக்கொழியநீராடு
உடல்பெருக்கத்தினிஉண்பதுகேடு புத்தி

ம. சொந்தவேலைகள்செய்யச் சோம்பினையாதே
துன்பஞ்செய்தவர்க்கும் நீதுன்பஞ்செய்யாதே
வந்தஎளியவனை வாட்டிவையாதே
மாவேதநாயகன் வார்த்தைசொல்லாதே.

---

## உத்தமஸ்திரீயின் லக்ஷணம்.

---

௬௯௯-இராகம்-சாரங்கா ரூபகதாளம்.

### பல்லவி.

எவளோ அவளேகுலநாரி-அவள்
இகபரம்இரண்டுக்கும் உபகாரி எவளோ

### அநுபல்லவி

அவனிதனைவிதிக்கும்-ஆண்டவனைத்துதிக்கும்
அனகபூஷணி-அமிர்தபாஷணி
கனகதூஷணி-கலகதுவேஷணி எவளோ

### சரணங்கள்

க. நித்திரையிலுங்கணவன் தியானம்-என்றும்
நீங்காதபெரிய அபிமானம்
பத்தினிகளுக்கெல்லாங்குருஸ்தானம்-அவள்
பரபுருஷருக்குமாதாசமானம்
சத்தியம்பொறைஅருள்-சாந்தம் அவட்குப்பொருள்
தர்மரஞ்சனி-சமயரஞ்சனி
கர்மபஞ்சனி-சனநிரஞ்சனி எவளோ

உ. உத்தமகுணங்களே ஆபரணம்-ரத்ன
ஓலைமுதல்நகைகள் ஓருதிரணம்
பத்தாவைப்பிரிவது வேமரணம்-வரும்
பந்துஜனங்கட்கெல்லாம் ஆதரணம்
சுத்தசித்தம்உடையாள்-தூய அன்னநடையாள்
துதிகொள்சுந்தரி-சுபமந்தரி
மதியில்மந்திரி-வசனதந்திரி எவளோ

௩, சந்திரபிம்பம்போ லுந்திருமுகமே-அவள்
தரிசனம்பிரமானந்தசுகமே
எந்தவேளையு மிருதுவாசகமே-சீலம்
ஈவாள் அருந்ததிக்கும் யாசகமே
வந்துதனை அடுக்கும்-வறியர்க்கெல்லாங்கொடுக்கும்
பலநிவாரணி-வடிவபூரணி
குலசிரோமணி-குணவுதாரணி எவளோ

௪, குண அழகொன்று லக்ஷாந்தரமே-கொல்லுங்
கொடுவிஷம்குணமில்லாள் சுந்தரமே
உணர்வில்லாள்வீடு வனாந்தரமே-ஞானம்
உத்தமிக்கென்றுஞ் சுதந்தரமே
அணுகும்பர்த்தாகுரூபம்-அவட்குத்திவ்யசொரூபம்
அதிகநயவதி-அமிர்தகிரணமதி
புதியசுபமதி-புருஷர்தவநிதி எவளோ

௫, சகலமுந்தெரிந்த வித்தியாதீபம்-என்றும்
தலைவன் ஊழியமே காலக்ஷேபம்
பகரவொண்ணாமகிமைப்பிரதாபம்-அவள்
பாக்கியங்கணவன் பிரியசல்லாபம்
நிகரில்வேதநாயகன்-நேசமேபேசுஞ்சுகம்
நிதியநவமணி-நிகர்வகுண அணி
அதிகவிதரணி-அரியகிரகணி எவளோ

---

## பெண்பார்க்கத் தூதனுப்புதல்.

---

### ௧௮௰. இராகம்-உசேனி-ஆதிதாளம்.

#### பல்லவி.

நல்லபெண்ணைப்பார்நீதூதா
நல்லபெண்ணைப்பார்நீதூதா நல்ல

#### அநுபல்லவி

அல்லமாகேள் இந்தப்பூமியின்மேலே
ஆயிரங்காலத்துப்பயிராகையாலே நல்ல

௮. நீர்மகிழ்ந்தால் அவள்தான் மகிழ்வாள் துன்பம்
நீர்கொள்ளில் அவட்குப் விசாரம்-அன்னம்
நீர்உண்ணில் அவள் பசிதீரும்-இருவர்க்கும்
நிச்சயம் ஏகசரீரம்-இந்த
ஊரில் நீர் இல்லாதபோது உறங்காள் அன்னம்
உண்ணாள் பண்ணாள் அலங்காரம்-நீர்
ஊமைகுருடர் ஆனாலும்செய்வாள் உமக்
குருவையாய்ராஜோபசாரம்-ஆனால்
பரமாதருடன் நீர்சஞ்சாரம்-செயில்
வரும் அவளுடையநிஷ்டூரம்-அதற்
கொருநாளும் இல்லைபரிகாரம் பஞ்ச

௯. பாவம் நீர் செய்யச்சொன்னாலும் செய்யாள்வேறே
பண்ணாள்உபக்கபசாரம்-பெறும்
பாலர்க்குநல்வழிகாட்டித்தினமும்
படிப்பிப்பாள்வேதாந்தசாரம்-வந்து
தாவும்எளியவர்க்கில்லையென்னாமலே
தாய்போல்செய்வாள்உபகாரம்-செல்வம்
தாழினும்ஏழைக்குத்தான்உண்ணும் அன்னத்தைத்
தந்துமெலிவாள்சரீரம்-தம
யந்தியுமேநமஸ்காரம்-செய்யும்
சுந்தரிசீலம்விஸ்தாரம்-உமக்
கந்தமின்னேநல்லதாரம் பஞ்ச

௰. பாயும்படுக்கையுமாகநோய்கொண்டாலும்
பாத்தாவேலைக்குப்பின்வாங்காள்-உத்தம
பட்சம்ஒன்றேகோடிலட்சம்என்றெண்ணிப்
பலதுன்பம்வந்தாலும்ஏங்காள்-பெற்ற
தாயும்பிதாவும்நிகர்வேதநாயகன்
தாமரைப்பாதத்தைநீங்காள்-நல்ல
சத்தியநிரந்தனாபுத்தியின்மத்திநி
சட்டகுடித்தனப்பாகங்கள்-வேலை
முட்டமுடியுமுன் தூங்காள்-என்றும்
கெட்டவள்என்றுபேர்தாங்காள்-உமக்
கிஷ்டமுள்ளாள் பழிஓங்காள் பஞ்ச

## தலைவியிடத்து லவக்கவேண்டியநேசத்தைப்பற்றித் தலைவன் கூறுதல்.



கஅஉ இராகம்-சௌராஷ்டிரம்-அடதாளசாப்பு

### பல்லவி.

பத்தினிபோல்மகிழ்த்தவாமீதினில்
உற்றவாயார்மனமே — பத்தினி

### அநுபல்லவி

சத்தியமாகவே தாய்க்குப்பின்தாரம்
தாரத்தினல்அல்ல வோசமுசாரம் — பத்தினி

### சரணங்கள்.

க. இல்லாளும்நாமுமே ஏகசரீரம்
என்பதுவேமனு நீதியின்சாரம்
நல்லவளேநம் மனைக்கலங்காரம்
நாட்டிலேமற்ற உறவெல்லாந்தூரம் — பத்தினி

உ. கைப்பொருள் இல்லா விட்டாலும்நற்பாரி
கைவசமானல் அவளேபொன்மாரி
எப்பொருளும் இருந் தாலும் ஓர்நாரி
இல்லாதவீடு தண்ணீரில்லாஏரி — பத்தினி

ங. பெண்ணென்றாற்பேயும் இரங்குமென்பாரே
பெண்ணை அடித்தால் வருங்கெட் டநேரோ
கண்ணை இமைகாப் பதுபோலநேரோ
காதலிதன்னைக் காப் பாற்றுதல்சீரே — பத்தினி

ச. பந்துஜனமெல்லாம் வீண் பரிவாரம்
பாரில் அவரால் உண்டோ உபகாரம்
அந்தரந்தன்னில் உதவுவாள்தாரம்
ஆபத்துவேளைக் கவளே ஆதாரம் — பத்தினி

ரு. தாய்தந்தையாரையும் விட்டுவந்தாளே
சம்சாரபாரத்தைத் தாங்கிநின்றாளே
தோய்ந்தேல்பிரசவந் தன்னில்நொந்தாளே
துன்பத்தைத்தான் கொண்டு சுகத்தைத்தந்தாளே — பத்தினி

## தலைவனுடைய மேன்மையைத் தலைவி தோழிக்குக்கூறுதல்.

---

### ௧௮௩. இராகம்-பிலகரி-திரிபுடைதாளம்

### பல்லவி.

நாயகர்பக்ஷமடி-எனக்கது
ஆயிரம்லக்ஷமடி (நாயகர்)

### அநுபல்லவி.

நீயறிவாயோ அவர்குணம்மானே
நாயறியுமோ ஒருசந்திப்பானை (நாயகர்)

### சரணங்கள்

௧. பத்தாவின்பக்ஷம் உள்ளாள்மகராசி
பத்தாவின்பக்ஷம் இல்லாள்பரதேசி
வித்தாரமாகத் திரவியராசி
மேன்மேலிருந்தும் பலனென்னசீசீ (நாயகர்)

௨. ஏழையானாலும் எனக்கெசமானே
என்றும்அடிமை அவருக்குநானே
கூழைஉண்டாலும் எனக்கதுதேனே
கொண்டார்இருக்கக் குறைவென்னமானே (நாயகர்)

௩. மாலைபொன்னோலைகள் வண்ணமுத்தாரம்
மற்றநகைகளெல்லாம் பெரும்பாரம்
சீலமுங்கற்புமே தேகசிங்காரம்
திவ்யமாணிக்கத்துக்கேன் அலங்காரம் (நாயகர்)

௪. ஆயிரந்துன்பங்கள் வந்தாலும்நானே
ஐயர்கிருபை உண்டானால்அஞ்சேனே
பாயோர்பிடித்தவன் என்னசெய்வானே
பானைபிடித்தவள் பாக்கியந்தானே (நாயகர்)

---

## துன்பஞ்செய்தாலும் தலைவனே கதியென்று தலைவிதோழிக்குச்சொல்வது.

க௮௪ இராகம்-சாவேரி-ஆதிதாளம்-

பல்லவி

அடித்தாலும்வைதாலும் அவரே துணையல்லால்
ஆர் துணையடி மானே அடி-

அநுபல்லவி

மடித்தாலும் அவருடன் வாய்மதமிஞ்சலாமோ
வானத்தின்கீழிருந்து மழையிடிக்கஞ்சலாமோ அடி-

சரணங்கள்.

க. குற்றங்குறைகள்கண்டால் கொண்டவர்பொறுப்பாரோ
குணமாகநாம்நடந்தால் கோபித்துவெறுப்பாரோ
இன்றைக்குச்சொல்வோமெல்லாம் என்னுடன்இருப்பாரோ
இழவுக்குவந்தவரெல் லாந்தாலியறுப்பாரோ அடி-

உ. அடிக்கும்ஒருகைஅரவணைப்பதும்ஒருகையே
அழசழுதும்பிள்ளை அவள்பெறவேண்டுமெய்யே
இடிக்குங்கணவருடன் எதிர்த்தால்வாழ்வதுபொய்யே
எரிகிறநெருப்பிலே இடலாமோபின்னும்நெய்யே அடி-

ங. என்ன அவர்சொன்னாலும் எதிர்மொழிவிள்ளலாமோ
எரியும்அக்கினிதன்னை இருகையால் அள்ளலாமோ
சின்னமதியாலேநம் செல்வத்தைத்தள்ளலாமோ
தின்றசோற்றிலே மண்போட்டுக்கொள்ளலாமோ அடி-

௪. நன்மையாகநடந்தால் நமக்குண்டாம் அவர்நேயம்
நல்லஉத்தமிக்கெந்த நாளுந்தெய்வசகாயம்
சென்மம்உள்ளமட்டுக்குஞ் சேருமோ ஓர் அபாயம்
சீவனும்உடலும்போற் சேர்ந்துவாழ்வதுபாயம் அடி-

ரு. ஆனைகட்டச்சங்கிலி தான்எடுத்துக்கொடுக்கும்
அப்படிப்போல்நமது வாயேநம்மைக்கெடுக்கும்
ஞானமாகநடந்தால் நம்மைஎல்லாம்அடுக்கும்
நல்லவள்தெய்வமென்று நாடெல்லாங்கையெடுக்கும் அ-

௩. தணல்என்பதேஇல்லாமல் தானேஉண்டாமோபுகை
சரியாகநீநடந்தால் தலைவர்க்குண்டாமோபகை
குணபூஷணிகட்கு வேண்டுமோ வறுநகை
குப்பையிற்கிடந்தாலும் மாணிக்கம்பெருந்தொகை — மார்க்கம்

௪. கணவனைப்பகைத்தவள் கனாவியருவதேதடி
கடல்கொதித்தால்விளாவத் தண்ணீர்எங்கேஏதடி
உணர்வாகநீநடந்தால் உண்டோஒருதீதடி
உறுதிநான்சொல்லச்சொல்லஉனக்கேன் இன்னம்வாதடி — மார்க்

௫. சணடோடிசெய்துதுயர்க்கடலிலேமுழுகிறாய்
கலியாணவீட்டிலே கட்டிக்கொண்டழுகிறாய்
உனதுமானதுபோன படியெல்லாம்ஒழுகிறாய்
உற்சாகத்தாலேநீ மச்சேறிவிழுகிறாய் — மார்க்கம்

---

# தங்களுக்குப்படிப்பிக்கும்படி ஸ்திரீகள் புருஷர்களை வேண்டுதல்.

---

### ௧௮௮. இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்

#### பல்லவி

வித்தையைப்படிப்பியுங்கள்-தயைசெய்து
வித்தையைப்படிப்பியுங்கள்

#### அநுபல்லவி

உத்தமவான்களே-சத்தியபூமான்களே
உங்கட்குக்கண்களான பெண்களாம்எங்களுக்கு — வித்தை

#### சரணங்கள்

௧. திருத்தமாவேலைகள் எல்லாம்முடிப்போம்
தீர்ந்தபின்புஸ்தகங்களைப்படிப்போம்
வருத்தம்நீர்படக்கண்டால்மனம்துடிப்போம்-கீத
வண்ணங்கள்பாடிக் கொண்டுகோல்பிடிப்போம்
மாட்டோமோ-வீணை
மீட்டோமோ நயம்
காட்டோமோ-சுகம்
ஊட்டோமோ-நலம் — வித்தை

௨. வரவுசெலவின்கணக் கெழுதிவைப்போம்-பல
வகைவகைஉடுப்புகள் உாக்குத்தைப்போம்
பரவும்பலதொழில்நீர் பண்ணஒப்போம்-நல்ல
பட்சணம்கறி களும்செய்பத்தப்பொம்-நாங்கள்
படியோமோ-இருள்
விடியோமோ-அருள்
மூடியோமோ-அருள்
பிடியோமோ-நல்ல வித்தை

௩. வாணியும்நீரும்ஒரு கோத்திரமா-இருள்
வரப்பிரசாதம்உமக்கு மாத்திரமா
வீணில்அவட்கெங்கள்மேல் க்ஷாத்திரம்-நாங்கள்
மெய்ஞ்ஞானமார்க்கத்துக்க பாத்திரமா-உம்மை
வெல்லோமோ-இருள்
கல்லோமோ-கவி
சொல்லோமோ-புத்தி
இல்லோமோ-நல்ல வித்தை

௪. கொஞ்சம்நீர்கோபஞ்செய்யில் அஞ்சிடுவோம்-எங்கள்
குற்றம்பொறுக்கச்சொல்லிக் கெஞ்சிடுவோம்
தஞ்சமதாகஉமை நம்பிடுவோம்-உம்மேல்
சாகித்தியம்செய்துதினம் கும்பிடுவோம்-நாங்கள்
தாழ்ந்தோமே-துயர்
ஆழ்ந்தோமே-உம்மைச்
சூழ்ந்தோமே-காலில்
வீழ்ந்தோமே-நல்ல வித்தை

௫. அடித்தாலும்இகழ்ந்தாலும் கதிநீரோ-உம்மை
அன்றிஎங்களுக்கினித் துணையாரோ
படித்தால்பிழைத்துப்போவோம் பெரியோரே-இந்தப்
பஞ்சைகள்முகம்பாரும் துரைமாரே-உங்கள்
பதம்பூண்டோம்-அபி
மதம்நீண்டோம்-உங்கள்
இதம்தாண்டோம்-அசந்
சதம்வேண்டோம்-நல்ல வித்தை

௬, படியாதஆண்கள்உடனேநேசர்-சற்றும்
பண்ணீர்சம்மதியீர் லவலேசம்
மடம்உறும்எங்களுடன் சகவாசம்-செய்ய
மட்டும்உமக்கில்லையோ சங்கோசம்-இது
மதியோசம்-வரும்
அதிஹாசம்-மனம்
பதிபாசம்-அற
இதிகாசம் உடன் வித்தை

௭, வித்தையில்லாப்புருஷன் செய்கையைப்பாரும்-அந்த
விதமல்லவோபடி யாமடவாரும்
உத்தமியையேவிரும் புவீர்நீரும்-கல்வி
உணராவிட்டால்குணம் எப்படிச்சேரும்-இதை
ஓரீரோ-மோகம்
பாரீரோ-துயர்
தீரீரோ-தளை
கூரீரோ-நல்ல வித்தை

௮, உத்தியோகந்தந்தாலும்ஒரு கைபார்ப்போம்-தினம்
உதவிசெய்துங்கள்தொழில் களைதீர்ப்போம்
பத்தியாய்க்குடித்தனம் தலைஎற்போம்-கல்வி
பாலர்க்குப்போதித்துநல் வழிசேர்ப்போம்-எங்கள்
பதிநீரோ-சர்வ
நிதிநீரோ-தினம்
கதிநீரோ-கண
மதிநீரோ-நல்ல வித்தை

௯, படித்தால்மிருகம்போல்நாள் கழிப்போமோ-என்றும்
பரபுருஷர்முகத்தில் விழிப்போமோ
அடித்தாலும்முகம்கோணிச் சுழிப்போமோ-கல்லா
தவர்கணவரானாலும் பழிப்போமோ-பல
அணிவேண்டோம்-நல்ல
துணிவேண்டோம்-நவ
மணிவேண்டோம்-காமப்
பிணிவேண்டோம்-நல்ல வித்தை

௰, இரவில்நீர் தூங்கினபின் நாம்படிப்போம்-நீங்கள்
எழுமுன் எழுந்துவேலை களைத்தொடுப்போம்
தருமவதிகள் என்று பெயர்எடுப்போம்-நாங்கள்
சந்ததம்வேதநாயகனை அடுப்போம்-மிகத்
தழையோமோ-கல்வி
நுழையோமோ-உமை
அழையோமோ-ஜீவன்
பிழையோமோ-நல்ல வித்தை

## இதுவும் அது.



## ௧அகூ. இராகம்-மோகனம்-திரிபுடைதாளம்

### பல்லவி.

கேளும்புத்திமான்களே-கிருபைவைத்
தாளும்சீமான்களே கேளும்

### அநுபல்லவி

நாளும்கதிஇல்லா எங்கள் மேல்வர்மமோ
தாளுறும்தூசிபோல் தள்ளுதல்தர்மமோ கேளும்

### சரணங்கள்.

௧, காலைக்கும்மாலைக்கும் மூலைக்குள் எங்களை
ஆலைக்கரும்புபோல் தேய்த்தீர்-பாக
சாலைக்கும்அன்மத லீலைக்கும்வினை
வேலைக்கும்எங்களை மாய்த்தீர்
மூலக்கல்விநாங்கள் வாசித்தால்ஆபத்தோ
மூடப்பெண்கொள்வீர் உமக்குப்[illegible]ம்பித்தோ
ஓலைக்கிரந்தங்கள் உங்கள்பாட்டன்சொத்தோ
உமக்கென்னகாணும் தலைமேல்தலைபத்தோ கேளும்

௨, ஆதியிற்பெண்ணாலே மேதினியோர்கள் உண்
டானவகைமறந்தீரோ-பெண்
சாதிபுருஷனில் பாதிஎன்றமறை
நீதியையும் துறந்தீரோ

பாதிஉடலைப் பறக்கவிடலாமோ
பாவபுண்ணியந்தெரியாமல்கெடலாமோ
நீதிஇல்லாதெம்மை நிந்தித்திடலாமோ
நிந்தித்துப்பின் எங்களை நீர்தொடலாமோ சேரும்

௩, நாரியரால்ஒரு காரியம்இல்லா
நடைப்பிணம்என் றெண்ணினீரோ-தேவர்
ஊரில்பெண்கள் கொண்ட சீரினை ஆகிலும்
உற்றுப்பாரும் ஐயர்மாரே
பாரிதனைநாவில் வைத்தான் பிதாமகன்
பாகம்சிரம்வைத்ததால் சிவன்மாசுகன்
மார்பில்வைத்தான் ஹரிபெண் திருடன்குகன்
மங்கைதேடிச்சந்தி வந்தான்கரிமுகன் சேரும்

௪, உங்கட்குதவியாய் எங்களைத்தேவன்
உண்டாக்கியதை அறியீரோ-செல்வ
மங்கைஉடன்கல்வி நங்கைமுதலானோர்
மாதர்என் றுகுறியீரோ
எங்களை அல்லாமல் நீங்கள்உதித்தீரோ
ஏறிஆகாயத்திருந்து குதித்தீரோ
அங்கப்பால்உண்ணாமல் தேகம் உதித்தீரோ
அடிமையென்றெங்கள் தலையில்விதித்தீரோ சேரும்

௫, போதகயூரோப்பு மாதர்களைக்கண்டு
பொங்கிப்பொறாமை கொண்டோமே-என்றும்
பேதம்இல்லா இந்தியாதனில்நாங்கள்
பிறந்தென்னலாபம் கண்டோமே
தாதக்கல்விக்கு நகைஎந்தமூலையே
நாங்கள் விரும்போம் நவரத்னமாலையே
வேதநாயகன்செய் பெண்மதிமாலையே
வேண்டினோம்தாரும் விடோம் உங்கள்காலையே சேரும்

## ரு௨. ஊனைவிவாகஞ்செய்யாதபடி ஒருஸ்திரீயைத்தடுத்தல்.

### ககூ௰. இராகம்-புன்னாகவராளி-அட-தாளசாப்பு.

பல்லவி.

மாதேஎன்வார்த்தைதள்ளாதே-அந்த
மாப்பிள்ளைதன்னைக்கொள்ளாதே மாதே

அநுபல்லவி.

ஆதரவாகஅரவைத் தொடலாமோ
ஆழமறியாமற்காலை யிடலாமோ
போதமில்லானுக்குவாழ்க்கைப்படலாமோ
பொன்னேஒளிர்-மின்னேகெடு
முன்னேமதி-சொன்னேனடி மாதே

சரணங்கள்

க. பொன்னே அவன் ஆளழகனானாலுமே
புத்தியில்உலக்கைக்கொழுந்து-சிந்தை
தன்னை அறியானைக்கொள்வதைப்பார்க்கினுந்
சாகலாங்கிணற்றில்விழுந்து
உன்னைக்கைப்பாடுபடச்சொல்லித் தூங்குவான்
ஊர்மாடுமேய்க்கவேதான்தடி தூக்குவான்
பின்னையும்உன்னைத்தான் பேய்க்கோலம்ஆக்குவான்
பெண்ணே இரு-கண்ணே இதை
எண்ணேமொழி-பண்ணே நிகர் மாதே

உ. உத்தமியே அவன்ஞானமிருக்கின்ற
ஊனையும்பார்த்தறியானே-தினமு
சுத்தநிர்மூடனாக்கூடிக்குடித்துன்
சுகநலத்தைக்குறியானே
நித்தமும்தாசிகள் வீடுகட்டோடுவான்
நீங்காமற்சூதாட்டத்தம்பிளையாடுவான்
சித்தமுனக்குப்பட்டாரமும் போடுவான்
தேனேமட-மானேஇடம்
நானேசொன்-னேனேயடி மாதே

௩. மண்ணுக்குள் அணுக்கழகுபடிப்பும்
மதியுஞ்சுகுணமுந்தானே-வெறுங்
கண்ணுக்கழகும்பணமும் இருந்தென்ன
காரியஞ்சொல்லடிதேனே
புண்ணியவான்ஏழையானாலுங் கொள்ளடி
பொய்யன்பணக்காரனானாலுந் தள்ளடி
வண்ணங்கொள்பெண்ணுக்காண்பஞ்சமோ விள்ளடி
மாதேஇது-நீதேஇனி
வாதேசெய்-யாதேயடி மாதே

## மைத்துனர்கலியாணத்திற்பாடிய பரிகாசக்கிர்த்தனை.

### ௧௧௧. இராகம் - பரசு-அடதாளசாப்பு

பல்லவி.

மைத்துனரே-இன்றுமுதல்-மகராஜர்நீரே மைத்

அநுபல்லவி

கொத்தார்குழலிஎங்கள் குயிலைக்கொண்டீரே மைத்

சரணங்கள்

௧, ஏதும்வஸ்திரங்கட்டி அறியாதும் இடுப்பு
இனிஉமக்குப்பலவகைவகை உடுப்பு
ஓதும்புகைந்த துண்டோமுன் உம தடுப்பு
உள்ளதைநான்சொன்னால் உமக்கென்னகடுப்பு மைத்

௨, சொர்ன்னமயம்எங்கள்சுந்தரி தேகம்
தோற்றுமே உமக்கண்டங்காக்கை அநேகம்
என்னவிதமாகவோ அடுத்தது யோகம்
ஈதோஇதற்குத்தேவேந்திர போகம் மைத்

௩, உழவுதொழில்செய்துமக்குடம்பெல்லாஞ் சேறு
ஊத்தைகழுவப்பற்றுமோஒன்ப தாறு
பழங்கூழுண்ட உமக்குப்பாலுடன் சோறு
பயப்படாதிரும்உமக்காயுசு நூறு மைத்

ச. காதவழிநடப்பீர்காலே சாக்ஷி
காடிபல்லக்கினிஉமக்குண்டோ தாக்ஷி
ஏதுமற்றஉமக்கும்பலகாணி யாக்ஷி
இளைந்ததுஹோ!ஹோ!ஹோ!என்னகண் காக்ஷி மைத்

ரு. எருமைநுழையும்உமதிருகாதின் தொள்ளை
இனிஉமக்குவச்சிரக்கடுக்கன்கள் கொள்ளை
ஒருவகையும்இல்லாமல்உற்றீரா சள்ளை
ஊர்அதிபதிக்கிப்போதுசுந்தமாப் பிள்ளை மைத்

சு. சந்திரசூரியர்மழைபனிகாற்றுக் கோடை
தாங்கியஉமக்கினிநவரத்ன மேடை
உந்தம்அசுத்தங்கொள்ளுமேபல கூடை
உமக்கினிப்புஷ்பஞ்சந்தனம்பன்னீர் வாடை மைத்

எ. இப்போதுமக்குவாசத்தைலங்கள் கடலே
இதற்குமுன்எண்ணெய்பட்டறியாதும் முடலே
அப்படி இருக்கஎன் வீண்தட படலே
ஆகாசந்தனைமறைப்பதற்குண்டோ படலே மைத்

---

## மைத்துனருக்குப் புத்திபோதித்தல்.

### ககஉ. இராகம்-ஹிந்துஸ்தான்காப்பி-ஆதிதாளம்-

பல்லவி.

மைத்துனரோகேளும்-நான்சொல்லும்
புத்தியையேகேளும் மைத்

அநுபல்லவி.

சித்தமும்உம்மிடம்நேசமேநீகேளும்
உத்தமி இவளைஉம்உயிரெனஆளும் மைத்

## சரணங்கள்

௧. நன்றாயிப்பெண்ணுக்கு வாய்த்ததே அதிர்ஷ்டம்
நரிமுகத்தில் விழித்தீர் நல்லசட்டம்
இன்றுமுதல் உமக்கு விடிந்ததுசஷ்டம்
இதைமறந்தாற்பயித் தியகாரபட்டம் மைத்

௨. சந்திரபிம்பம் இவள் முகமென்றுதேரும்
சாவகோணமில்உமக் கிணையில்லையாரும்
சந்தேகமிருந்தால்கண் ணாடியைப்பாரும்
தலையைக்கவிழ்ந்துகொண்டு மூலையிற்சேரும் மைத்

௩. அணங்கின் அழகுக்குப்பெண் களுங்கொள்வார் ஆசை
அழகிலேநீர் ஆயிரம்அமாவாசை
இணங்கியேவாழ்வதில் என்னபிரயாசை
இவளைநீர்மணஞ்செய்ய என்செய்தீர்பூசை மைத்

௪. சுந்தரிஇவளும் நீரும்ஒருதேகம்
சுகதுக்கம்இருவர்க்கு மேசமபாகம்
வந்தமறுமாதனைச் சேர்வதுதுரோகம்
மலருமணமும்போல வாழ்வதுஸ்நேகம் மைத்

௫. தெரியாமற்செய்தபிழை பொறுப்பதுநேயம்
திட்டிப்பெண்சாதிகளை அடிப்பதுந்நியாயம்
பிரியமாய்ப்பேசித்திருத் துவதேஉபாயம்
பெண்ணென்றாற்பேயுமே செய்யுஞ்சகாயம் மைத்

௬. நயமில்லாவார்த்தைக ளாற்பகைமூளும்
நன்மையினாற்குறை யில்லைஎந்நாளும்
தயையுடன்என்னைப்போற் பாரியைஆளும்
சந்தேகமிருந்தால்உந் தமக்கையைக்கேளும் மைத்

௭. இவளைப்பிரிந்தார் இவள் தாய்தமக்கைமாரோ
இனிமேல்தாய்தந்தை சகலமும்நீரோ
அவனியில் இவள்உம தாவிக்குநேரோ
அன்பில்லாவிடில் எடுப்பீர்கெட்டபேரோ மைத்

அ, நற்புத்திஇவள்சொன்னால் அதைச்செவிகொள்ளும்
நமக்கொருநிகரில்லை யென்றுநீர்துள்ளும்
துற்புத்திதான்சொன்னாக் கேளாமல்தள்ளும்
தோஷத்தைநீக்கிநற் குணங்களை அள்ளும் மைத்

௯, தந்தைதாய்குருசொன்ன படிநீர்நில்லும்
சாஸ்திரம்உணர்ந்தறி யாமையைக்கொல்லும்
அந்தமின்னாளையும் படித்திடச்சொல்லும்
அடிக்கடிசொல்லிடிற் கனையுமேகல்லும் மைத்

ய, உன்னரியகடவுள் அடிக்கன்புகூரும்
உத்தமவான்களை யேயென்றுஞ்சேரும்
இன்னந்தெரியாவிட்டால் மாயூரம்வாரும்
இசைவேதநாயகன்செய் நீதிநூல்பாரும் மைத்

முற்றிற்று.



## சர்வசமயசமரசக்கீர்த்தனைகளின்

# அகராதி.

| கீர்த்தனைகளின் ஆதி. | பாட்டு இராகம் | பக்கம் | கீர்த்தனைகளின் ஆதி. | பாட்டு இராகம் | பக்கம் |
|---|---|---|---|---|---|
| பொருளைவிரும்ப — | கசஅ | கஉஎ | மைத்துனரேநாளும் — | ககூஉ | ககூ0 |
| போதந்தாளென்ன — | ககரு | கூஅ | மைத்துனனே — | ககூக | கஅகூ |
| போதும்போதும் — | சசுரு | கசஅ | வாவாஜெகநாதா — | எஉ | சுரு |
| போனதுபோகட்டும் — | கசரு | கஉச | வாவாவாவா — | ககஅ | க0க |
| மயங்குகிறாய்மனமே — | கசு0 | கச௩ | வாவாவாதேவே — | கூசு | அ௩ |
| மனமேஉனக்கு — | கருச | க௩சு | வாழ்வைநம்பாதே — | கரு0 | க௩0 |
| மனமேநீஈசன் — | கச0 | கககூ | வித்தையைப்படிப்பியுங்கள் — | கஅசு | கஅ௩ |
| மனமேநீமறவாதே — | கசக | கககூ | வினையேஎனையே — | எ | கூ |
| மாதனாரிணையாதே — | கரு௩ | க௩ரு | வீண்கர்வமேன் — | கசகூ | கஉகூ |
| மாதேஎன்வார்த்தை — | ககூ0 | கஅஅ | வேதநாயகனே எவ்விதமும் — | சக | ௩கூ |
| மார்க்கம்அல்லடிமானே | கஅஎ | கஅஉ | வேதநாயகனேமெய | கக௩ | சுஎ |
| மார்க்கம்யிதுமானே — | கஎஎ | கசுரு | வேதநாயகா — | சுஉ | ருஎ |
| மெய்ஞ்ஞானம் — | கூக | எகூ | | | |
| மெய்யிதுமெய்யிது — | க0அ | கூச | | | |

சர்வசமய சமரசக்கீர்த்தனைகளி லுள்ள

## இராகங்களின் அகராதி.

| இராகம் | கீர்த்தனைகளின் இலக்கம் | இராகம் | கீர்த்தனைகளின் இலக்கம் |
|---|---|---|---|
| அசாவேரி | ருருஉ-கருஎ-கசுஎ-கஅரு | கல்யாணி | க௩-ககூ-அச-கசஉ-கஅசு |
| அடாணா | உசு-சுகூ-கசக | கற்கடா | உஉ |
| அபூர்வம் | க௩0 | கனகவசந்தம் | ககக-கசஅ |
| அமீர்கல்யாணி | கஉகூ | கன்னடகௌளை | ரு௩ |
| அம்சத்தொனி | க௩உ | காப்பி | க0ச |
| ஆகிரி | ௩க-சு௩ | காம்போதி | ச-உகூ-௩அ-சஉ-ருஎ-கஅஎ |
| ஆனந்தபைரவி | ௩சு-௩எ | குந்தளவராளி | க00-கச0 |
| ஆரபி | உரு | கெங்காதரங்கணி | அ0 |
| இந்துஸ்தான்காப்பி | க0உ-ககஅ-கககூ-கசசு-கசஎ-கரு0-கருக-ககூஉ | கேதாரகௌளம் | ௩-உ0-௩ரு |
| ஈசமனோகரி | எச-க0அ | கேதாரம் | உஅ-௩உ |
| உசேனி | உ௩-கூஎ-கஉச-க௩கூ-கஅ0 | கௌளிபந்து | ககச-ககசு-கருச |
| எதுகுலகாம்போதி — | ருசு-சுக-கச௩-கசச | சங்கராபரணம் | சு0-கருஉ-கருசு-கஎஉ |
| கண்டா | கூகூ | சஹானா | எஎ-அ௩-கூ0-கூச-கஎஅ |
| கமாஸ் | ச0-ருரு-எஎ-கரு௩ | | |
| காகரப்பிரி | ருச | | |

| இராகம் | கீர்த்தனைகளின் இலக்கம் |
|---|---|
| சரசாங்கி | ௧௩௧ |
| சமாந்தா | ௯௧ |
| சாமா | ௪௧-௮௮-௧0௧-௧0௬ |
| சாரங்கா | ௪௯-௧௭௯ |
| சாவேரி | ௧0௫-௧௬௨,௧௮௪ |
| சாளங்க பைரவி | ௯௫ |
| சுத்தசாவேரி | ௮௬-௮௯ |
| சுப்பிரதீப | ௭ |
| சுருட்டி | ௧௭-௧௨0-௧[illegible]௫ |
| செஞ்சுருட்டி | ௩௩-௪௩ |
| சைந்தவி | ௪௫ |
| சௌராஷ்டிரம் | ௧௩௫-௧௫௫-௧௬௩-௧௬௬-௧௭௨-௧௮௧ |
| | ௧௮௨ |
| ஜங்கலா | ௧௨௬ |
| ஜயந்தஸ்ரீ | ௩௩ |
| ஸ்ரீராகம் | ௬௨ |
| தர்பார் | ௧௨-௧௬௧ |
| தன்னியாசி | ௪௬ ௬௮-௧௫௮-௧௭௫ |
| தீனசங்கரா பரணம் | ௧௩௩ |
| துசாவந்தி | ௨-௨௭ |
| தேசமுகாரி | ௧௫ |
| தேசிகதோடி | ௧௪-௧௩௭ |
| தேவ காந்தாரி | ௧ |
| தேவமனோகரி | ௮௭-௧௪௯ |
| தோடி | ௭0-௭௨-௭௬-௧0௭-௧௩௮ |
| நாகத்தொனி | ௯௯ |
| நாதநாமக் கிரியை | ௧0-௪௫-௫0-௧௧௩-௧௪௭-௧௯௪-௧௬௮-௧௮௮ |
| நீலாம்புரி | ௬௭ |

| இராகம் | கீர்த்தனைகளின் இலக்கம் |
|---|---|
| பங்களா | ௮௫ |
| பந்து | ௧0௬ |
| பந்துவராளி | ௫௧-௧௫௯ |
| பரஸ் | ௮-௫௮-௯௫-௮௨-௯௨-௧௯௧ |
| பலஹம்சா | ௯௩ |
| பியாகடே | ௩0-௭௫-௧௭௪ |
| பியாகு | ௧௮-௬௪-௧0௩-௧௧0-௧௩௪-௧௭௬ |
| பிலகரி | ௧௨௮-௧௮௩ |
| புன்னாக வராளி | ௩௪-௧௨௫-௧௬௫-௧௯0 |
| பூபாளம் | ௬௬ |
| பூரணகௌளை | ௬ |
| பூரணச்சந்திரிகை | ௧௨௭ |
| பூரிகல்யாணி | ௮௧-௯௮ |
| பைரவி | ௧௬-௧௧௨-௧௨௨-௧௭௧ |
| மத்தியமாவதி | ௪௮-௫௩ |
| மணிரங்கு | ௧௧ |
| மனோகரம | ௧௩௬ |
| மாஞ்சி | ௪௪ |
| முகாரி | ௨௪-௭௧-௧௭0-௧௮0 |
| மோகனம் | ௬-௪௭-௧௨௧-௧௨௩-௧௬௯-௧௭௭-௧௮௯ |
| யமுனா கல்யாணி | ௨௧ |
| ரீதிகௌளை | ௭௮ |
| லலிதா | ௭௯ |
| | ௧௯0 |

# சர்வசமயசமரசக்கீர்த்தனைகளின்

# பலபிரிவுகள்.

| விபரம். | கீர்த்தனைகளின் இலக்கம். |
|---|---|
| தேவதோத்திரக்கீர்த்தனைகள் | ௧-முதல் ௧௩௮ வரையில் |
| ஈசுரவருடப்பஞ்சத்தைப்பற்றி | ௧௨௯ |
| *ஹிதோபதேசக்கீர்த்தனைகள் | ௧௪௦-முதல ௧௬௧ வரையில |
| ? உத்தியோகசம்பந்தக்கீர்த்தனைகள் | ௧௬௨-முதல் ௧௭௫ வரையில் |
| *குடும்பசம்பந்தக்கீர்த்தனைகள் | ௧௭௬-முதல் ௧௯௨ வரையில் |

## ஹிதோபதேசக்கீர்த்தனைகளின் விபரம்.

| விபரம். | கீர்த்தனைகளின் இலக்கம். |
|---|---|
| கடவுளைத்தியானிக்கும்படி வற்புறுத்தல் | ௧௪௦ ௧௪௧ ௧௪௨ |
| துர்க்குணங்களைவெளியிடல் | ௧௪௩. |
| மனமயக்கந்தவிர்த்தல் | ௧௪௪. |
| நற்புத்திகூறல் | ௧௪௫. |
| நித்தியானந்தந்தேடல் | ௧௪௬. |
| கள்ளஞானம் | ௧௪௭. |
| பொருளாசையொழித்தல் | ௧௪௮. |
| செல்வச்செருக்கு | ௧௪௯ |
| உலகவாழ்வைவெறுத்தல் | ௧௫௦. |
| உடலைவெறுத்தய் | ௧௫௧. |
| பணதூஷணை | ௧௫௨. |
| பரஸ்திரீகமனம்விலக்கல் | ௧௫௩.௧௫௪.௧௫௫. |
| உய்யும்வழி | ௧௫௬. |
| நெஞ்சொடுபிணங்கல் | ௧௫௭. |
| துர்க்குணம்போன்ற நற்குணங்கள் | ௧௫௮. |
| மனவஞ்சகத்தைப்பற்றி | ௧௫௯. |
| மனமயக்கம் | ௧௬௦. |
| காலதூஷணை | ௧௬௧. |

## உத்தியோக சம்பந்தக் கீர்த்தனைகளின் விவரம்

| விபரம். | கீர்த்தனைகளின் இலக்கம். |
| --- | --- |
| நியாயபரிபாலனஞ்செய்ய வரம்வேண்டல் | கசுஉ. |
| துர்வழக்காளிகளைப்பற்றி | கசுங. |
| உத்தியோகசங்கடம் | கசுச. கசுரு |
| பெரியதுரையாகிய கடவுளுக்கும் மனுஷ துரைகளுக்கும் உள்ளபேதம் | கசுசு. |
| கோட்சொல்லுமுத்தியோகஸ்தர்களைப்பற்றி | கசுஎ. |
| சுவாமியைநினைக்கநேரமில்லையென்றுமுறை | கசுஅ. |
| உத்தியோகத்தைவெறுத்தல். | கசுகூ. |
| துன்பத்துக்கஞ்சாமை | கஎ0. |
| பிறர்மேற்குறைகூறாமை | கஎக. |
| பரிதானகண்டனம் | கஎஉ. கஎங. கஎச. |
| பிரபுத்துவதூஷணை | கஎரு. |

## குடும்பசம்பந்தக்கீர்த்தனைகளின் விபரம்.

| விபரம். | கீர்த்தனைகளின் இலக்கம். |
| --- | --- |
| தாய்தந்தையரைநமஸ்கரித்தல் | கஎசு. |
| தகப்பன்மகனுக்குப்புத்திகூறல் | கஎஎ. |
| தகப்பன்மகளுக்குப்புத்திகூறல் | கஎஅ. |
| உத்தமஸ்திரியின்லக்ஷணம் | கஎகூ. |
| பெண்பார்க்கத்தூதனுப்புதல் | கஅ0. |
| தூதன்பெண்பார்த்துவந்துசொல்லல் | கஅக. |
| தலைவியிடத்துவைக்கவேண்டிய நேசத்தைப் பற்றித் தலைவன்கூறுதல் | கஅஉ. |
| தலைவனுடையமேன்மையைத்தலைவிதோழிக்குக்கூறுதல் | கஅங. |
| துன்பஞ்செய்தாலுந் தலைவனேகதியென்று தலைவிதோழிக்குச்சொல்வது | கஅச. |
| தலைவன்செய்தநன்மையைத்தலைவிகூறுதல் | கஅரு. |
| மாமிநாத்திமுதலானவர்களின்கொடுமையைப்பற்றி ஒருஸ்திரிமுறையிடல் | கஅசு. |
| கணவனைப்பகைத்தஸ்திரீயை அவள்தாய் கண்டித்தல் | கஅஎ. |
| தங்களுக்குப்படிப்பிக்கும்படி ஸ்திரீகள புருஷர்களைவேண்டுதல் | கஅஅ கஅகூ. |
| முடனைவிவாகஞ்செய்யாதபடி ஒருஸ்திரீயைத்தடுத்தல் | ககூ0 |
| மைத்துனர்கலியாணத்திற்பாடிய பரிகாசக்கீர்த்தனை | ககூக |
| மைத்துனருக்குப் புத்திபோதித்தல் | ககூஉ. |

